# கல்கி






KALKI பிப்ரவரி ௨7.1955 4 அணா



## ருசிமிக்க சாப்பாட்டை தயாரித்திருந்தேன் ... எப்படி என்று எனக்கே தெரியவில்லை!

என்றும்போல்தான் சாப்பாட்டு வேளையில் இன்றும் அமளி. எல்லோரும் ஒருவாறாக அமர்ந்ததும் சாப்பாட்டைப் பரிமாறினேன். அப்போதுதான் ஒரு அதிசயம் நடந்தது. ஒரே நிசப்தம். ஒரு சாப்பாட்டுப் போட்டி நடப்பதுபோலிருந்தது. இத்தகைய மாறுதலேற்பட நான் என்னதான் செய்தேன்!

என் கணவரும் குழந்தைகளும் எப்பொழுதுமே என் சமையலில் குற்றம் கண்டுபிடிப்பார்கள். இன்று ஏனோ ஒருவரும் ஒரு வார்த்தைகூட பேசவில்லை. சாப்பாட்டிற்கு பிறகு காலையில் என்ன சாமான்கள் வாங்கினேன் என்று நினைத்துப்பார்த்தேன். அதே காய்கறிகள்தான் ... அதே பருப்பு, உப்புத்தான் ... ஹாங்! ஞாபகத்துக்கு வந்து விட்டது. புதிதாக ஒன்று வாங்கத்தான் செய்தேன்!

அன்று காலையில்தான் டால்டா வனஸ்பதி உபயோகித்துப் பார்க்கலாம் என்று திட்டமிட்டேன். கடைக்காரர் பொரிக்கவும், வறுக்கவும், தித்திப்புப் பண்டம் தயாரிக்கவும் ஏற்ற சிறந்த தாவரக் கொழுப்பு என்று அதை சிபார்சு செய்தார். அவர் டால்டா டின் ஒன்றை தந்தவாறு, "உணவின் இயற்கை ருசியை இது பரிமளிக்கச் செய்கிறது. அதனால் உங்கள் வீட்டில் எல்லோரும் சாப்பாட்டை ரசிப்பார்கள்" என்றார்.

ஆம். இந்த மாறுதலுக்குக் காரணம் கட்டாயம் டால்டா வனஸ்பதியில் சமைத்ததுதான். அது எல்லாவித சமையல்களுக்கும் சிறந்தது. அன்றியும் ஞாபகமிருக்கட்டும்—சமையல் கொழுப்பை சில்லறையாக கடையில் வாங்குவது ஆரோக்யத்திற்கு கெடுதல் விளைவிக்கலாம். மிகவும் விலையுயர்ந்த கொழுப்பும் கலப்படமாகவும், ஈ, அழுக்கு இவைகள் காரணமாக அசுத்தமானதாகவுமிருக்கலாம். காற்றுப்புகாத சீல்செய்த டின்னில் கிடைக்கும் டால்டா வனஸ்பதி எப்பொழுதும் புத்தம் புதிதாகவும், சுத்தமாகவும், ஆரோக்யமளிப்பதாகவுமிருக்கிறது. மேலும் இது லாபகரமானது. மறுமுறை சாமான்கள் வாங்க கடைக்குச் செல்லும்பொழுது டால்டா வனஸ்பதியை உங்கள் ஜாபிதாவின் முதலில் குறித்துக்கொள்ளுங்கள்!

10, 5, 2, 1, ½ பவுண்டு டின்களில் கிடைக்கிறது.
டால்டா வனஸ்பதியில் இப்பொழுது விடமின் 'ஏ', 'டி' இருக்கிறது.

ஊட்டமளிக்கும் உணவை உங்கள் குடும்பத்ினருக்கு அளியுங்கள்.

இலவச ஆலோசனைகளுக்கு இன்றே எழுதுங்கள்:
தி டால்டா அட்வைஸரி ஸர்வீஸ்
தபால் பெட்டி நெ. 353, பம்பாய் 1




மர அடையாளமுள்ள டின்னைப் பார்த்து வாங்குங்கள்.

# டால்டா வனஸ்பதி

சிறந்த சமையல் — குறைந்த செலவு

HVM. 218-50 TM

# கல்கி
## தில்லி சினிமாக் கலை அரங்கு மலர்
## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

மலர் 14     இதழ் 31




தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

# தமிழுக்கு யோகம்

இந்த ஆண்டு தமிழ் எழுத்தாளர் மகாநாடு சென்னையில் கூடிய நேரம் ஒரு நல்ல தமிழ் ஓரை என்றுதான் சொல்ல வேண்டும். மகாநாட்டைத் தொடர்ந்து ஒரு வாரமாக ஒரே தமிழ் முழக்கமாகச் சென்னையிலே முழங்கிக் கொண்டிருந்தது.

சென்னைத் தமிழ் எழுத்தாளர் மகாநாட்டில் தமிழை ஆட்சி மொழியாக்குவது சம்பந்தமான திட்டத்தை வகுக்க ஒரு கமிட்டியை நியமித்தது மிக நல்ல காரியம் ஆயிற்று.

இம்மாதம் பத்தொன்பதாம் தேதி தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் பரிசளிப்பு விழாவில் பேசிய அறிஞர்கள் அனைவரும் இந்த விஷயத்தையே மேலும் வற்புறுத்திக் கூறியிருப்பது தமிழின் எதிர்காலத்துக்கு ஒரு நல்ல சகுனமென்று கருதுகிறோம்.

தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் பரிசளிப்பு விழாவில் பேசிய கல்வி அமைச்சர் திரு சுப்ரமண்யம் அவர்கள் ஒரு முக்கிய விஷயத்தை அழுத்தமாக வெளியிட்டார். "சில அரசியல் வாதிகள் சொல்லுகிறபடி சட்டசபைகளில் தமிழில் பேசுவதால் மட்டும் தமிழ் வளர்ச்சி ஏற்பட்டு விடாது. பள்ளிக்கூடங்களிலும் கல்லூரிகளிலும் தமிழே போதனாமொழி யாகும் போதுதான் தமிழ்மொழி வளர்ச்சியடையும். சர்வ கலாசாலைப் பொறுப்பிலுள்ள வர்கள் இதற்கு வழி செய்ய வேண்டும். அவர்கள் செய்யாவிட்டால் சர்க்கார் தலையிட்டுத் தான் ஆகவேண்டும். இதில் மக்களுடைய பூரண ஆதரவும் சர்க்காருக்கு இருக்கும்" என்று கல்வி அமைச்சர் குறிப்பிட்டபோது அங்கு கூடியிருந்த ஆயிரக் கணக்கான தமிழர்கள் பலத்த கரகோஷத்துடன் உற்சாக மாகத் தங்கள் ஆதரவை வெளியிட்டார்கள்.


கல்வி அமைச்சர் சுப்ரமண்யம்

செயலாற்றும் திறமையிலும் உறுதியிலும் சிறந்த நமது கல்வி அமைச்சர் சொன்ன இந்தக் கருத்தைப் பின்னர் பேசிய திரு பாலசுப்ரமண்ய அய்யரும் அழகாக ஆதரித்துப் பேசினார். தாய்மொழியில் பேசினால்தான் உள்ளத்திலுள்ள எண்ணங்கள் சரளமாக வெளிவரும் என்றும், ஒத்திப் போடாமல் சட்ட சபை நடவடிக்கைகளையும் தமிழிலேயே நடத்த ஆரம்பிக்க வேண்டும் என்றும் அவர் சொன்ன போது வளரும் தமிழுக்கு நல்ல காலம் வந்து விட்டது என்று துலாம்பரமாகத் தெரிந்தது!

அன்று பேசிய பேராசிரியர் திரு ரா. பி. சேதுப் பிள்ளை அவர்களும் "விஞ்ஞானத்தைத் தமிழில் கற்பிக்கத்தான் சொற் களை ஆக்கி ஆகவேண்டும் என்று சொல்கிறார்கள்: இந்திய சரித்திரத்தையுங் கூட ஆங்கில மொழியில்தானா கற்பிக்க வேண் டும்? அதற்குமா சொற்களை ஆக்கவேண்டி இருக்கிறது?" என்று ஆணித்தரமாகக் கேட்டுச் சபையோரை ஆரவாரத்தில் ஆழ்த்தினார்.

"தமிழை ஆட்சி மொழியாக்குவதில் நிதானமும் தீர்க்க தரிசனமும் வேண்டும்" என்று எப்பொழுதுமே எச்சரித்து வருகிற நமது தலைவர் ராஜாஜி, இம்மாதம் இருபதாம் தேதி எதிராஜ் கல்லூரியில் குறிப் பிட்ட ஒரு விஷயத்தையும் இங்கே நினைவு படுத்திக் கொள்வது மிகக அவசியமாகும்.

"ஆங்கிலம் இதுவரை நமக்கு ஒரு மாற்றாந்தாயாக விளங்கி வந்திருக்கிறது. பல்கலைக் கழகங்களின் பழைய நிபுணர்கள் இந்த அருமை மாற்றாந்தாய்க்கு இப்போது ஆபத்து வந்துவிட்டதாக நினைக்கிறார்கள். ஆனால் தேச பக்தியும் சூழ்நிலையும் சேர்ந்து, இப்பொழுது தாய்மொழிக்கு முக்கியம் தந்து வருகிறது என்ற உண்மையையும் இவர்கள் உணர்ந்தே வருகிறார்கள். கலை வளர்ச்சியும் மொழி வளர்ச்சியும் ஒன்றாகவே நடந்து வந்ததால், விஷயங்களை ஆங்கிலம் மூலம் வெளியிடுவதில் கஷ்டமில்லை. ஆனால் இந்திய மொழிகள் அங்ஙனமில்லாது எட்டி நின்று விட்டதால் கஷ்டமேற்படுகிறது. நம்முடைய தினப்படியான காரியங்களைத் தமிழிலேயே நடத்தி எல்லா விஷயங்களுக்கும் தமிழை உபயோகப் படுத்திவிட்டால் இந்தக் குறை நீங்கும்" என்றார்.

ராஜாஜி அடிக்கடி ஒரு உண்மையை அழகாகச் சொல்வதுண்டு. "ஒரு பாஷை யென்பது கறவைப் பசுவைப் போல! தவிடும் பிண்ணாக்கும் வைக்க வைக்கப் பால் சுரக்கும். அது போல மொழிக்கு கருத்துக்களையும் உபயோகத்தையும் ஊட்ட ஊட்ட அது வளம் சுரக்கும்."

இந்த உண்மையை நமது கல்வி நிபுணர்கள் உணர வேண்டும்.

அரசாங்கம் தமிழை ஆதரிக்கிறது. பேராசிரியர்கள் ஆதரிக்கிறார்கள். தமிழ் எழுத்தாளர்கள் ஆதரிக்கிறார்கள். சட்ட சபையிலும் பல்கலைக் கழக நிர்வாக சபையிலும் ஆதரிக்கிறார்கள். நமது பெருமைக்குரிய சென்னைப் பல்கலைக் கழகத் தலைவர் டாக்டர் ஏ. லக்ஷ்மணசாமி முதலியார் கூட விசாரித்துப் பார்த்தால் ஆதரிப்பதாகவே சொல்வார். அப்படியானால் ஏன் நந்தி விலக மறுக்கிறது!

# ஏன் தமிழ் கூடாது?

புதிய கலை ஞானக் கருத்துக்களையும் உண்மைகளையும் வெளியிடுவதற்குப் பரிபாஷைச் சொற்கள் தமிழில் இல்லை என்பது ஒரு குறையாகச் சொல்லப் படுகிறது. ஆங்கில பாஷையில் வழங்குகிற கலைச் சொற்கள் எல்லாம் ஆங்கிலேயர்களின் பிதுரார்ஜிதமா! ட்ரிக்னமெட்ரி, அல்ஜிப்ரா, ஜியாக்ரபி இவைகளெல்லாம் ஆங்கிலச் சொற்களா! ஆங்கிலேயர்கள் தங்கள் கல்லூரிகளில் கலைகளைக் கற்பிக்க இவற்றிற்குச் சொற்களைத் தேடி அலைந்து காலத்தை வீணாக்கினார்களா! இன்னும் பார்க்கப் போனால் "மோட்டார் டிரைவர்களும் க்ளீனர்களும் கலைச் சொற் கழகத்தின் உதவியில்லாமலே மோட்டாரை ஓட்டியும் பழுது பார்த்தும் விடுகிறார்கள். முன்னேறிய நாடெல்லாம் வாழ்க்கைக்கும், பொருள் விருத்திக்கும், சாலைத் தொழில்களுக்கும் ஸையன்ஸைத் தாராளமாக உபயோகப்படுத்திக் கொண்டிருக்கும் பொழுது நாம் சாவகாசமாக பிரதிபதங்களைத் தேடிக்கொண்டிருக்கிறோம். பெயர்வைக்க மறந்து போனதால் பதினெட்டு வயதுப் பையனைத் தொட்டிலிலேயே கிடத்தி வைத்த கணக்குத் தான்!" என்று நமது டி. கே. சி. அவர்கள் தம் தனிப் பாணியில் சொல்லுவது வழக்கம்.

முழுத் தமிழிலேதான் எல்லாக் கருத்துக்களையும் வழங்க வேண்டும் என்று மனப்பூர்வமாக சர்வகலாசாலை கருதுமானால் அந்த விஷயத்தில் அது என்ன ஆக்க முயற்சியை இதுவரை செய்து சாதித்திருக்கிறது என்று கேட்கிறோம்.

கல்லூரி நிலையில் கலைகளைத் தமிழில் கற்பிப்ப தென்றால், அதற்குப் பயிற்சி பெற்ற ஆசிரியர்கள் இல்லையே என்று ஒரு சாக்கு கூறப்படுகிறது. விஷயத்தைப் பூரணமாகக் கிரகித்துக் கொண்ட ஒரு ஆசிரியருக்கு அதை வெளியிடுவதற்கு உரிய கலைச் சொற்களைப் படித்துக் கொள்ள எத்தனை காலம் ஆகி விடும்! கிளிப் பிள்ளையைப் போல் படித்த வார்த்தைகளையே — விஷயத்தை யல்ல, வார்த்தைகளையே—திருப்பிச் சொல்லும் ஒருவர்க்கு இது கஷ்டமாக இருக்கலாம். பொருளைப் புரிந்துகொண்டவருக்கு ஒரு சிறு குழந்தையிடம் கூட அதற்குப் புரிகிற முறையிலே விளக்கக்கூடிய ஆற்றல் இருக்கும். அந்தந்த விஷயத்தில் அவருக்குள்ள பிடிப்பைப் பொறுத்தது அது. கலைகளைப் புரிந்து கொண்ட ஆசிரியர்கள் அவற்றிற்குரிய சொற்களை ஒரு கோடை விடுமுறைக்குள் கற்றுத் தேர்ந்து விடலாம். ஆராய்ந்து பார்த்தோமானால், தமிழில் கலைகளை வெளியிட முடியாது என்று சொன்ன காலம் இப்போது மலையேறி விட்டது.

"சொல்லவும் கூடுவ தில்லை—அவை
சொல்லும் திறமை தமிழ்மொழிக்கில்லை
மெல்லத் தமிழினிச் சாகும்—அந்த
மேற்கு மொழிகள் புவிமிசை ஓங்கும்
என்றந்தப் பேதை உரைத்தான்"

என்று கவியரசர் பாரதியார் மனம் புழுங்கிய காலம் இன்று மறைந்து விட்டது.

'தமிழில் முடியுமா!' என்ற கேள்விக்கு விடையாகத் தமிழிலே பல அழகிய விஞ்ஞான நூல்கள் எழுதி முடிந்திருக்கின்றன. எனவே,

"இந்தப் பெரும்பழி தீரும்—புகழ்
ஏறிப் புவிமிசை என்று மிருப்பேன்"

என்று தமிழன்னை பாரதியாரின் வாயிலாகக் கூறிய வாக்கு தீர்க்க தரிசனமான வாக்குத்தான்: இடையில் ஏற்படுகிற எதிர்ப்புக்கள் எல்லாம் ஒரு அர்த்தமற்ற குழப்பம்.

பாரதியாரின் இந்தக் கனவு அவருடைய மற்றக் கனவுகளைப் போலவே பூரணமாக நனவாகும் காலம் தொலைவில் இல்லை. கடந்த ஒரு வாரமாக நடந்த இந்தத் தமிழ் முழக்கங்கள் எல்லாம் இந்த நல்ல காலத்தின் வருகைக்கே கட்டியங் கூறுகின்றன. "சற்றே விலகி யிரும் பிள்ளாய்!" என்று தெய்வத்தின் குரலாக மக்கள் சமுதாயத்தின் குரல் பலித்தே தீரும் என்பதில் சந்தேகமில்லை.

# வினோபாவின் கண்டனம்

"ஜெர்மனியை நாசம் செய்து பிரிட்டன் வாழ முடியாது; பிரிட்டனை நாசம் செய்துஜெர்மனி வாழ முடியாது. போர்த் தளவாடங்களைத் தூர எறிந்துவிட்டுச் சமரச வழியை நாடுங்கள்."

இவ்வாறு, இரண்டாவது உலக மகாயுத்தம் 1939ம் ஆண்டில் ஆரம்பமானபோது மகாத்மா காந்தி வின்ஸ்டன் சர்ச்சிலுக்கும் அடால்பு ஹிட்லருக்கும் ஆலோசனை கூறினார். ஆனால், அந்த யோசனை போர் வெறி பிடித்த தலைவர்களின் செவிகளில் ஏறவில்லை. இறுதியில் ஜெர்மனி நாசம் அடைந்தது. பிரிட்டன் அழியா விட்டாலும் அதன் பலமும் செல்வாக்கும் பன்மடங்கு குறைந்துவிட்டன. இன்று அமெரிக்காவின் பக்க பலமின்றி பிரிட்டன் வாழ முடியாது என்ற நிலைமை ஏற்பட்டிருக்கிறது. மறுபடி ஜெர்மானியர்கள் ஆயுத பலத்துடன் மேலோங்க அப்போது அவர்களை எதிர்த்த கூட்டத்தினருக் குள்ளேயே இப்போது முயற்சி நடந்துகொண்டு வருகிறது.

அணுகுண்டு யுத்தத்தில் அழிந்து விடாமல் பாதுகாப்பதற்காக நியூயார்க் பட்டணத்தில் பைபிள் வேதப் புத்தகத்தை வெகு ஆழத்தில் புதைத்திருக்கிறார்கள் என்றும், இலங்கையில் உள்ள பௌத்தர்கள் புத்த வேதத்தைத் தாமரத் தகடுகளில் எழுதி வெகு ஆழத்தில் புதைத்து வைக்கத் தீர்மானித் திருக்கிறார்கள் என்றும்

கேள்விப்பட்டு விநோபாபாவே அவர்கள் இந்த வாரத்தில் சொன்னதாவது :

"'கத்தியை எடுத்தவன் கத்தியினாலேயே அழிவான்' என்று பைபிள் வேதம் கூறுகிறது. 'பகைமையால் பகைமையை எக்காலத்திலும் அழிக்க முடியாது' என்று திரிபீடகா (பௌத்த வேதம்) கூறுகிறது. அணுகுண்டு, ஹைட்ரஜன் குண்டுகளைக் கடலில் புதைத்து விடுங்கள் என்று ராஜாஜி கூறினார். அவ்விதம் செய்வதற்குப் பதிலாக இவர்கள் தங்களுடைய வேதப் புத்தகங்களைப் பூமியில் புதைத்து வருகிறார்கள். அணுகுண்டு யுத்தப் பிரளயம் வருமாயின், அந்த நூல்களைத் தோண்டி யெடுப்பதற்கு எவரும் இந்த உலகில் இருக்க மாட்டார்களே!"

# தில்லியிலே சினிமாக் கலை அரங்கம்

ஒரு காலத்தில் கலைகள் அறுபத்து நான்கு என்று சொல்லி வந்தோம். இன்றைய விஞ்ஞான உலகில் கலைகளின் எண்ணிக்கை சொல்லி முடியாத அளவுக்கு விரிந்து கொண்டே போயிருக்கிறது. எனினும், "அத்தனை கலைகளும் சினிமாக் கலை ஒன்றினில் அடக்கம்" என்று சொல்லலாம்.

மக்கள் வாழ்க்கையில் மிக முக்கியம் பெற்று விட்ட இந்தக் கலையில் பாரத சர்க்கார் சிரத்தை காண்பித்திருப்பது இயல்பே.

பாரத சர்க்கார் கல்வி இலாகாவின் சார்பில் சங்கீத நாடக அகாடமி என்றோர் கலைக் குழுவை யமைத்துப் பாரத நாட்டுக் கலைகளின் வளர்ச்சிக்குப் பாடுபட்டு வருகிறார்கள் அல்லவா! இதன் தலைவர் நமது பிரதம நீதிபதி ஸ்ரீ பி.வி. ராஜமன்னார். இந்த சங்கீத நாடக அகாடமியார், இப்பொழுது சினிமாக் கலையில் பாரத நாடெங்கிலும் ஈடுபட்டுள்ளவர்களை வரவழைத்துத் தங்கள் கலை சம்பந்தமாக ஏற்பட்டுள்ள பிரச்னைகள், அதற்கான பரிகாரங்கள், எதிர்காலத் திட்டங்கள் ஆகியவற்றைச் சர்ச்சை செய்து கொள்ள ஒரு வாய்ப்பு ஏற்படுத்தியுள்ளார்கள். இந்த சினிமாக் கலை அரங்கை இம் மாதம் 27-ம் தேதி நமது பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேரு ஆரம்பித்து வைக்கிறார்.

இவ் விவாத அரங்கின் திட்டங்களை யெல்லாம் வகுக்கும் கமிட்டியின் தலைவராக, மத்திய சர்க்கார் உதவி மந்திரி ஸ்ரீ நித்யானந்த கானுங்கோ பணியாற்றி வருகிறார். சினிமாச் சரித்திரத்திலே மிக முக்கியமான ஸ்தானத்தைத் தமது விடா உழைப்பால் பெற்று விட்ட பி. என். சர்க்கார் விவாத அரங்கின் தலைவர். செய்தி ஒலிபரப்பு இலாக்கா மந்திரி டாக்டர் பி. வி. கேஸ்கரும், நீதிபதி ராஜமன்னாரும் பேசுகிறார்கள் என்று அறிகிறோம்.

இவ்வரங்கு ஒரு வாரம் நடக்கும். அரங்கில் பம்பாய், கல்கத்தா முதலிய பெரிய நகரங்களிலிருந்தெல்லாம் பிரதிநிதிகள் கலந்து கொள்ளுகிறார்கள். சென்னையிலிருந்து ஸ்ரீ எஸ். எஸ். வாஸன், ஸ்ரீ பி. என். ரெட்டி முதலியோர் கலந்து கொள்ளுகிறார்கள்.

வடநாட்டுக் கலைஞர்கள், தயாரிப்பாளர்களில், வி. சாந்தாராம், கே. ஏ. அப்பாஸ், பிருதிவிராஜ் கபூர், பங்கஜ் மல்லிக், ஜகத்நாராயணன், தேவகி போஸ் மற்றும் பலரும் கலந்து கொள்ளுகிறார்கள். ஹிந்தி மொழியில் புகழ் வாய்ந்த கவிஞரான ஸ்ரீ நரேந்திர சர்மாவும் கலந்து கொள்கிறார்.

மேற்படி விவாத அரங்கு ஏற்பாடுகளை யெல்லாம் மிகவும் ஊக்கத்துடன் கவனித்துக் கொண்டு வருகிறவர்கள் ஸ்ரீமதி தேவிகா ராணியும் ஸ்ரீ பிருத்வி ராஜும்.



வங்கநாட்டு டைரக்டர் ஸ்ரீ தேவகிபோஸ்.

ஸ்ரீமதி தேவிகாராணி பழம் பெரும் கலைக்குடும்பமாகிய அமரகவி ரவீந்திரநாத் டாகூரின் வம்சத்தில் தோன்றியவர். இருபது ஆண்டுகளுக்கு முன்பே "அச்சுத் கன்யா" என்ற ஹிந்தி படத்திலும், "கர்மா" என்ற ஆங்கிலப் படத்திலும் தோன்றி வெகு அழகாக நடித்துப் புகழ் பெற்றார். அன்று எப்படி "கர்மா" என்ற படத்தில் தோன்றி ஒளி வீசினாரோ அந்தத் தோற்றத்தையே இவ்வார இதழின் அட்டையில் வெளியிட்டிருக்கிறோம்.

இவர் பத்திரிகையாளருக்கு இவ் விவாத அரங்கு சம்பந்தமாக அளித்த பேட்டியில், "இதன் முக்கிய நோக்கம் இக்கலை பாமர மக்கள் யாவருக்கும் பயன்படும்படி செய்வதும், பாரத நாட்டுக் கலைத் திறமையையும் பண்பாட்டையும் வளர்ப்பதும்தான்" என்று கூறியிருக்கிறார்.

நமது பாமர மக்களுக்கு நல்ல பயனும் பிரயோசனமும் அளிக்கும் வகையில் பாரத சர்க்கார் செய்திக் கதிர்ப் படங்களையும் எடுத்து வெளியிட்டு வந்தார்கள். தமிழ் மக்களின் துரதிர்ஷ்ட வசமாக, சினிமாப் படங்களைத் திரையிடும் பொறுப்பிலுள்ளவர்கள் சட்டத்தின் நுணுக்கத்தில் புகுந்து கொண்டு அவற்றைத் திரையிடாமலிருந்து வருகிறார்கள். எழுத்தறிவு குறைந்த இந்திய நாட்டில், பத்திரிகையிலே படித்து விஷயங்களைத் தெரிந்து கொள்பவரின் எண்ணிக்கை மிக மிகக் குறைவு. இவர்கள் எல்லாருக்கும் செய்திகளை அறிவிக்கவும் அறிவை வளர்க்கவும் காட்சி சாதனமாகிய திரைப்படமே பயன் அளிக்க வல்லது. இந்த நிலையில் செய்திக் கதிர்களையும் அறிவூட்டும் கல்விப் படங்களையும் நமது தென்னாட்டில் திரையிட மறுப்பது பெருந்தவறாகும். பொது மக்களுக்குச் செய்யும் பாதகமாகும்.

இந்த விவாத அரங்கின் பயனாக நல்ல சூழ்நிலை ஏற்பட்டு, மக்களுக்குப் பயன் தரும் படங்கள் எடுக்க நமது படத்தொழில் அதிபர்கள் முன் வருவார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

இரண்டு ஆண்டுகளுக்கு முன் ஒரு சித்திரக் கலைக் கண்காட்சியைத் திறந்து வைத்த ராஜாஜி, "மனிதனுடைய மனத்தைக் கெட்ட வழியில் செலுத்த உலகில் எத்தனையோ விஷயங்கள் இருக்கின்றன. சித்திரக் கலையை அந்தக் கீழ்த்தரமான உணர்ச்சிகளைத் தூண்டுவதற்குப் பயன்படுத்தாதீர்கள்! ஒவ்வொரு சித்திரமும் கலைத்தேவி சரஸ்வதியின் உறைவிடம்!" என்று கூறினார்.

இம் மொழிகளை சினிமாக் கலைஞர்களும், படாதிபதிகளும் நினைவு கூர்ந்து எதிர்காலத்தில் உழைக்க உறுதி செய்து கொண்டார்களானால் பாரதத்தின் புகழ் உன்னத நிலையை அடையும் என்பதில் ஐயமில்லை.

# நந்தி விலகுமா?




கல்லூரிகளில் தமிழையே போதனமொழியாக்க வேண்டும் என்ற கிளர்ச்சி வலுப்பெற்று வருகிறது. நாட்டை ஆளும் அமைச்

# வேற்றுமை வளர்கிறது!



பிரஜா-சோஷலிஸ்டு கட்சித் தலைவர்களின் வேற்றுமை நாளுக்கு நாள் பெருகி வருகிறது.

# இரட்டைக் குரல்!



இலங்கை சர்க்கார் பிரஜாவுரிமை மனுக்களை நிராகரித்துக் கொண்டே, இலங்கை குடியேற்றச் சட்டத்தைத் தளர்த்தி வருவதாகக் கூறுகிறார்கள்!

## டி. டி. கே.

சூழ்நிலை விரோதமாக இருந்தபோதிலும் நேருஜி அவர்கள் பெற்றிருக்கும் உள்ளமும் மதியும் மிகச் சுத்தமானபடியால் திரு டி. டி. கே. அவர்கள் விஷயம் நல்ல முடிவுக்கே வரும்போலத் தோன்றுகிறது. எந்தச் சிக்கலும் அவசரப்படாமல் சூடு ஆறவிட்டு ஆராய்ந்தால் நெகிழ்ந்து விடுவது இயற்கை. டி. டி. கே. அவர்களைப் பற்றி இப்போது நடக்கும் பேச்சுகள் திருப்திகரமாக முடியும் என்கிற செய்தி நமக்கும், தென்னிந்தியாவில் அனைவருக்குமே மகிழ்ச்சி தருகிறது.

## சோவியத் அறிக்கை

ருஷியா இந்த வாரத்தில் விடுத்திருக்கிற அறிக்கை அணுகுண்டு பிசாசுக்கு ஒரு முடிவு தந்தே விடும்போல் காணப்படுகிறது. ஒருவரை ஒருவர், வியக்திகளாயினும் சரி, சமூகங்களாயினும் சரி, சந்தேகப்பட்டுக் கொண்டே இருப்பது முட்டாள்தனமாகும். மனிதர்களை நம்பாமல் பிசாசுகளையே நம்பிக் கொண்டிருப்பது, நாகரீகத்துக்கு அடையாளமாகாது. "மேற்கு" வல்லரசுகள் இப்படியே போய்க் கொண்டிருந்தால் யார் நாகரிகத்தில் உயர்ந்தவர்கள் என்பதே மிக்க சந்தேகமாகிப் போகும். ஜர்மானிய மக்களுக்குப் படைச் சுதந்திரம் தருவது எதற்காக? சாந்தி நிறுவுவதற்காக. அப்படியானால், ருஷ்ய அறிக்கையை ஏற்றுக் கொண்டு சாந்திக்கு இன்றியமையாத காரியங்களை உடனே நிறைவேற்றி விட்டுப் பிறகு அநேக நாட்கள் காத்திருந்த ஜர்மானிய பிரச்னையை நிதானமாகவும் நன்றாகவும் ஆராயலாமே? இதுதான் புத்திசாலித்தனமும் நியாயமும். ஆனால் சிந்துபாத்து தோளின்மேல் உட்கார்ந்திருக்கும் பிசாசு எளிதில் கீழே இறங்குமா? நம்முடைய தலைவர் நேருஜிக்கு கீர்த்தி வளரவே இந்தச் சிக்கல்களெல்லாம் வந்து சேர்ந்திருக்கின்றனவென்று கருதலாம். முடிவில் உலகத்துக்குச் சமாதானமும் அதன் கூட பாரத நாட்டுத் தலைவருக்குப் பெரும் புகழும் வந்து சேர்ந்தால் நல்லதுதானே!

## விந்திய கவர்னரின் நல்லுரை

விந்தியப் பிரதேசத்தின் தலைநகரான ரீவாவில் உள்ள கல்லூரியின் மூன்றாவது பட்டமளிப்பு விழாவில் விந்தியப் பிரதேச கவர்னர் ஸ்ரீ க. சந்தானம் கருத்து நிரம்பிய ஒரு அழகிய சொற்பொழிவு நிகழ்த்தியிருக்கிறார். கல்லூரிகளின் சூழ்நிலை மாற வேண்டுமென்று கூறிய சந்தானம் அவர்கள், பக்திக் கண்ணோடு நோக்கும் மனப் பான்மை ஏற்பட்டாலொழிய கல்லூரிப் படிப்பு வறட்டுப் படிப்பாக முடியுமென்று எச்சரித்திருக்கிறார். "ஒவ்வொரு காலத்திலும் மனித சமூகம் அதனுடைய ஆன்மிக, அரசாங்க, பொருளாதார, சமூதாயக் குறிக்கோளை வகுத்து நடத்தி உதவத் தலைவர்களை நாடுகிறது. இந்த சேவையை முன் காலத்தில் அந்தணர்களும் பௌத்த பிக்ஷுக்களும் ரோமன் கத்தோலிக்கப் பாதிரிகளும் செய்து வந்தார்கள். இடைக் காலத்தில் பண்ணையார்கள் இதைச் செய்தார்கள். சமீப காலத்தில் முதலாளி வர்க்கம் இதில் முனைந்திருக்கிறது. என்னுடைய கொள்கை என்னவென்றால் சமூகப் பொருளாதார அடிப்படையில் செல்கிற மக்களாட்சி முறையில், இனிமேல் கல்லூரி மாணவர்களே இந்த வழி வகுக்கும் பெரும்பணிக்கு உரியவர்கள் ஆவார்கள் என்பதே." இவ்வாறு குறிப்பிட்டிருக்கிறார் திரு க. சந்தானம்.

வழி வழி வரும் நமது சமய ஆதீனங்கள், அற நிலையங்கள் ஆகியவை இனி மக்கள் உலகில் ஆதிக்கம் செலுத்த இடமில்லை. ஏனென்றால் அவற்றின் மனப்பான்மை இன்று செல்லாகி விட்ட காரியம்.



விந்திய கவர்னர்
க. சந்தானம்

இந்தியாவில் முதலாளி வர்க்கமோ மிகச் சிறிது. அத்தனை தெம்பு அதற்கு இல்லை. பண்ணை முறையோ தூர்ந்து போய்விட்டது. இந்த நிலைமையில் இனி சமுதாயத்துக்கு வழிகாட்டி நின்று நடத்தும் பொறுப்பு கல்லூரிகளிலிருந்து புதிதாக வெளி வரும் மாணவர்களையே சாரும். எனவே இவர்கள் சமுதாயச் சிக்கல்களை அலசிப் பார்க்கும் திறமை உள்ளவராகவும், ஆணவம், குறுகிய மனப்பான்மை, அதிகார கர்வம் முதலிய குணக்கேடுகள் இல்லாதவர்களாகவும் விளங்க வேண்டும். இத்தகைய படித்த கூட்டத்தை உருவாக்கும் மகத்தான பொறுப்பு கல்லூரிகளின் கையில் இருக்கிறது. ஆயிரம் வருஷம் தேங்கிக் கிடந்த இந்திய சரித்திரம் இன்று வேகத்துடன் பொங்கிப் பாய்கிற கட்டத்தை அடைந்திருக்கிறது. முப்பத்தாறு கோடி இந்திய மக்களின் ஆதார சக்தி சரியான வழி வாய்க்காலில் பாய வேண்டுமானால் அதற்கு வழி வகுக்கிற படித்த சமூகம் பக்தியும் சிரத்தையும் நிரம்பியதாய்த் தன்னை உருவாக்கிக் கொள்ள வேண்டும். அத்தகைய பொறுப்பை நமது மாணவர்களுக்கு அருமையான முறையில், சரியான சந்தர்ப்பத்தில்

கினேவூட்டி யிருக்கிறார் ஸ்ரீ கே. சந்தானம். கல்லூரியிலிருந்து வெளியுலகுக்குச் செல்லும் மாணவர்களுக்குக் கூறப்பட்ட இந்த நல்ல அறிவுரையைக் கல்லூரியிலே புதிதாக நுழையும் மாணவர்களும், அவர்களை உருவாக்கும் ஆசிரியர்களும், கல்லூரிகளும், பல்கலைக் கழகங்களும்கூட என்றென்றும் மனத்தில் பதித்துக் கொள்ள வேண்டும். எதிர்கால பாரதம் இன்றைய மாணவர்கள் கையில் இருக்கிறது.

## கலைஞர்களுக்குப் பாராட்டு

'தேமதுரத் தமிழோசை உலகமெல்லாம் பரவும் வகை செய்தல் வேண்டும்' என்று பாடினார் மகாகவி பாரதியார். அக் கவியரசரின் கனவை நனவாக்கத் தாய் நாட்டிலிருந்து சேய் நாடாகிய இலங்கைக்குச் சென்றிருக்கிறார்கள் டி. கே. சண்முகம் குழுவினர். பல மாதங்களாக, அவர்கள் இலங்கை முழுதும் தேமதுரத் தமிழோசையைப் பரப்பி வருகிறார்கள், தங்கள் நாடகக் கலையின்வாயிலாக. அக் கலைஞர் குழுவினரின் கலைத் தொண்டைப் பெரிதும் பாராட்டி வியந்த இலங்கை மக்கள் அவர்களுக்குப் பெரிய பாராட்டு விழாவே நடத்தி விட்டார்கள். இலங்கை வெள்ளவத்தையிலுள்ள சைவ மங்கையர் கழகத்தில் பல கலைச் சங்கங்களின் ஆதரவில் நடந்த அந்தப் பாராட்டு விழாவுக்குத் திரு என். மாணிக்க இடைக்காடர் அவர்கள் தலைமை வகித்தார்கள். கலை அரசு திரு கே. சொர்ணலிங்கம், பேராசிரியர் கணபதிப்பிள்ளை, திரு அருணந்தி, வி. ஏ. கந்தையா, கே. பி, ஹரன் முதலியவர்கள் திரு டி. கே. சண்முகம் நாடக வளர்ச்சிக்குச் செய்துவரும் அருஞ்சேவையைப் பாராட்டிப் பேசினார்கள். கலைத் தொண்டுக்குப் பரிசாக வெள்ளிக் கேடயம் ஒன்றையும் வழங்கினார்கள். சேய் நாட்டினர், தாய் நாட்டிலிருந்து வரும் கலைஞர்களைக் கௌரவிப்பதில் சளைத்தவர்களல்லர் என்பதற்கு இக் கலைவிழா சிறந்த எடுத்துக் காட்டாகும்.



வெள்ளிக் கேடயம்

## இலங்கைத் தமிழரின் துயரம்

இலங்கைப் பிரஜா உரிமை கோரிய எட்டு லட்சம் இந்தியர்களின் மனுக்களில் இது வரை 1,30,339 பேர்களின் மனுக்களைத்தான் அதிகாரிகள் விசாரணைக்கு எடுத்துக் கொண்டார்கள். அவைகளில் 32,995 மனுக்கள் தான் அங்கீகரிக்கப் பட்டன. மற்ற 97,344 மனுக்கள் நிராகரிக்கப்பட்டு விட்டன. இதே ரீதியில் போய்க் கொண்டிருந்தால், எத்தனை லட்சம் இந்தியர்கள் அநாதைப் பிரஜைகளாகச் செய்யப் படுவார்களோ, தெரியவில்லை.

விஷயமற்ற சட்ட நுணுக்கமான காரணங்களைக் கூறிப் பல மனுக்கள் நிராகரிக்கப் பட்டுள்ளன. அதாவது முதல் எழுத்து சரியாக இல்லை, பெயரின் எழுத்துக் கூட்டுச் சரியாக இல்லை, பிரமாணப் பத்திரம் தாக்கல் செய்த முறை சரியாக இல்லை என்று கூறிப் பிரஜா உரிமை மனுக்களை இலங்கை அதிகாரிகள் நிராகரித்திருக்கிறார்களாம். யாதொரு சந்தேகமுமின்றிப் பிரஜா உரிமை பெறுவதற்குத் தகுதி யுள்ளவர்களின் கதியே இவ்விதமாயின், மற்றவர்களைப் பற்றிக் கேட்கவே வேண்டியதில்லை.

இதற்கு மாறாக, இந்திய ஹைகமிஷனரின் நடவடிக்கைகளைப் பார்க்கலாம்: — இந்தியப் பிரஜைகளாக விரும்புவோர் சமர்ப்பித்துள்ள மனுக்களில் ஒன்றைக்கூட இலங்கையிலுள்ள இந்தியா ஹைகமிஷனர் நிராகரிக்கவில்லை. சென்ற சில மாதங்களில் இலங்கைக்குள் சட்ட விரோதமாக 152பேர் பிரவேசித்ததாக இலங்கை சர்க்கார் கூறினர். இந்தியா ஹைகமிஷனர் உடனே அவ்விஷயத்தில் கவனம் செலுத்தி, அவர்களில் 151 பேர் இந்தியாவுக்குத் திரும்பிவர ஏற்பாடு செய்துவிட்டார். இவ்விதம் இந்திய சர்க்கார் இலங்கையிடம் தங்களுடைய நல்லெண்ணத்தையும் நேர்மையான போக்கையும் பல காரியங்களிலும் நிரூபணம் செய்து வருகிறார்கள். ஆனால், இலங்கை சர்க்காரோ தங்களுடைய நல்லெண்ணத்தைக் காட்ட உருவான காரியம் எதுவும் செய்யாதது வருந்தத் தக்கது.

## இலங்கை நீதிபதிகளின் தீர்ப்பை வரவேற்கிறோம்

சிவராத்திரி முடிந்து உதயமான திங்களன்று இலங்கை ஸுப்ரீம் கோர்ட்டு நீதிபதிகள், தருமத்தை உணர்ந்து நல்ல தீர்ப்பு ஒன்று கொடுத்து விட்டார்கள். ஹாட்டன் துரைசாமியின் வழக்கில் இலங்கை அதிகாரிகளின் நடவடிக்கையைச் சரியானபடி கண்டித்து ஏழைத் தமிழன் சொல்லுவதை ஒப்புக் கொண்டு அவன் கேட்டபடி இலங்கைப் பிரஜைகளுக்குள் அவனை உடனே சேர்த்துக் கொள்ளும்படி உத்தர விட்டார்கள்.

தலைகீழாக நடக்கும் புத்தி வேண்டாம். ஒரு மனிதன் தன் எண்ணத்தைப் பற்றிச் சொல்லுவதைத் தள்ளிவிட்டு அவன் உள்ளத்துக்குள் நீங்கள் ஊடுருவிச் சென்று சோதனை செய்யும் வேலை வேண்டாம் என்று ஆணித்தரமாக அதிகாரிகளுக்குச் சொல்லி விட்டார்கள். சத்யமேவ ஜயதே! இந்தத் தீர்ப்பையும் நிராகரித்து விட்டுக் குறுக்கு வழியில் சென்று அசத்தியத்தில் இறங்க வேண்டாம் என்று இலங்கை மந்திரிகளை நாம் வேண்டிக் கொள்ளுகிறோம்.

"நான் பெற்ற செல்வனை நான் பார்க்க முடியவில்லே. அவன் ஜமீன்தார் வீட்டிலே வளர்ந்தென்ன? என் வீடு சூன்யமாய்ப் போச்சு.

பிள்ளையைப் பார்க்கப் போனல் கழுத்தைப் பிடிச்சு வெளியே தள்ளி விட்டாங்க."




இப்பொழுது **சென்னை-வெலிங்டன். பிரபாத். சரஸ்வதி**
மூன்று தியேட்டர்களிலும் மற்றும் தமிழ்நாடெங்கும் நடைபெறுகிறது

# நல்ல ரஸிகர்கள் வேண்டும்!

**வி. சாந்தாராம்**

இப்பொழுதெல்லாம் இந்தியப் படங்களை வெகுவாகக் குறை கூறி வருகிறார்கள் நமது படித்த மக்கள். இந்தியக் கலாசாரத்தையே கெடுக்கக் கூடிய படங்களாக இந்தியப் பட முதலாளிகள் எடுக்கிறார்களாம். இவர்கள் கூறுவதை யெல்லாம் கேட்டால் இந்தியப் பட முதலாளி, பாரத சமுதாயத்தையே கெடுக்க வரும் 'வில்லனோ' என்று கூட ஐயம் எழும்! ஆனால் நமது பட முதலாளிகள் சில நல்ல உயர்தரமான படங்களையும் எடுத்திருக்கிறார்கள். அதை இந்தக் 'கிரிடிக்கு'கள் பார்த்துக்கூட இருக்க மாட்டார்கள்.

ஆம், நம் படங்களைக் குறை கூறுபவர்கள் பல்வேறு கோஷ்டிகளாக இருக்கிறார்கள். சிலர் எந்தப் புது விஷயத்தையும் அங்கீகரிக்க முடியாத பத்தாம் பசலி மனப்பான்மை கொண்டவர்கள். இவர்கள் சினிமாவையே பார்த்துக்கூட இருக்க மாட்டார்கள். இருந்தாலும் சினிமாக்களை நிந்திப்பதில் குறைவிராது.

இன்னும் சிலர் ரொம்ப நவ நாகரிகத்தில் முன்னேறியவர்கள். இவர்கள் என்ன செய்வார்கள்! நமது படங்களைக் கன்னா பின்னா என்று திட்டிவிட்டு, நமது படங்களை விடப் படுமோசமாக உள்ள ஹாலிவுட் படம் ஏதாவது ஒன்றைப் பார்த்துவிட்டு, அதைப் பாராட்டிக் கொண்டு வெளியே வருவார்கள். ஆகவே இப்படிப்பட்டவர்களுடைய அபிப்பிராயத்தை அபிப்பிராயம் என்று மதிக்க முடியுமா!

இவர்களைத் தவிர, இந்திய சினிமாக் கலையில் உண்மையான சிரத்தையும், திரைப்படம் எத்தகைய சக்தியைத் தன்னிடம் பெற்றிருக்கிறது என்ற உண்மையையும் நன்கு அறிந்தவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் அபிப்பிராயம் அந்தரங்க சுத்தியானது. அந்த அபிப்பிராயங்கள் பெரும்பாலும் சினிமாத் தொழில் வளர்ச்சிக்கு உதவுவதற்குப் பதில் பாதகமாகவே இருக்கிறது. மொத்தத்தில் பார்க்கப் போனால், 'கிரிடிக்கு'கள் யாருமே இந்திய சினிமாக் கலைக்கு உதவுபவர்களாகவும், ஊக்கப் படுத்துபவர்களாகவும் இல்லை என்று தான் தெரிகிறது.

பின், எப்பொழுதுதான் இந்திய சினிமாப் பட முதலாளி, கலையழகுடன், உண்மை வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் படங்களை எடுக்கப் போகிறார்! போட்ட பணத்துக்கு நஷ்டம் மேற்படாமல் என்றைக்குப் படம் எடுக்க முடிகிறதோ அன்றைக்குத்தான் பட முதலாளி எடுப்பார். ஆம், நல்ல படங்கள் எடுக்க வேண்டும் என்ற ஆர்வமுள்ளவர் கூட பொதுஜன ஆதரவில்லை என்றால் போட்ட பணத்துக்குப் பழுதில்லா வகையில் பாமர ரஞ்சகமான படத்தைத்தான் எடுப்பார். அவரும் உயிர் வாழ வேண்டுமல்லவா!

பாமரமக்களின் பாமர உணர்ச்சிக்கு ஏற்ற படங்களாக எடுக்கக் கூடாது. படத் தயாரிப்பாளர் கலை யுணர்ச்சியோடு உயர்தரமான படங்கள் எடுக்க வேண்டும் என்று சொல்லுவது சுலபம். ஆனால் பட முதலாளியால், அப்படியிருக்க முடியாது. ஏனெனில், சினிமா என்பது கலையாயினும், ஏராளமான பணத்தை முதலீடு செய்ய வேண்டிய தொழிலாக இருக்கிறது. லாபம் அளிக்காத படத்தை ஓயாமல் யாரும் எடுத்துக் கொண்டே இருக்க முடியாது.

தரம் அறிந்து பார்க்கும் ரஸிகர்கள், நல்ல படம் வேண்டும் என்று சொல்லுபவர்கள், 'நாங்கள் உங்களுக்கு உதவுகிறோம்' என்று சொல்லுவார்களேயானால் மேற்கண்ட பரிதாப நிலை ஏற்பட்டிராது. நமது பட முதலாளிகளிடமிருந்து நல்ல படங்களை விரும்புகிறார்கள் எனில், நாடெங்கும் இந்த ரஸிகர்கள் சங்கங்களும், குழுக்களும் அமைக்க வேண்டும். இச் சங்கங்கள் நல்ல படங்களுக்கு நல் ஆதரவு அளித்து நல்ல படங்கள் எடுப்பதற்கு உற்சாக மூட்ட வேண்டும். மட்டமான படங்களை ஒரேயடியாய்ப் புறக்கணிக்க வேண்டும்.

கெட்ட படங்களுக்கு ஆதரவளிக்கா திருப்பதற்குச் சினிமா பார்க்கும் ரஸிகனுக்கு எவ்வளவு உரிமையுண்டோ அவ்வளவு நல்ல படங்கள் பார்ப்பதற்கும், அதற்கு ஆதரவு தேடி அளிப்பதற்கும் உரிமையுண்டு. இவ்விஷயத்தைச் சினிமா ரஸிகர்கள் வலியுறுத்திச் சொல்லவில்லை எனில், படம் எடுப்பவர் நல்ல படம் எடுக்க விரும்பினாலும் கூட போதிய வெற்றியடைய மாட்டார். போதிய ஆதரவு கிடைக்காத காரணத்தால் வெற்றி கிட்டுவதும் சந்தேகந்தான். இன்று மட்ட ரகமான படங்கள் எடுக்கப்படுகிறது என்றால் அதற்கு ரஸிகர்களும் காரணம் என்று சொல்லத் தேவை இல்லை. படம் பார்ப்பவர்களுக்கு இந்த விஷயம் தெரிந்திருந்தால், படம் எடுப்பவர்களும் இத்தகைய படங்களை எடுக்க மாட்டார்கள். மட்டரகமான படங்கள் அதிக வருவாய் அளிப்பதனாலேயே எடுக்கிறார்கள்.



சங்கீத நாடக அகாடமியின் அங்கத்தினர் பிரபல எழுத்தாளர் கே. ஏ. அப்பாஸ்

இப்படி நான் சொல்லுவதனால் படம் எடுப்பவர்கள் மீது எத்தகைய பொறுப்பும் சுமத்தவில்லையோ என்று எண்ண வேண்டாம். சமுதாய நலனில் பட முதலாளிகளுக்கு எவ்வளவோ பொறுப்பிருக்கிறது என்று பன்முறை கூறியிருக்கிறேன். கோடிக்கணக்கான மக்களின் உள்ளத்தையும் உணர்ச்சிகளையும் பாதிக்கக் கூடிய ஒரு சாதனத்தைக் கையாளுகிறார்கள். எனவே, சர்வ ஜாக்கிரதையுடன் இருக்க வேண்டும் என்று பன்முறை கூறியிருக்கிறேன். அது மட்டுமல்ல, வெறும் களிப்பூட்டும் படங்கள் என்று சொல்லப் படுபவை கூட மக்கள் மனத்தை, நடை உடை பாவனைகளைப் பாதிக்கின்றன என்று கருதுபவன் நான். அவை நேர்முகமாகப் பாதிப்பதில்லை. கண்ணுக்குத் தெரியும் வகையில் பாதிப்பதில்லை. ஆயினும் சினிமா மக்களின் கூந்தல் சிங்காரத்தி

சங்கீத நாடக அகாடமியின் தலைவர் ஸ்ரீ பி. வி. ராஜமன்னார்.



சங்கீத நாடக அகாடமியின் நிர்வாக சபை அங்கத்தினரும், சினிமாக் கலை அரங்கின் செயற் குழுத் தலைவருமான இந்திய சர்க்கார் உதவி மந்திரி ஸ்ரீ என். காநுங்கோ.



# கலை அரங்கின் தலைவர்கள்







சங்கீத நாடக அகாடமியின் கௌரவ காரியதரிசி ஸ்ரீமதி நிர்மலா ஜோஷி.



சங்கீத நாடக அகாடமியின் சினிமாக் கலை அரங்கு விழாத் தலைவர் ஸ்ரீ பி. என். சர்க்கார்.



சங்கீத நாடக அகாடமியின் சென்னை வட்ட அங்கத்தினர் ஸ்ரீ எஸ். எஸ். வாசன்.

விருந்து, உடையணிவதி லிருந்து வாழ்க்கையை எப்படி நோக்க வேண்டும் என்பது வரை மக்களின் உள்ளத்தைப் பாதித்து விடுகிறது.

ஆகவே படம் எடுப்பவரின் பொறுப்பு அதிகமாகிவிடுகிறது. படம் பார்க்க வருபவர்களின் அழகுணர்ச்சியையும், சமுதாயத்தில் அவர்கள் கடமை யாவை என்பதையும், மற்ற நல் உணர்ச்சிகளையும் ஊட்டக் கூடிய படங்களாக எடுக்க வேண்டிய பொறுப்பு அவர்களுடையதாகி விடுகிறது.

ஆயினும் படம் பார்ப்பவர்கள் தங்கள் கடமையையும் பொறுப்பையும் உணர்ந்து நடந்து கொண்டிருப்பார்களே யாகில் இத்தனை மட்ட ரகமான படங்கள் வெளியாகி யிராது. அதிர்ஷ்டவசமாகவோ, அல்லது துரதிர்ஷ்டவசமாகவோ நமது படங்களைப் பார்க்கும் மக்கள் பெரும்பாலும் எழுத்து வாசனையற்ற பாமர மக்கள். அவர்கள் இந்தப் படத் தொழிலின் முதுகெலும்பாக இருக்கிறார்கள். அவர்களைப் பற்றி ஒரு உண்மையை யாரும் ஒப்புக்கொள்ள வேண்டும். மேனாட்டுப் படங்களைப் பார்த்துவிட்டு, இந்தியப் படங்களை நிந்திக்கும் நமது படித்த ரஸிகர்களைப் போல் இந்தக் கிராம மக்கள் இல்லை. இவர்கள் தங்களுக்குப் பிடித்த படங்களைப் பன்முறை பார்த்துப் பாராட்டி ரஸிக்கிறார்கள். மேலும் மட்டரகமான படங்களையே இந்த மக்கள் ரஸிக்கிறார்கள் என்று கூறுவதும் தவறு. பாமர மக்கள் பார்த்து ரஸிக்கும் வண்ணம் எடுக்கப்பட்ட நல்ல படங்களையும் இந்தக் கிராம மக்கள் நன்றாகப் பார்த்து ரஸிக்கிறார்கள் என்பதே என் அனுபவம். ஆனால் பொதுவாகக் கூறப் போனால் அவர்கள் சகிப்புத் தன்மை மிக்கவர்கள். அவர்கள் ஆண்டவன்மீது பக்தி மயமான பஜனை கீதங்களையும், மட்ட ரக வேடிக்கைப் பாட்டுக்களையும் சமமாக ரஸிப்பதுபோல் நமது நல்ல படங்களையும் கெட்ட படங்களையும் சமமாக ரஸிக்கக் கூடியவர்கள். ஆகவே, நல்ல படங்களுக்கு நல்ல ஆதரவு அளித்தும், மட்ட ரகப் படங்களை அறவே ஒழித்தும், சினிமாக் கலையை நல்வழியில் கொண்டு செல்லும் பொறுப்பைப் பெற்றவர், படித்த புத்திசாலியான சினிமா ரஸிகர்தான்.

சமுதாயத்தில் அறிவும் ஆற்றலும்பெற்றவர்கள், நல்ல படங்களைப் பார்த்து ரஸிக்கும் ரஸிகர்களை உருவாக்கினால்தான், நல்ல படங்களை எடுக்க வேண்டும் என்ற ஆவலுள்ள பட முதலாளிகள் முன் வருவார்கள். உற்சாகமாக, நல்ல நல்ல படங்கள் எடுக்க வேண்டும் என்றும் முனைவார்கள். இந்த ஆதரவு, பதக்கங்கள் வழங்குவது பரிசுகள் வழங்குவது, பாராட்டு விழாக்கள் நடத்துவது ஆகிய வகைகளில் விரிவதுடன் நின்று விடக் கூடாது. சர்க்காரும் நல்ல படங்கள் எடுத்தவர்களுக்கு, அவர்கள் படம் மூலம் கிடைத்த தமாஷா வரியைத் திருப்பிக் கொடுத்துப் பொருள் உதவி புரிய வேண்டும். அப்பொழுதுதான் நல்ல பாரதப் பண்பாடு பிரதிபலிக்கும் உயர்தரமான படங்கள் எடுக்க முன் வருவார்கள். பட முதலாளிகள் உற்சாகமும் அடைவார்கள்.

பட முதலாளிகளின் கடமை யாவை என்று ஓயாமல் நினைவூட்டும் 'கிரிடிக்கு'களும் சர்க்காரும் தங்கள் கடமைகள் என்ன என்பதை மறந்து விடக்கூடாது. இந்திய சினிமாக் கலையின் எதிர்கால வளர்ச்சியில், அவர்களுடைய பொறுப்பும் இருக்கவே செய்கிறது!

# சினிமா ஓர் நுண் கலை

நீதிபதி பி. வி. ராஜமன்னார்

சினிமாப் படத் தயாரிப்பு நிச்சயமாக ஓர் பெருந் தொழிலாகும். ஏனெனில் பெருந் தொழிலுக்கு வேண்டிய எல்லா அம்சங்களும் அதில் இருக்கின்றன. முதலில் அதில் ஈடுபடுத்த வேண்டிய மூலதனம் அற்ப சொற்பமான தொகையல்ல, பெருந் தொகையே வேண்டும். அதில் வேலைசெய்யத் தொழிலாளர்களும் ஆயிரக் கணக்கில் வேண்டும். பொறி இயல் நுட்பம் தெரிந்தவர்களும் தேவைப்படுகிறது. பிரம்மாண்டமான இயந்திர சாதனங்களையும் உபயோகப்படுத்த வேண்டியிருக்கிறது. இப்படி இத்தனை பேர் தயாரித்த படத்தை வெகு விரிவாக விளம்பரப்படுத்த வேண்டியிருக்கிறது. இதை விநியோகப் படுத்தும் மொத்த வியாபாரிகள் சில்லறை வியாபாரிகள் சமுதாயமே இருக்கின்றது. நாம் ஒரு பொருளை அதிகமாக உபயோகப் படுத்தினால், அதற்குத் தக்கபடி உற்பத்தியும் அதிகப்படுத்த வேண்டியிருக்கிறது. ஆகவே, பொருளாதார சாஸ்திரத்தில் கூறப்படும், 'அதிக தேவை அதிக உற்பத்தி' என்ற நியதி மற்றப் பெருந்தொழில்களில் உண்மையாக இருப்பதுபோல், இத்தொழிலிற்கூட உண்மையாகவே இருந்து வருகிறது. இருப்பினும் இந்தச் சினிமா படத்தைத் தயாரித்து வெளியிட்டு விட்டால், அது ஓர் கலைச் சிருஷ்டியாகவே ஆகிவிடுகிறது என்று நான் கருதுகிறேன்.

சினிமா ஓர் நிர்ணயமான பயனை எதிர்பார்த்துத் தயாரிக்கக் கூடியதல்ல. கல்வியறி ஊட்டும் படங்கள் ஒன்றிரண்டு இருக்கலாம். அப்படிப்பட்ட படங்கள்தான் எடுக்க வேண்டும் என்பது நியதியல்ல. கல்வியூட்டும் படங்கள் விதிக்கு விலக்கானவை. அதனால் குழந்தைகள் ரங்கராட்டினத்தில் சுற்றும் போது அடையும் குதூகலம் போன்றதோர் மகிழ்ச்சியூட்டுவதற்காகத் தான் சினிமா ஏற்பட்டது என்று கூறி விடுவதும் சரியல்ல. சினிமாவுக்குத் தனி அழகுணர்ச்சியூட்டும் லட்சியம் இருக்கத்தான் செய்கிறது. கவிதை, நாவல், நாடகம், சங்கீதம், சித்திரம், சிற்பம் ஆகிய கலைகளில் என்ன பண்புகள் எல்லாம் காண்கிறோமோ அவை அத்தனையும் சினிமாவில் இருக்கத்தான் செய்கின்றன. இவை தவிர, உண்மைக் கலைச் சிருஷ்டியில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு ஏற்படும் ஆனந்தம் சினிமாவில் ஈடுபட்டிருப்பவர்களுக்கும் ஏற்படுகிறது. சினிமா நமது உணர்ச்சிகளை ஆட் கொள்ளுகின்றது. மேலே குறிப்பிடப்பட்ட கலைகளை எப்படி அனுபவித்து இன்பம் அடைகிறோமோ, அத்தகையதோர் இன்பம் இதிலும் கிடைக்கிறது. அதாவது வடமொழி அலங்கார சாஸ்திர பாஷையில் குறிப்பிட வேண்டுமானால் ரஸஸ்வாதன் (ரஸானுபவம்) ஏற்படுகிறது என்று சொல்ல வேண்டும்.

'சினிமாவை ஒரு கலையாகக் கருத முடியாது' என்று சிலர் சொல்லுகிறார்கள். அதற்குக் காரணம், ஒரு தனி மனிதனின் உள்ளத்தின் தூண்டுகோலினால் சிருஷ்டிக்கப் படுவதல்ல சினிமா; அதனால் இது கலையாகாது என்று சிலர் சொல்லக் கேட்கிறோம். உண்மை. நாவலைப் போலவோ, கவிதையைப் போலவோ, நாடகத்தைப் போலவோ இது ஓர் தனி மனிதனின் காரியமல்லதான். ஆனால் பலபேர் சேர்ந்து ஓர் கலைச் சிருஷ்டியை நிர்மாணிப்பதும் உண்டுதானே? இதற்குப் பல உதாரணங்கள் கூறலாம். புஸ்தகத்திலுள்ள நாடகம் மேடை மீது நடிக்கப் பட்டால் அந்த மேடை நாடகத்தை அற்புதமான கலை என்று கூறுகிறோம். அதிலும் எழுதிய நாடகாசிரியன் தவிர நடிகர்கள், நடிகைகள், ஆடை அலங்காரம் செய்பவர், மேக்கப் போடுபவர், டைரக்டர் என்று பல பேர் சேர்ந்து உழைக்க வேண்டியதாகத் தான் இருக்கிறது. அப்படியேதான் அழகிய நினைவு மண்டபம், அல்லது அழகிய கட்டடமும். பலபேர் சேர்ந்து வேலை செய்திருப்பினும் அவை கலைப் பொருள்கள் தான். தச்சர்கள், கொத்தர்கள் இத்தனை பேரும் சேர்ந்துதான் வேலை செய்து கட்டி முடித்திருக்கிறார்கள். ஆகவே, சினிமாப் படத்தைப் பல பேர் சேர்ந்து தயாரிக்க வேண்டியிருப்பதால் அது கலையாகாது என்று சொல்லுவதில் பொருள் இருப்பதாகத் தெரியவில்லை.

இயந்திர சாதனங்களையும், பொறி இயல் நிபுணர்களையும் கொண்டு சினிமா எடுக்கப் படுவதால் அதை ஒரு கலையாக ஒப்புக் கொள்ள முடியாது என்று சொல்லப்படுகிறது. இதுவும் அர்த்தமற்ற வாதம்தான். தமிழ்நாட்டு வெண்கல சிற்பச் சிலைகள் கலைப் பொக்கிஷங்கள் என்று கொண்டாடுகிறோம். அவை உருக்கி, அச்சில் வார்த்துச் செய்யப் பட்டவைதாமே! அதற்கும் இயந்திர சாதனங்கள் அந் நாட்களிலேயே உபயோகப் படுத்தித் தானே வந்திருக்கிறார்கள்.

சினிமா என்பது ஒரு புதுக் கலை உருவம்.

விஷயம் என்னவென்று பார்க்கப்போனால் சினிமா இதுகாறும் அங்கீகரிக்கப்பட்ட கலைகளுள் ஒன்றல்ல. இது ஒரு புதுக் கலை. இது இருபதாவது நூற்றாண்டுக்கு முன் இராத கலை என்பது மட்டுமன்றி, பாட்டோ, சித்திரமோ, கவிதையோ சிருஷ்டிப்பது போல் சிருஷ்டிக்கப்படுவதுமல்ல.

இக் காரணத்தால் இதைக் கலை என்று அங்கீகரிக்க முடியாது என்று கூறுவது நியாயமல்ல என்பதே என் கருத்து.

நாடக மேடையில் தோன்றி நடிப்பதற்கும், சினிமாவில் நடிப்பதற்கும் எவ்வளவோ வித்தியாச மிருக்கிறது. நாடக மேடையில்

அங்க அசைவுகள் அதிகப்படியாகச் செய்ய வேண்டியிருக்கும். வசனங்களை மிகவும் அழுத்தம் கொடுத்துக் கூற வேண்டியிருக்கும். இவை யாவும் சினிமா நடிப்புக்கு வேண்டாதவை. இங்கு யாவற்றிலும் அடக்கம் என்பது மிக முக்கியம். ஜியார்ஜ் ஆர்லிஸ் என்ற பிரசித்தி பெற்ற நடிகர், "நாடக மேடை நடிகன், சினிமா நடிகனாக மாற நேர்ந்தால் அவன் முதலில் தெரிந்து கொள்ள வேண்டியது அடக்கமான நடிப்புத்தான். மேடையில், பல விஷயங்கள் பேசும் வசனம் மூலமாகத்தான் தெரிவிக்க வேண்டி யிருக்கிறது. சினிமாவில் அவ்வளவில்லை. ஒரு பார்வை, ஒரு தோள் அசைப்பு, ஓர் புருவ நெரிப்பு-இவைகளின் மூலம் சினிமாவில் மாபெரும் உணர்ச்சிகளைக் கொட்டிப் பார்க்கும் மக்களை ஆட்கொண்டு விடலாம். ஆனால் நாடக மேடையில் இவை யாவும் அவ்வளவு பயன் அளிப்பதில்லை. ஆம், சினிமாவில் நடிப்பதென்பது, பல விதத்திலும் நாடக மேடை நடிப்புக்கு மாறுபட்டதாகும். சினிமாவில் தன்னடக்கம் அதிகமாக வேண்டும். கற்பனையும் அதிகமாக வேண்டும். பற்றற்ற தன்மையும் வேண்டும். ஏன், சினிமா நடிப்பு என்பதே ஒரு தனிக் கலை என்று கூடச் சொல்லலாம்" என்று கூறியிருக்கிறார்.

இப்பொழுது நான் சினிமாக் கலையிலுள்ள மற்றோர் முக்கியமான அம்சத்தையும் குறிப்பிட விரும்புகிறேன். அதாவது சினிமாவுக்குக் கதை-வசனம் எழுதும் முறையைத் தான் குறிப்பிடுகிறேன். சினிமா என்னும் இப்புதுக் கலை, இலக்கியத் துறையில் 'சினிமாக் கதை எழுதுதல்' என்ற புதிய இலக்கிய உருவத்தைச் சிருஷ்டித்துக் கொடுத்து விட்டது! 'சினிமாவின் இலக்கிய அஸ்திவாரமே இதுதான்.' நாடக மேடைக்கு நாடகம் எழுதுவது எப்படித் தனிக் கலையோ அப்படியே சினிமா வசனமும் தனிக் கலையாகும்.

சினிமாவில் நடிகர்கள் பேசி முடித்தவுடன் அந்த வசனம் முடிவு அடைந்து விட்டது என்று சொல்லக் கூடாது. அதற்கு இலக்கியத்தில் நிரந்தர ஸ்தானம் உண்டு. கவிதை, நாடகம், நாவல் முதலிய இலக்கியங்களுடன் அதைச் சேர்த்து எண்ணப்படுவதற்கு எல்லா உரிமையும் தகுதியும் உண்டு.

தற்சமயம் சினிமா உலகில் இயந்திர சாதனங்களுக்கும், தொழில் நுட்பத் திறமைகளுக்கும் மிகவும் முக்கியம் அளிக்கப்படுகிறது. புதுப் புது உணர்ச்சிகளையூட்டவும், 'பயன்'களையும் பாராட்டுகளையும் பெறவும் போட்டோக் கலையில் புது முறைகளைக் கடைப் பிடிக்கிறார்கள். இவற்றைப் பற்றி எனக்குப் பெரு வியப்பு ஏற்படத்தான் செய்கிறது. ஆனாலும் நான் ஹெர்பர்ட் ரீட் என்பரின் கூற்றுடன்தான் ஒத்துப் போகிறேன். "இயந்திர சாதனங்கள் அளிக்கும் உற்சாகத்திலேயே எந்தக் கலையும் உயிர் வாழ்ந்து விட முடியாது" என்று கூறுகிறார். நல்ல கற்பனையும் தீர்க்க திருஷ்டியும் சினிமாவில் காணப்பட வேண்டும். அது கதை-வசனம் எழுதுபவர் சிறந்த கலைஞராக இருந்தால்தான் சாத்தியம். இவர் புதுவகைக் கலைஞராகத் தான் இருந்தாக வேண்டும். வண்ண ஓவியரின் பார்வையும், கவிஞனின் கற்பனையும், பாடகனின் கால பரிமாண உணர்ச்சியும் பெற்றவராக இருக்க வேண்டும். இத்தகைய கலைஞனின் சிருஷ்டி, காவ்ய பிரகாசிகா என்ற நூலின் ஆசிரியர் கூறுவதுபோல், 'சம்பிரதாய சட்டதிட்டங்களுக்குக் கட்டுப்படாமலும், ஆனந்தத்தை அளிப்பதாகவும் பரிபூரண சுதந்திரத்தைப் பெற்றதாயும், நவரஸங்களால் அழகு படுத்தப்பட்டதாகவுமே' இருக்கும் என்பதில் ஐயமில்லை.

சினிமா உற்பத்தித் தொழிலில் இந்தக் கலைஞன் தனக்கு உரிய ஸ்தானத்தை என்று பெறுகிறானோ அன்றுதான், உலகில் வேறு எந்தக் கலையும் அடையாத உன்னத நிலையை இந்தச் சினிமாக் கலை அடையும்!

✻ உங்கள் சேவையை புரியுங்கள் — நேஷனல் பிளான் சர்டிபிகேட்டுகளை வாங்குங்கள்.

# நான் அணிந்திருக்கும் புதிய கடாவ் வாயில் அவர் கவனத்தைக் கவருமோ என வியக்கிறேன்!



கடாவ்
வாயில்



உள் நாட்டு சரக்குகளையே வாங்குங்கள் — நல்ல ரகமாக வாங்குங்கள்.

தி கடாவ் மகன்ஜி ஸ்பின்னிங் & வீவிங் கம்பெனி லிமிடெட். மில்ஸ் : பைகுலா, பம்பாய். ஆபீஸ் : லக்ஷ்மி பில்டிங், பலர்ட் பியர், பம்பாய் 1. தலைமைக்கடை : மூல்ஜி ஜேதா மார்க்கட், கோவிந்த் தெரு, பம்பாய் 2. கிளை : 216, நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் ரோடு, மதறாஸ்.

# எப்ரல் வெளியீடு!



தவமிருந்து பெற்றபிள்ளைபோல் கருதி தம்பிமேல் பாசம் -
வைத்தான் கந்தன்! அதற்கு அவன் அடைந்த பரிசு...

நரசு ஸ்டுடியோஸ் அளிக்கும்

# போர்ட்டர் கந்தன்

ஒப்பற்ற உணர்ச்சிச் சித்திரம்...

எம்.கே.ராதா
டி.பாலசுப்ரமண்யம்
டி.எஸ்.துரைராஜ்
எம்.என்.நம்பியார்
கே.துரைஸ்வாமி
எம்.கே.முஸ்தபா
ஜி.வரலக்ஷ்மி
ஆர்.லலிதா
டி.பி.முத்துலட்சுமி
மாஸ்டர் பாஜி

டைரக்ஷன்•
**கே.வேம்பு**

தயாரிப்பு•
**V.L.நரசு**





நரசு நகர்
கிண்டி, சென்னை 15.



# அன்ன பூரணாலயத் திறப்பு விழா

எஸ். வி. எஸ்.

ஆதிசிவன் திருமணக் கோலத்தைப் பார்க்க முடியாமற் போனதற்காகத் தமிழ் முனிவர் அகத்தியருக்காகத் தம் திருமணக் கோலத்தைக் காட்டியருளிய க்ஷேத்திரம் வேதாரண்யம்.

தமிழ்மறை பாடிய அப்பரின் தீஞ்சுவைத் தமிழ்ப் பாடல்களுக்கு மனம் நெகிழ்ந்து, ஆண்டவன் கதவுகளைத் திறந்து தரிசனம் தந்த க்ஷேத்திரம் வேதாரண்யம்.

ராஜாஜி சொன்னது போல், இன்றையச் சுதந்திரக் கோவிலுக்கு இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் கோபுர வாசலாக அமைந்த புண்ணிய க்ஷேத்திரம் வேதாரண்யம்.

தமிழர்களுள் ரத்தினமாகத் திகழும் சர்தார் வேதரத்தினம் அரும் பணி புரிந்து வரும் க்ஷேத்திரம் வேதாரண்யம்.

அந்தப் புண்ணிய க்ஷேத்திரத்துக்குப் பாரதத்தின் ரத்தினமாகத் திகழும் ராஜாஜியுடன் 12உ. செல்லும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது!

இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் தமிழகத்தின் கண்கள் எல்லாம் வேதாரண்யத்தை நோக்கியே இருந்தன. ராஜாஜி எப்படி உப்புச் சட்டத்தை மீறப் போகிறார் என்ற ஆவல் ஒவ்வொருவர் உள்ளத்திலும் துடித்துக் கொண்டிருந்தது. அந்தச் சரித்திரப் புகழ் பெற்ற சத்தியாக்கிரகத்தின் தலைவர் ராஜாஜி. இப்பொழுது அந்த இடத்தில் ஓர் ஞாபகார்த்த ஸ்தூபியை எழுப்பியிருக்கின்றார்கள். அதைப் பார்ப்பதற்காக இப்பொழுது சென்ற போது, வேதரத்தினம் அவர்கள் சத்தியாக்கிரகத்தின் போது நிகழ்ந்த ருசிகரமான தகவல்களையெல்லாம் சொல்லிக் கொண்டே வந்தார். அவற்றைக் கேட்டுக் கொண்டே வந்தபோது, பன்முறை மயிர்க் கூச்சிட்டது.

அந்த ஞாபகார்த்த ஸ்தூபியிலிருந்து, ராஜாஜி தம்மை விசாரித்துத் தண்டனை விதிக்கப்பட்ட உப்பு சுங்கக் காரியாலயத்துக்குச் சென்றார்கள். அங்குதான் ஸ்ரீமான் பொன்னுசாமி பிள்ளை என்ற ஸப் மாஜிஸ்டிரேட் அன்று ராஜாஜியின் சேற்றுக் கால்களைத் தண்ணீரும் தமது கண்ணீரும் கலந்து விட்டுக் கழுவி அரசாங்கத்துச் சட்டத்தை மீறி உப்பு அள்ளியதற்காகச் சிறைத் தண்டனை விதித்தாராம்.

இந்த இடத்தைப் பார்த்து விட்டு, நேரே வேதாரண்யம் பஞ்சாயத்து போர்டில் ராஜாஜி சர்தார் வேதரத்தினத்தின் திருஉருவப் படத்தைத் திறந்து வைத்தார்.

"இன்று காலை என்னைத் தண்டித்த அந்த உப்பு சுங்கக் காரியாலயத்துக்குப் போய் வந்தேன். அங்கு மகாத்மாஜியின் படமும் என் படமும் சர்தார் வேதரத்தினம் படமும் மாட்டியிருந்தது. ஆனால் பொன்னுசாமி பிள்ளையின் படம் கூட மாட்ட வேண்டும் என்று சொன்னேன். அன்று அவர் எனக்குத் தண்டனை விதித்தபோது அவர் கண்கள் கலங்கின. கைகள் நடுங்கின. மிகச் சிரமப்பட்டுத்தான், நான் கூட உதவி செய்துதான் அவர் என் தண்டனை உத்தரவில் கையெழுத்திட்டார். இதுதான் மகாத்மா காண்பித்த வழியில் அடங்கியுள்ள விசேஷ அற்புதம். நம் விரோதியின்மீது கூட விரோதம் போய் விடுகிறது. இருவரும் அன்புடன் பழகிச் சினேகிதர்கள் ஆகிவிடுகிறோம்!" என்றார்.

அன்று தமிழ் முனி அகத்தியருக்குத் தமது திருமணக் கோலத்தைக் காட்டிய திருமறைக் காட்டீசர் இன்றைய நம் கர்ம யோகி ராஜாஜிக்குத் தரிசனம் அளித்தார்.

பின்னர் அங்கிருந்து, ஆதாரக் கல்வி முறையைப் பின்பற்றிச் சர்தார் வேதரத்தினம் நடத்தும் தாயுமானவர் வித்யாலயத்துக்குச் சென்றோம். அங்கு, வித்யாலய மாணவர்கள் மிக உற்சாகத்தோடு பாரத சுதந்திர வரலாற்றைக் கதா காலட்சேபமாகச் செய்தார்கள். அவர்கள் சங்கீதம்—பேச்சு யாவும் ரொம்பவும் தரமாக இருந்தன. இத்தகைய பள்ளிக்கூடத்துக்கு என்னதான் செய்யக்கூடாது என்று எண்ணிக் கொண்டிருந்த போது, உள்ளூர் பிரபல வர்த்தகர் ஸ்ரீ ஏ. கே. ஆர். முத்துக் குமாரசுவாமி பிள்ளை அவர்கள் இவ்



சங்கீத நாடக அகாடமியின் அங்கத்தினர். இந்திய நடனங்கள் அத்தனையிலும் நிபுணர். பாரதத்தின் நடனக் கலைச் சிறப்பை உலகறியச் செய்த நாட்டியக் கலைஞர் ஸ்ரீ உதயசங்கர்

வித்யாலயத்துக்கு ரூ. 501 நன்கொடை யளிப்பதாகத் தெரிவித்தார்.

வேதாரண்யத்தில் ராஜாஜி மாதர் நல இலாகா காரியாலயத்தைப் பார்வையிடச் சென்றார். அங்கிருந்து அங்கே மாதர்கள் மத்தியான வேலைகளில் நூல் நூற்றல், தையல், வலை பின்னுதல் முதலிய பலப்பல வேலைகளில் ஈடுபடுவதை ஸ்ரீமதி சிவாம்பாள் விளக்கிக் கூறினார். இதை யெல்லாம் கேட்டுவிட்டுப் போகும்போது அங்கு கூடியிருந்த மாதர்களுக்கு, "கொஞ்சம் உங்கள் வீட்டு வேலையையும் கவனித்துக் கொள்ளுங்கள். மறந்து விடாதீர்கள்!" என்று பலத்த சிரிப்பிடையே ராஜாஜி அவர்கள் நினைவுபடுத்தனார்.

திருவிழா, பண்டிகை என்றால், மாவிலைத்தோரணங்களும், தென்னோலைக் குருத்தில் செய்யப் பட்ட தோரணங்களும் எங்கும் கட்டப் பார்த்திருக்கிறேன். வேதாரண்ய ஆதாரக் கல்வி ஆசிரியர் பயிற்சி முகாமில், கத்திரிக்காய், வெண்டைக் காய், கீரை, நெல், முதலிய காய்கறித் தோரணம் கட்டப்பட் டிருந்தது. இவை யாவும் அந்தப் பயிற்சி முகாமில், ஆசிரியப் பயிற்சி பெற வந்த மாணவர்களால் பயிரிடப் பட்டனவாம். இவற்றைப் பார்த்து மிகவும் ரஸித்து விட்டு ராஜாஜி தமக்கே உரிய ஒரு ஹாஸ்ய வெடியைப் போட்டார்: "நீங்கள் பயிரிட்டவை இவ்வளவேதானா! இன்னும் இருக்கிறதா!" அவ்வளவுதான்; 'கொல்' என்று சிரிப்பு நாற்புறமும் எழுந்தது!

தலைமை ஆசிரியர் ஸ்ரீ ராமச்சந்திரய்யர் அடக்கமும் உண்மையும் விஷயம் கிரகித்துக் கொள்ள வேண்டும் என்ற ஆர்வத்தோடும் கூடிய வரவேற்புரை நிகழ்த்தினார். பின்னர், மாணவர்களும் ஆசிரியர்களும் வசூலித்த ரூ. 30/- கொண்ட சிறு பையைக் காந்தி மகான் நினைவு மண்டப நிதிக்கு ராஜாஜியிடம் கொடுத்தார்.

* * *

வேதாரண்யத்தில் சர்தார் வேதரத்தினம் பிள்ளையவர்கள் "கஸ்தூரி பா காந்தி கன்யா குருகுலம்" என்று ஓர் அனாதைச் சிறுமிகளைக் கொண்டு ஆதாரக் கல்வி முறையில் ஆசிரமம் நடத்தி வருகிறார். இந்தக் குருகுலத்துக்கு ஏற்கெனவே எத்தனையோ பெரியோர்கள் வந்து சர்தார் வேதரத்தினமும் அவரது அருமைப் புதல்வர் திரு அப்பாக்குட்டியவர்களும் செய்து வரும் இந்தப் பணியைக் கண்டு வியந்து பாராட்டி விட்டுப் போயிருக்கிறார்கள்.

இதில் விந்தை என்ன வென்றால், இரண்டு ஆண்டுகளுக்கு முன் தஞ்சை ஜில்லாவில் அடித்த புயலில் பெரிதும் பாதிக்கப்பட்டது குருகுலம். இப்படிப் பெரும் சேதத்துக்குள்ளான குருகுலம் சர்தார் வேதரத்தினம் அவர்களின் நெஞ்சுறுதியினாலும் ஊக்கத்தினாலும் புனர் நிர்மாணம் ஆகியிருக்கிறது. இதற்கே நாம் சர்தாருக்கு ஒரு பாராட்டு விழா கொண்டாட வேண்டும். அதற்கு மாறாக சர்தார் ஓர் கட்டடம் கட்டி முடித்து அதைத் திறக்க ராஜாஜியை அழைத்திருந்தார்!



ஸ்ரீமதி எம். எஸ். நடித்த ஹிந்தி மீரா படத்தின் பாடல்களை அமைத்துத் தந்த கவிஞர்: சங்கீத நாடக அகாடமியின் அங்கத்தினர் ஸ்ரீ நரேந்திர சர்மா.

ஆம், இந்தக் குருகுலத்தில் புதிதாகச் சமையல் செய்வதற்கும், குழந்தைகள் சாப்பிடுவதற்கும் 30,000 ரூபாயில் ஓர் கட்டடம் கட்டியிருக்கிறார் சர்தார் வேதரத்தினம். இதைத் திறந்து வைக்கத்தான் ராஜாஜி அவர்கள் வந்திருந்தார்கள். திறப்பு விழாவின் போது, கொடி ஏற்று விழா நடத்தத் திருக்கோவிலூர் அட்வகேட் ஸ்ரீ டி. ஆர். கிருஷ்ணமாச்சாரியாரையும், தலைமை தாங்க மதுரை தேசபக்தர் ஸ்ரீ ஏ. வைத்தியநாதய்யர் அவர்களையும், குருகுல மாணவிகளின் கலை நிகழ்ச்சிகளுக்குத் தஞ்சை கலெக்டர் ஸ்ரீ வி. ஏ. ராமகிருஷ்ணன் ஐ. ஸி. எஸ். அவர்களையும் சர்தார் ஏ. வேதரத்தினம் அழைத்திருந்தார்.

குருகுலத்தில் நெசவு, நெட்டிப்பூ வேலை, பாய் பின்னுதல், கூடை முடைதல், எண்ணெய் ஆட்டுதல் முதலிய பலப்பல கைத்தொழில்கள் கற்பிக்கப் படுகின்றன. அவற்றை யெல்லாம் ராஜாஜி மிக்க சிரத்தையோடு பார்வையிட்டார்.

குருகுல மாணவிகள் கொடி வணக்கம் பாடி, அணிவகுத்து நின்று மரியாதை செலுத்த ஸ்ரீ டி. ஆர். கிருஷ்ணமாச்சாரியார் கொடி ஏற்றி வணக்கம் செலுத்தினார். கொடியிலிருந்து சிதறிய புஷ்பங்கள் குருகுலக் குழந்தைகளை வானுலகத்துத் தேவர்கள் ஆசீர்வதிப்பது போன்ற உணர்ச்சியை உண்டாக்கின. அப்பர் பெருமானின் எந்தப் பாடலைக் கேட்டு, வேதாரண்ய ஈசன் உருகித் தமது மணிக் கதவம் திறந்து பக்தருக்குத் தெரிசனம் தந்தாரோ அந்தப் பாடலைக் குருகுல மாணவிகள் பாட ராஜாஜி தமது கரங்களால் அன்னபூரணாலயத்தைத் திறந்து வைத்தார்.

குருகுலத்தைச் சேர்ந்த வெளியில், ஓர் அழகிய மேடை அலங்காரம் செய்து வைத்திருந்தார்கள். அந்த மேடையில் ஏறித் தலைவர்கள் அமர்ந்ததும், குருகுல மாணவிகள் தீங்குரலில் அருமையான தேவாரப் பாடல்கள், பஜனை கீதங்கள், கீதை சுலோகங்கள், குரான் வாசிப்பு முதலியவை நிகழ்த்தினார்கள். இதனிடையில் குருகுலத்தில் அரும் பணி புரிந்து வரும் சேவக், சாரதாம்பாள், ராஜாஜி குருகுலத்துக்கு வந்து அன்னபூரணாலயத்தைத் திறந்து வைத்ததின் ஞாபகார்த்தமாக, ஐந்து ஏக்கரும் 74 செண்டும் கொண்ட நிலப் பகுதியை மேலும் குருகுலத்துக்கு எழுதி வைத்துள்ள பத்திரத்தில் ராஜாஜியைச் சாட்சிக்







1. சர்க்கார் ஆதாரக் கல்வி ஆசிரியர் பயிற்சிப் பள்ளியின் தலைமை ஆசிரியர் காந்தி மண்டப நிதிக்குக் காணிக்கை வழங்குகிறார். 2. பஞ்சாயத்து போர்டில் பாரத ரத்தினமும் வேதரத்தினமும். 3. குருகுலத்து மாணவிகள் கூட்டத்தின் ஒரு பகுதி. 4. குருகுல மாணவிகள் வேஷம் தாங்கி 'சாரு மித்ரா' நாடகம் நடித்தனர். 5. குருகுலத்திலுள்ள பூகோளத்தை ராஜாஜி பார்வையிடுகிறார். 6. குருகுல மாணவியும் கைத்தறியும். 7. ஸ்ரீ தாயுமானவர் வித்யாலய மாணவன் வரவேற்புரை அளித்து விட்டு ராஜாஜிக்கு வணக்கம் செலுத்துகிறான். 8. குருகுலத்திலுள்ள எண்ணெய்ச் செக்கு.

கையெழுத்திடுமாறு வேண்டிக் கொண்டார். ராஜாஜியும், வைத்தியநாதய்யரும் மனமுவந்த ஆசியைக் கையெழுத்திட்டுத் தெரிவித்தனர்.

இந்தப் புனிதத் திருநாளில் தமது கைங்கரியமும் ஏதாவது இருக்க வேண்டுமென்று ஸ்ரீ வி. க. சுப்பையா பிள்ளை ரூ. 101 காந்தி மண்டப நிதிக்கு நன்கொடை வழங்கினர்.

அன்று சர்தார் வேதரத்தினம் நிகழ்த்திய பேச்சு, 'இதுவரையிலும் அப்படிப்பட்ட பேச்சைக் கேட்டதில்லை' என்று சொல்லும்படியாக அமைந்திருந்தது. அவ்வளவு உணர்ச்சியும் வேகமும் கொண்டதாயிருந்தது.

ஸ்ரீ டி. ஆர். கிருஷ்ணமாச்சாரியாரை அறிமுகப் படுத்திக் கூறியபோது, மகாத்மா காந்திக்கு மிகவும் உகந்த ஆனால் யாரும் செய்யத் துணியாத குஷ்டரோக நிவாரணப் பணியைத் திருக்கோவிலூரில் செய்து வருகிறார் என்று குறிப்பிட்டார்.

ராஜாஜியைப்பற்றித் திரு வேதரத்தினம் பேசிய பேச்சு உள்ளத்தைத் தொடுவதாக இருந்தது.

"அன்னிய ஆட்சியின் கீழ் காங்கிரஸ் பதவி ஏற்றது. ராஜாஜி பிரதம மந்திரியாக இருந்தார். மதுரை வைத்தியநாதய்யர் சட்டத்தை மீறி ஹரிஜனங்களை ஆலயப் பிரவேசத்துக்கு அழைத்துச் சென்றிருந்தார். அதனால் அவர் மீது சர்க்கார் வழக்குத்தொடுத்திருந்தார்கள். வைத்தியநாதய்யர் சட்டத்தை மீறியது உண்மைதான் என்று ஒப்புக் கொண்டு விட்டார். தண்டனை விதிக்க வேண்டியதுதான். அன்று காலை மதுரை நீதிபதிக்கு ஒரு தந்தி வந்தது. இந்த வழக்கைத் தள்ளி வைக்கும்படி. அவசரச் சட்டம் மக்களை அடக்குவதற்கு மட்டும்தான் அது வரையிலும் உபயோகிக்கப்பட்டு வந்தது. ராஜாஜி அதே சட்டத்தைக் கொண்டு அரசாங்கத்தையும் அடக்கலாம் என்று காண்பித்தார்!" என்றார். இப்படி ராஜாஜியின் பெருமைகளை வெகு உணர்ச்சியோடு அன்று சர்தார் வேதரத்தினம் விளக்கினர்.

அப்படியேதான் மதுரை வைத்தியநாதய்யர் அவர்களைப் பற்றியும் வேதரத்தினம் கூறினர்.

பிறகு பேசிய ராஜாஜி, "எனக்கு ஏதோ பாரத ரத்தினம் என்றெல்லாம் பட்டம் தந்திருக்கிறார்கள். ஆனால் அவர் தந்தை அளித்துள்ள பெயர் — வேதரத்தினம் — அவருக்கு எவ்வளவு பொருத்தமாக இருக்கிறது. உண்மையின் அடிப்படையில், காந்தி வழியில் சென்று தமது தந்தை இட்ட பெயருக்கு விளக்கமாகப் பணி செய்து வருகிறார். இதை விட உயர்ந்த பட்டம் என்ன இருக்க முடியும்!" என்று கூறி, "1920ல் நடந்த சட்ட மறுப்பு இயக்கத்தின்போது தஞ்சை ஜில்லாவைச் சேர்ந்த நால்வர் தமக்குப் பக்கபலமாக இருப்பதாக வாக்களித்ததால்தான் அந்த இயக்கம் வெற்றி பெற்றது. ஆகவே, அதில் தஞ்சை ஜில்லாவாசிகள் பெருமைப்பட வேண்டும். அதே போல் 1930ல் உப்பு சத்தியாக்கிரகத்தின் போது வேதரத்தினம் தமக்கு உறுதுணையாக இருந்ததால் உப்பு சத்தியாக்கிரகப் போர் அந்தவைய வெற்றிக்குக் காரணமாகியது. இவ்விஷயத்தில் ஸ்ரீ வேதரத்தினத்தைப் பெற்ற வேதாரண்ய வாசிகள் பெருமையும் குதூகலமும் அடைய வேண்டும்" என்றார்.

கடைசியில் ராஜாஜி, "குருகுல மாணவிகள் நன்கு பாடியும் வேலைகள் செய்தும் கல்வி பெற்றும் வருகிறார்கள். இவர்களுக்குத் தகுந்த கணவர்களை எப்படித் தேடித் தரப் போகிறார்!" என்ற கவலை தமக்கு ஏற்பட்டிருப்பதாகக் கூறினர்.

"குருகுல மாணவிகளின் எதிர்கால விஷயமாக ராஜாஜி கிளப்பிய பிரச்னையைக் கண்டு நான் அஞ்சவில்லை. ஏனெனில் ராஜாஜியைப் பின்பற்றிச் செல்பவன் நான். ராஜாஜி பிரச்னைகளைச் சமாளிப்பது போல் ஆண்டவன் அருளால் பிரச்னைகளுக்குப் பரிகாரமும் ஏற்படும்" என்று தாம் நம்புவதாகக் கூறித் தமது வந்தனங்களையும் தெரிவித்தார் வேதரத்தினம்.

பிறகு குருகுல மாணவிகளின் 'சாருமித்ரா' நாடகம் நடந்தது. ரயிலுக்கு நேரமாகி விட்டதால் நாங்கள் உடனேயே விடை பெற்றுக் கொண்டு கிளம்பி விட்டோம். வாழ்க வேதரத்தினத்தின் தொண்டு! வாழ்க குருகுலம்!

## ரேடியோ நிலையத் தலைவர் மாற்றம்



எஸ். என். மூர்த்தி

சென்னை அகில இந்திய ரேடியோ நிலையத்தின் தலைவராக இருந்து இந்த ராஜ்ய மக்களின் அன்பையும் மதிப்பையும் பெற்றவரும், ரேடியோ மாத நிகழ்ச்சிகளின் மூலம் ரேடியோக் கேட்போர் அனைவரையும் மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தியவருமான திரு எஸ். என். மூர்த்தி இப்பொழுது பம்பாய் நிலையத்தின் தலைவராக மாற்றலாகிச் செல்கிறார். செயல் – திறமையும், பொது மக்களோடும் சிப்பந்திகளோடும் சுமுகமாகப் பழகும் ரஞ்சக சுபாவமும் நிரம்பிய திரு மூர்த்தி அவர்கள் எங்கு சென்றாலும் மக்களின் அன்பைப் பெற்று விடும் இயல்பு உடையவர். அவருக்குத் தமிழ் மக்களின் சார்பில் நல்வாழ்த்துக் கூறுகிறோம்.



கே. நாராயண மேனன்

சென்னை நிலையத்துக்குத் தலைவராக வரும் திரு நாராயண மேனன் ஒரு வைணிகர். கலைத் திறமையும், இசையுள்ளமும் உடையவர். லண்டன் பி. பி. ஸி. நிலையத்தில் பணிசெய்து பயின்றவர். நீண்ட நாள் டில்லியில் இருந்தவர். அவருக்குத் தமிழன்பர்களின் சார்பில் நல்வரவு கூறுகிறோம்.

# இந்தியத் தயாரிப்பு
# இந்தியாவிலேயே தலைசிறந்தது

NATIONAL INSULATED CABLE CO. OF INDIA LTD.

## நிக்கோவின் தயாரிப்புகள்

காப்பர் கண்டக்டர்கள் சாலிட், ஸ்ட்ராண்டட், அலுமினியம் கண்டக்டர்கள், ரப்பர் இன்ஸுலேடட் கேபிள்கள், ப்ளெக்ஸிபிள்ஸ், நூல் சுற்றப்பட்ட ஒயர்கள், எனுமல்டு ஒயர்கள் முதலியன.

*யாவும் திட்டப்படி சரியான முறையில் தயாரானவை*



**NICCO**

**CABLES & WIRES**

**LIFE LINES OF THE NATION**

இந்திய அரசாங்கம் மற்றும் அத்துடன் இணைக்கப்பட்டுள்ள ஸ்தாபனங்களுக்கும் அங்கீகரிக்கப்பட்ட ஜாபிதாவில் சேர்க்கப்பட்டு "நிக்கோ" தேவைகளுக்கு சப்ளை செய்து வருகிறது.




## நேஷனல் இன்ஸுலேடட் கேபிள் கம்பெனி ஆப் இந்தியா லிமிடெட்

ஸ்டீபன் ஹவுஸ், 4, டல்ஹவுஸி ஸ்கொயர், கல்கத்தா

இந்தியாவெங்கும் ஏஜண்டுகளும் கிளை ஆபீஸ்களும் உள்ளன



# கலைஞன் கனவு

லக்ஷ்மி மணியன்

அன்று மங்களபுரம் மாதர் சங்கத்தின் மாதாந்திரக் கூட்டம். சங்கத்தின் தலைவி மிஸ் வசந்தா தேவி அங்கத்தினர்கள் கொண்டு வந்த பல தீர்மானங்களை நிறைவேற்றியும், சிலவற்றை நிராகரித்தும், பரபரப்பாக வேலை செய்து கொண்டு இருந்தாள். கடைசியாக வந்த தீர்மானம் வசந்தா தேவிக்கு எரிச்சலையும், கோபத்தையும் உண்டாக்கியது.

விஷயம் என்னவென்றால், கடந்த நான்கு வருடங்களாக மிகவும் பிரபலமாகவும் நன்றாகவும் நடக்கும் அச் சங்கத் தலைமைப் பதவியை மிகவும் போட்டிகளின் நடுவில் கஷ்டப்பட்டு வசந்தா தேவி கைப்பற்றினாள். மீண்டும் நடக்கும் தேர்தலில் வெற்றி பெற வேண்டுமென்றால், அங்கத்தினர்கள் யாவரையும் திருப்திப்படுத்த வேண்டும். ஆம் — அங்கத்தினர்கள் யாவரும் ஒருமுகமாக அத் தீர்மானத்தைக் கொண்டு வந்திருந்தனர். அத் தீர்மானம் பிரபல பாடகர் கானரத்ன, வித்யாரத்ன கலா பூஷண சாரங்கன் அவர்களை ஆண்டு விழாவின்போது, இசை பாட இசைய வைக்க வேண்டும் என்பதுதான்.

வஸந்தா தேவிக்கு முன் இருந்த தலைவி ஸ்ரீமதி காமேஸ்வரி அம்மாள் காலத்திலேயே வித்வான் சாரங்கன் பாடுவதாகச் சங்கத்தில் ஏற்பாடாகி இருந்தது. திடீரென உடல் நிலை கெட்டு விட்டதால் காமேஸ்வரி அம்மாள் விலகிக் கொண்டதும், வசந்தா தேவி தலைமை வகித்ததும் முறைப்படி நடந்தன. முன் ஒப்பந்தப்படி தன்னால் வர இயலாதென சாரங்கன் குழுவினரிடமிருந்து மிஸ் வசந்தா தேவி தலைமை வகித்ததும் தகவல் வந்தது. இது எல்லாருக்கும் ஆச்சரியத்தை உண்டாக்கியது.

இந்த இக்கட்டான நிலையில் மற்றுமொரு முயற்சி செய்ய வேண்டுமென ஏகமனதாக அங்கத்தினர்கள் தீர்மானம் கொண்டு வந்தது வசந்தா தேவியை ஆத்திரப்படுத்தியதில் ஆச்சரியம் என்ன! ஆனால் அவள் கோபத்தை யாரிடம் காட்ட முடியும்! விரைவில் எடுத்துக் கொள்வதாகக் கூறி அவர்கள் இஷ்டப்படி அத்தீர்மானத்தை நிறைவேற்றினாள். அத்துடன் அன்றையக் கூட்டம் கலைந்தது. ஆயாசத்துடன் வீடு சேர்ந்தாள். "ஏனம்மா உன் முகம் வாடி இருக்கிறது! இன்று அதிக வேலையோ!" என்று கேட்டாள் வசந்தாவின் தாயார்.

"இன்று வேலை அதிகம்தான். நீங்கள் எங்காவது வெளியில் போகப் போகிறீர்களா!"

"பாங்கர் ரகுராமனின் பெண் அருணாவின் கல்யாணத்துக்கு நானும் உன் தந்தையும் புறப்பட்டுக் கொண்டிருக்கிறோம். நீயும் வருகிறாயா! அவர்கள் வீட்டில் பிரபல சங்கீத வித்வான் சாரங்கன் குழுவினரின் சங்கீதக் கச்சேரியும் கேட்டு விட்டு வரலாம்" என்றாள்.

சாரங்கனின் பெயரைக் கேட்டவுடனே "சரி, அம்மா. இதோ நானும் வருகிறேன்" என்று புறப்பட்டாள்.

பாங்கர் வீட்டில் கல்யாணப் பந்தலில் சாரங்கனின் கச்சேரி நடந்து கொண்டிருந்தது.

பாடகர் சாரங்கனைக் கூர்ந்து பார்த்தாள் வசந்தா. சிவந்த நிறம், நல்ல உயரம், கட்டான உடல் அமைப்பு, சுருள் சுருளான அழகிய கேசம், அழகிய இளஞ் சிரிப்பு. படித்துப் பட்டம் பெற்று சீமைகள் எல்லாம் சென்று வந்த வசந்தா எத்தனை ஆடவரைச் சந்தித்திருக்க மாட்டாள்! பழகி யிருக்க மாட்டாள்! கலை விலாசம் பொருந்திய முகக் காந்தியுடைய இவரைப் போல் வேறெங்கும் தான் கண்டதில்லை என்று தான் அவள் நினைத்தாள்.

பாடகர் துரித காலத்தில் ஆரம்பித்த பைரவி வர்ண ஆரம்பம் தேனருவியெனப் பாய்ந்து வந்து காதில் விழுந்ததும் அந்த நாத வெள்ளத்தில் வசந்தாவும் ஒன்றிப் போய் விட்டாள்.

இசை அமுது அளித்த சாரங்கனின் கண்களும் ஆடாது அசையாது இசையை அனுபவித்த வசந்தாவின் பெரிய கரிய விழிகளும் ஒன்றுடன் ஒன்று அநேக தடவை சந்தித்து ஒன்றையொன்று வெட்டின.

* * *

வித்வான் சாரங்கன் தங்கியிருந்த ஹோட்டலின் பெரிய அறையில் சோபாவில் உட்கார்ந்து கொண்டு இருந்தார். அவர் வாய் வசந்தா ராகத்தை மெதுவாக இழுத்துக் கொண்டிருந்தது. ஆனால் அவருடைய மனம் முந்திய தினம் மாலை கச்சேரியின்போது தனக்கு மிகச் சமீபத்தில்

உட்கார்ந்திருந்த குமாரி வசந்தாவின் உருவை எழுதிக் கொண்டிருந்தது.

"அன்றைய வசந்தாவுக்கும் இன்றைய வசந்தாவுக்கும் ரொம்ப மாறுதலே இல்லை. ஏழு வருடங்கள் அவளைச் சற்றுப் பெரியவளாகக் காட்டியுள்ளதே தவிர வேறு ஒரு மாறுதலும் இல்லை." இப்படி நினைத்து ஒரு பெருமூச்சு விட்டார். அவர் மனம் மற்றொரு பழைய காட்சியை அவர் மனக் கண் முன் நீட்டியது.

• • •

திருக்கோடியில் "ஜல் ஜல்" என்று மாட்டு வண்டியின் சத்தம் கேட்டது. மாட்டுக் கொட்டிலில் மாடு கறப்பதைப் பார்த்துக் கொண்டிருந்த மிராசுதார் மகாதேவன் வண்டிச் சத்தம் கேட்டவுடன் "பார்வதி! பால் கறந்தாகி விட்டதும் எடுத்துக் காய வை. டிகாக்ஷன் இறக்கி விட்டாயா! சீக்கிரம் காப்பியைக் கலந்து வை" என்று பரபரப்புடன் உத்தரவிட்டபடியே வாசலை நோக்கிப் போனார். முன் ரேழியை யடுத்த பட்டாசாலையில் சாரங்கன் தன்னை மறந்து போய் அபார சாதகம் பண்ணிக் கொண்டிருந்தான். அவனைக் கண்ட அவர், "டேய், சாரங்கா! போதும், இவ்வளவோடு நிறுத்திக் கொள்" என்று அதட்டலாகக் கூறியவர் வாசலில் வண்டி வந்து நிற்பதைக் கண்டு இரண்டே எட்டில் வாசலை அடைந்தார். வண்டியிலிருந்து இன்ஜினீயர் சுந்தரராஜன், அவர் மனைவி காமாட்சி, அவர்களுடைய ஒரே செல்லப் பெண் குமாரி வசந்தா மூவரும் ஒருவர் பின் ஒருவராய் இறங்கினர். 'வாங்கோ, வாங்கோ,' என்று எல்லாரையும் கைகூப்பி வணங்கி அன்புடன் வரவேற்றார் மிராசுதார் மகாதேவன்.

பாடுவதை நிறுத்தி விட்ட சாரங்கன் மெதுவாக எழுந்து காமரா அறையின் முன் நின்று உள்ளே வருபவரைக் கவனித்துப் பார்த்தான். களையான முகத்துடன் உள்ளே நுழைந்த காமாட்சி அம்மாளையும் அவளை ஒட்டினாற் போல வந்த வசந்தாவின் அழகையும் நாகரிகத் தோற்றத்தையும் கண்ட சாரங்கன் திகைத்துப் போய் விட்டான். அவர்களை எதிர்கொண்டு வந்த அவன் தாய் அவர்களைப் பின் கட்டுக்கு அழைத்துச் சென்றதும் அவன் மெதுவாக வாசல் புறம் வந்தான். "இங்கே வாடா, சாரங்கா! மாமாவுக்கும் வணக்கம் கூறு" என்று அழைத்தார் மிராசுதார் மகாதேவன்.

"சுந்தரம், இவன்தான் என் மகன்" என்று சாரங்கனைத் தம் நண்பருக்கு அறிமுகப்படுத்தினர்.

சாரங்கனும் தந்தையையும் அவர் நண்பரையும் வணங்கி விட்டு நின்றான்.

"இவன் உன் பையனா, என்ன வயதாகிறது? என்ன படிக்கிறான்?" என்று கேட்டார் இன்ஜினீயர்.

"இவனுக்கு வயதாகி விட்டதப்பா. பத்தொன்பது வயதாகிறது. அவனை ஒன்றுக்கும் உதவாத வெறும் ஏட்டுப் படிப்பு படிக்க வைக்க இஷ்டமில்லை. அதனால் பத்தாவதுடன் படிப்பை நிறுத்தி விட்டேன். சாரங்கனுக்குப் பாட்டென்றால் அபார ஆசை. அதனால் சங்கீதம் கற்றுக் கொள்ள ஏற்பாடு செய்கிறேன்" என்றார்.

"பாட்டு என்ன வேண்டிக் கிடக்கிறது! படிப்பில் கொஞ்சம் புத்தி வைத்தால் வாழ்க்கைக்கு உபயோகமாகும்; நல்ல உத்தியோகமும் கிடைக்குமே!" என்றார் இன்ஜினீயர்.

"ஏதோ நடக்கிறது நடக்கட்டும்!" என்று சொல்லி விட்டு, "சாரங்கா! மாமாவைப் பின்பக்கம் அழைத்துப் போய்ப் பல் பொடி ஜலம் எல்லாம் எடுத்துக் கொடு!" என்றார். அவர் விருப்பப்படி இன்ஜினீயர் சுந்தரமும் சாரங்கனும் சென்றார்கள்.

தன் தாய் தந்தையுடன் நான்கு தினங்கள் தன் வீட்டில் தங்கியிருந்த வஸந்தாவின் அழகும், அறிவும் கெட்டிக்காரத்தனமும் சாரங்கனின் மனத்தில் பதிந்துதான் போய் விட்டன. ஆனாலும் தன் குடுமித் தலையையும் விபூதிப் பொட்டுடன் நடுவில் தான் அணியும் குங்குமப் பொட்டையும் அவள் கேலி செய்தது அவனுக்கு எரிச்சலைத்தான் உண்டாக்கியது. எல்லாவற்றுக்கும் மேலாகத் தன்னைவிட அவள் அதிகம் படித்தவள் என்ற எண்ணம் அவளிடம் அவனுக்கு ஒரு வெறுப்பை யூட்டியது.

வஸந்தா ஊருக்குப் போகும் முன் தினம் மிராசுதார் மகாதேவன் விளையாட்டாக, "எங்க சாரங்கனைத் தானே அம்மா கல்யாணம்



பிரபல திரைப்பட வினியோகஸ்தர்களில் ஒருவர், சங்கீத நாடக அகாடமியின் அங்கத்தினர் ஸ்ரீ ஜகந்நாராயண்.



வட இந்திய சங்கீத நிபுணர், சங்கீத நாடக அகாடமியின் அங்கத்தினர் ஸ்ரீ பங்கஜ் மல்லிக்.

"செய்து கொள்ளப் போகிருய் !" என்றதும் அவள் வெடுக்கென்று "போங்கோ, மாமா! நான் என்னிலும் மேம்பட்ட ஒருவரைத்தான் நான் மணக்கப் போகிறேன்" என்ருள்.

"எத்தனை படித்தால்தான் என்ன! சங்கீதத்தை ரசிக்கத் தெரியாதவள் ஜடம், அப்பா!" என்று சாரங்கன் சற்றுக் கடுமையாகக் கூறியதும் மிராசுதார் பேச்சை வேறு திசையில் திருப்பினர்.

மறுநாள் நண்பர் ஊருக்குச் சென்றதும் மகாதேவன் சாரங்கனைப் பற்றித் தம் மனைவியிடம் குறைப்பட்டுக் கொண்டார்.

"அப்பா, இந்த சங்கீதத்தின் மூலமே வசந்தாவை எப்படியாவது மட்டம் தட்டாவிடில் பாருங்கள்" என்ருன் சாரங்கன்.

***

இவைகள் யாவும் நினைவுக்கு வந்ததும் 'களுக்' கென்று சிரித்துக் கொண்டார் சாரங்கன்.

இந்தச் சமயத்தில் தாளிடப்படாமல் சாத்தியிருந்த அறையின் கதவைத் திறந்து கொண்டு மிஸ் வஸந்தாவும் அவள் தந்தையும் உள்ளே நுழைந்தார்கள். அவர்களை வரவேற்று ஆசனங்களில் இருக்கச் செய்தார் சாரங்கன்.

தந்தையும் மகளும் அவருடைய இசையைப் பற்றி வானளாவப் புகழ்ந்தார்கள். எல்லாவற்றுக்கும் அழகிய ஒரு சிரிப்புடன், "தாங்கள் இருவரும் இந்தப் பாடகரை நாடி வந்த காரணம் என்ன ?" என்று கேட்டான் சாரங்கன்.

வஸந்தா தன் சங்கத்தைப் பற்றியும் அதில் அவர் இசைக் கச்சேரி செய்ய வேண்டும் என்றும் உருக்கமாகக் கேட்டுக் கொண்டாள். அவளை ஆமோதித்து அவள் தந்தையும் பேசினர்.

"மிஸ் வஸந்தா! நான் ஒன்று சொல்லுவேன், நீங்கள் கோபித்துக் கொண்டுவிடக் கூடாது. உங்கள் சங்கத்தன் அங்கத்தினரைத் திருப்தி செய்ய உங்கள் கல்வியாலோ உங்களைப் போன்றவரின் கல்வியாலோ முடியாதது ஆச்சரியம்தான். இசையினல்தான் அவர்களைத் திருப்தி செய்ய முடியும். ஆனல் அந்த நாளில் இந்த இசையில் ஆசைகொண்ட என்னை நீங்கள் அலட்சியம் செய்தது எனக்கு மறக்கவே இல்லை. என்னை யார் என்று இன்னமும் நீங்கள் புரிந்துகொள்ளவில்லையா ! மாமா, உங்களுக்குமா தெரியவில்லை ! உங்கள் பால்ய நண்பர் மிராசுதார் மகாதேவனின் அசட்டுப் பிள்ளை சாரங்கன்தான் நான்" என்று விளக்கினர் சாரங்கன்.

இதைக் கேட்டதும், "அடாடா, சாரங்கனு நீ!" என்று அவரை அப்படியே அணைத்துக் கொண்டார் இன்ஜினீயர் சுந்தரம்.

வசந்தாவும் விவரமாக எல்லாவற்றையும் புரிந்து கொண்டு "அன்று என் அறியாமையால் அலட்சியம் செய்ததற்குச் சரியான தண்டனை. ஆயிரம் பேர் பி. ஏ., எம். ஏ. பாஸ் செய்துவிட முடியும்; ஆனல் ஆயிரத்தில் ஒருவர்தான் சிறந்த கலைஞராக வரமுடியும் என்பதை உணர்ந்து விட்டேன். என்னை மன்னியுங்கள். இனி உங்களுக்கும் உங்கள் இசைக்கும் நான் அடிமை" என்ருள பணிவுடன்.

அடுத்த எட்டாம் நாளே சங்கத் தலைவி வசந்தாவுக்கும் பிரபல பாடகர் சாரங்கனுக்கும் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது. அதையொட்டி சங்கத்தில் கான வித்வான் சாரங்கனின் இசைக் கச்சேரி நடைபெற்றது என்று கூறவும் வேண்டுமோ !

# ஒலிப் பதிவாளரை மறந்து விடாதீர்கள்!

**பி. கே. விசுவநாதன் (பிரதம ஒலி இன்ஜினீயர், பிலிம்ஸ் டிவிஷன்)**

ஓர் நல்ல படத்தைப் பார்த்து விட்டு வந்தீர்களானல். உடனே அதை டைரக்ட் செய்தவருக்கும் அதில் நடித்தவர்களுக்கும் உங்கள் உள்ளம் நன்றி தெரிவிக்கிறது; பாராட்டுரை வழங்குகிறது!

சில சமயம், கதையும் நன்ருக இல்லை; நடிப்பும் நன்ருக இல்லை; இருப்பினும் இந்தப் படம் நன்ருக ஓடுகிறதே என்று வியக்கின்றீர்கள். பிறகு 'கொஞ்சம் பாட்டு கேட்கும்படியாக இருப்பதால்தான் இது ஓடுகிறது' என்று சமாதானம் செய்து கொண்டு சும்மா இருந்து விடுகிறீர்கள் !

ஆம், ஒலிப்பதிவாளரின் காரணமாகத்தான் படம் இம்மட்டுக்கும் ஓடியிருக்கிறது என்ற நினைவே பொதுவாக இருப்பதில்லை.

நமது கிராமங்களில் கூடாரச் சினிமாக்களில் காட்டப்படும் படங்களைப் பார்த்திருக்கிறீர்களோ என்னவோ ! படம் ஓடிக்கொண்டே யிருக்கும்; திடீர் என்று பேசும்படம் மௌனப்படமாகி விடும்! திரையில் நடிகர்களும் நடிகைகளும் கையையும் காலையும் ஆட்டுவார்கள்; உதடுகளும் அசையும். ஆனல் ஒலி மட்டும் வராது. அப்போது பார்க்க வேண்டுமே கூடாரத்தில் எழக்கூடிய கூச்சலையும், குழப்பத்தையும், கலாட்டாவையும். இதிலிருந்து ஒலி இல்லையென்ருல் சினிமா பார்க்க முடியாது என்பது தெளிவாகி விட்டதல்லவா !

கண்ணுக்கும் காதுக்கும் அவ்வளவு நெருங்கிய தொடர்பு இருந்து வருகிறது. கண்ணுக்குக் காட்சி யளிக்கும் படம் ஒலியுடன் ஒத்து வந்தால்தான் முழுப் பயனும் அடைய முடிகிறது.

ஆனல் சினிமா ஒலிப்பதிவு வேலை மிகவும் நுட்பமும் கலைத்திறமையும் வாய்ந்த வேலையாகும். சினிமாவில் தோன்றும் நடிகைகள் நடிகர்கள் பேசாத பாடாத சமயங்களும் பல உண்டு. உதாரணமாக வனத்தில் மௌனமாக, கவலையில் ஆழ்ந்து கதாநாயகனும் நாயகியும் நடந்து செல்லும் காட்சி ஒன்று வருகிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். கதாபாத்திரங்கள் மௌனமாக இருந்தாலும் வனம் மௌனமாக இராதல்லவா! பட்சிகள் கூச்சலும், மிருகங்கள் உருமலும் கேட்கலாம் அல்லவா! இத்தகைய ஒலிகளைக் கற்பனைத் திறத்தோடு சேர்க்க வேண்டிய பொறுப்பு ஒலிப் பதிவாளரது ஆகிவிடுகிறது.



பி. கே. விசுவநாதன்

இப்பொழுதெல்லாம் நமது நடிகைகளும் நடிகர்களும் சினிமாவில் இரவல் குரலில் பாடுவது சகஜமாகி விட்டது. மயிலின் சாயலும் குரலும் பெற்ற நடிகையைக் குயிலின் குரலில் பாட வைக்கும் வித்தையைச் செய்பவர் இந்த ஒலிப்பதிவாளர்தான் !

இத்தகைய பெரும் சாதனைகளைச் செய்யும் ஒலிப்பதிவாளரைத் தயவு செய்து மறந்து விடாதீர்கள் என்று தான் கேட்டுக் கொள்ளுகிறேன்.




பேனா தயாரிப்பதில் ஓர் புதிய சொந்த சாதனையில் உருவாகியது தான் கோல்ட்-சீல் டோரிக் பேனா. கோல்ட் சீல் கொண்ட ஒவ்வொரு டோரிக் பேனாவும் தரத்தில் சிறந்தது என்பதுடன் எவ்விதஇடையூறின்றி சுலபமாக எழுதும் என்பதற்கும் ஓர் உத்தரவாதம்.

ஒவ்வொரு கோல்ட் சீல் பேனாவிலும் ஒரு பெரிய 14ct. தங்கநிப்பு உள்ளது. தாராளமான மசி சப்ளை. அழகான பரிசு அளிக்கும் பெட்டியுடன் கூடியது. ரெகுலர், செல்ப்-பில்லர், ஏரோ மெட்டிரிக் மாடல்களில் கிடைக்கும். பேனாக்களில் மிக கனமான கோல்ட் சீல் டோரிக் பேனாவே பரிசு கொடுப்பதற்கு சிறந்தது.

உங்களது வாடிக்கைக் கடைகளில் காட்சிக்கும் விற்பனைக்கும் தற்போது இருக்கிறது. கீழ்க்கண்ட விலாசத்திலிருந்தும் பெறலாம்.

**DORIC PRODUCTS**

Hornby Road, Bombay - 1.

98-1/ MAS

---

லக்ஷக்கணக்கான மக்கள் கண்டுகளித்த எங்கள் கண்காட்சியின் சித்திரங்களை புஸ்தக ரூபமாக ஆக்கித்தர வேண்டுமென்ற பொதுமக்களின் வேண்டுகோளுக் கிணங்கி எங்கள் விசேஷ

# சித்திர மலரை

வெளியிடுகிறோம்

6 மூவண்ண சித்திரங்களும், 2 ஆறு வண்ண சித்திரங்களும் மற்றும் குறள், அகநானூறு, புறநானூறு, சீவக சிந்தாமணி, சிலப்பதிகாரம், காந்தி அடிகளின் வாழ்க்கை, கட்டபொம்மன் முதலிய 70 சித்திரங்கள் கொண்ட அழகிய மலர்.

தமிழ்நாட்டு புலவர் பலரும், அறிஞர் பலரும் தீட்டிய சித்திர விளக்கங்களும், கட்டுரைகளும் கொண்ட தமிழ்நாட்டில் வெளிவரும் முதல் மலர்

விவரங்களுக்கு எழுதவும்:

ஆர்ட்டிஸ்ட்ஸ்

**பானு பிரதர்ஸ்**

2, தாயார் சாகிபு தெரு, சென்னை-2

---

**புது வருஷச் சலுகை**

**பாதிக்கும் குறைந்த விலைகளில்**

15 தினங்கள் மட்டும்

5 வருஷ உத்திரவாதம்




15 ஜுவல்ஸ் வாட்டர் ப்ரூப் ... 40/-
15 ஜுவல்ஸ் வாட்டர் ப்ரூப் இல்லாதது 32/-




5 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு ... 28/-
15 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு ... 42/-

ஜெண்ட்ஸ் & லேடீஸ்




4 ஜுவல்ஸ் 16/- உயர் ரகம் ... 18/-
15 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு ... 40/-
பாக்கெட் வாட்ச் 10/- உயர் ரகம் 12/-

**FREE INDIA WATCH Co.**

POST BAG No. 6724. - CALCUTTA - 7

மகா மகோபாத்யாயர் உ. வே. சாமிநாதய்யர் அவர்களின் நூற்றாண்டு விழா சென்னையில் பெப்ருவரி 18, 19, 20-ந் தேதிகளில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. 20-ந் தேதி ராஜாஜி மண்டபத்தில் கவர்னர் ஸ்ரீ பிரகாசா அவர்களின் தலைமையில் நடைபெற்ற நிகழ்ச்சிகளை இந்தப் பக்கத்திலுள்ள படங்களில் காணலாம்.

1. சென்னை கவர்னர் ஸ்ரீ பிரகாசா பேசுகிறார். மேடையில் கல்வி அமைச்சர் திரு சுப்ரமணியம், திரு தெ. பொ. மீனாட்சி சுந்தரனார், ராஜா முத்தைய செட்டியார் ஆகியோர் அமர்ந்திருக்கிறார்கள்.

2. ராஜாஜி பேசுகிறார். "இரண்டு மூன்று கமிட்டிகளை ஏற்படுத்தி, ஒவ்வொரு கமிட்டியும் பல நிபுணர்களை வைத்து, தற்காலத்தில் ஒரு விதமாகச் செய்து முடிக்கும் காரியத்தை ஒருவராகவே அந்தக் காலத்தில் அருமையாக உ. வே. சாமிநாதய்யர் செய்து முடித்தார்கள்" என்று பாராட்டுகிறார் ராஜாஜி. "நான் படித்த பங்களூர் நகரத்தில் தெலுங்கு அல்லது கன்னடம் பேசும் ஜனத்தொகையைக் காட்டிலும் தமிழ் பேசும் ஜனத்தொகை தற்போது பெருந்தொகையாகி விட்டது. இந்தக் காரணத்தினால் அதைத் தமிழ் ராஜ்யத்தோடு சேர்ப்பதற்காகச் சொல்லுகிறேன் என்று எண்ணி விடாதீர்கள்" என்று ராஜாஜி நகைச்சுவையோடு குறிப்பிடுவதைப்படத்தில்காணலாம். அருகில் திருமதி ருக்மிணி தேவியும் பேராசிரியர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்களும் ராஜாஜியின்நகைச்சுவையை அநுபவித்து மகிழ்வதைக் காணலாம்.

3. தமிழ்த்தாத்தா நூற்றாண்டு விழாவுக்கு உற்சாகத்தோடு திரளாக வந்து குழுமியிருந்த தமிழர்கள்.



# குப்பண்ணுவும் கலையும்

மீனகு

"என்ன! குப்பண்ணு! எங்கே, ஆளே கண்ணிலே தென்படலே! எங்கேயாவது லண்டனுக்கு இண்டனுக்கு, காமன்வெல்த் கான்பரன்ஸுக்குப் போய் விட்டாயோ என்று நினைத்தேன்!" என்று சில வாரங்களாகக் காணாத குப்பண்ணு மீண்டும் தரிசன மளித்ததும் கேட்டேன்.

"எங்கே அப்பா! உள்ளூரிலேதான் இருந்தேன்! ரொம்ப 'பிஸி'யா இருந்தேன். மூச்சு விட டயமில்லே" என்றான் குப்பண்ணு.

"முகத்தைப் பார்த்தாலே 'பிஸி'ன்னு தெரிகிறது! ரொம்ப அலைச்சலோ! என்ன அப்படி இப்போ சமீபத்திலே உன் கவனத்தைக் கவர்ந்தது!" என்றேன்.

"ஒண்ணுமில்லே, அப்பா! ஏதோ இப்படி, நம்ம ஊருக்குத்தான் யாரேனும் வந்துகொண்டே இருக்கிறார்களே! சமீபத்திலே நம் ஊரே கலைப் பிரளயமாகி வருகிறதே!" என்றான்.

"ஓ! சரிதான்! அதிருக்கட்டும்! ஸோவியத் கலாசார தூதுகோஷ்டியை என்ன செய்தாய்! வரவேற்று வழியனுப்பி விட்டிருப்பாயே!" என்றேன். என் ஊகம் சரிதான்.

"ஆமாம்! அது ஒரு கோஷ்டி வந்தது" என்றான்.

"ஆனால் போன வருஷம் வந்த கோஷ்டி போல், அல்லது சீனக் கலை கோஷ்டிபோல், இவர்கள் ஒன்றும் ஆட்டம் பாட்டம் ஒன்றும் இல்லை போலிருக்கிறதே!" என்றேன்.

"இல்லை! இப்போது வந்த கோஷ்டியில், பத்திரிகைக்காரர்கள், பாட்டு கவனம் செய்பவர், சிற்பக் கலை நிபுணர், நாடகக்கலை நிபுணர், எழுத்தாளர் இப்படிப்பட்டவர்கள்தான் வந்தார்கள். நம்முடைய ஆட்டம், பாட்டுகளை அவர்கள் பார்த்துக் கேட்டு விட்டுப் போனார்கள்!"

"இந்த மாதிரி கலை கோஷ்டிகள் மூலம் ரஷ்ய இந்திய நல்லுறவு பலப்படும் இல்லையா!" என்றான்.

"ஆமாம்! ஹிந்தி-ரூஸி பாய் பாய்!" என்று தெரிந்த மெட்டில் பாட்டு அடியெடுத்தேன்!

"ஏது நீயும் கவியாகி விட்டாயோ! அது சரி. இந்த ரஷ்ய கலைக் கோஷ்டி வந்தார்களா! வந்து இரண்டரை நாள் இங்கு தங்கினார்களா!........" என்று குப்பண்ணு வரலாறு ஆரம்பித்தான்.

"இரண்டரை நாளில் நமது கலையைக் கரைத்துக் குடித்து விட்டு அப்படியே அஜீரணத்துடன் போயிருப்பார்கள்!' என்றேன்.

"அந்த அறுபது மணி நேரத்தில் அவர்களுக்கு அரை நிமிஷம் மூச்சு விட முடியாமல் நம் கலாசாரம், பண்பாடுகள் எல்லாவற்றையும் வைத்துத் திணித்து அனுப்பி விட்டோம். வந்த அன்றைக்கே ராஜபவனத்தில் தேநீர் விருந்து, இசை விருந்து எல்லாம் நடந்தன. நம்முடைய இனிய சங்கீதத்தை அவர்கள் கேட்க அன்று வாய்த்தது. ஒரு மணி நேரத்துக்குள் நல்ல கானாமிருதத்தைப் பருகினார்கள். ஆனந்த பரவசமானார்கள். மறுநாள் மகாபலிபுரம், காஞ்சீபுரம் எல்லாம் போய்ச் சுற்றிப் பார்த்தார்கள் திருக்கழுக்குன்றம் பக்கத்தில் நடக்கும் நமது கிராமச் சீரமைப்பு வேலைகளையும் கண்டு வியந்தார்கள். மூன்றும் நாள் வாஹினி ஸ்டூடியோவுக்குச் சிலர் போயிருந்தார்கள். அங்கு, அந்த ரஷ்ய பாட்டுக்கவி ராஜபார்ட் உடைகளைப் போட்டுக் கொண்டு பார்த்தார். வாஹினியாரின் வாத்திய சங்கீதம் கேட்டார்கள். படக் காட்சிகள் பார்த்தார்கள். பிறகு தேனாம்பேட்டைக் கண்காட்சியை எல்லோரும் பார்த்தார்கள். அதில் கலைக் கண்காட்சி மண்டபத்தில் திகைத்து நின்றார்கள்.

"பிறகு நமது யூனிவர்ஸிடியைப் பார்த்தார்கள். உப அத்தியக்ஷகர் டாக்டர் லக்ஷ்மணஸ்வாமி முதலியார் அவர்களைச் சந்தித்து நமது கல்வி விஷயங்களைப் பற்றிக் குடைந்து குடைந்து கேட்டார்களாம். அவரும் மிகவும் பொறுமையாகவும் பொருத்தமாகவும் எல்லாவற்றையும் விளக்கிச் சொன்னாராம். பிறகு நமது ஓவியர்களைச் சில நிமிஷங்களுக்குச் சந்தித்துப் பேசினார்கள். மாலையில் நமது மேயர் கார்ப்பரேஷன் அழகான தோட்டத்தில் ஒரு விருந்துபசாரம் கொடுத்தார். அதில் கோஷ்டித் தலைவர் பேசிப் பிளந்து தள்ளினார். பிறகு நமது உள்ளூர் இந்தோ-ஸோவியத் நல்லுறவு நண்பர்கள் கூட்டத்தில் போய்ப் பேசித்

கவர்னர் ஸ்ரீ பிரகாசா அவர்கள் ரஷ்யக் கலைஞர்களுக்குக் கொடுத்த தேநீர் விருந்தில் ராஜாஜி அவர்கள் கலந்து கொண்டு அவர்களுடன் கலைகளைப் பற்றி விவாதித்தார்.





குமாரவிஜயம் நாடகத்தைப் புகழ்ந்து பேசுகின்றனர் ரஷ்யக் கலைஞர்கள். தலையில் குல்லாவுடன் நிற்பவர்தான் நவாப் ராஜமாணிக்கம்.

தன்னினார்கள். ஸ்ரீ கோபிநாத் நடனக் கலை கற்கும் விதத்தைச் செய்து காண்பித்தார். அன்று மாலை அதே சமயத்தில் அந்தச் சிற்ப நிபுணரும் நாடக நிபுணரும் நவாப் ராஜமாணிக்கத்தின் குமார விஜயத்தைப் பார்த்தார்கள்.''

''அது என்ன அவர்களுக்குப் புரிந்திருக்கப் போகிறது!'' என்றேன்.

''அதுதான் நீ நினைப்பது தவறு! இந்த நாடகத்தைப் பார்த்து அப்படியே அந்த இரண்டு ரஷ்ய நிபுணர்களும் அசந்து போய் விட்டார்கள். சாப்பாட்டைக்கூட மறந்து விட்டு இரவு ஒன்பதரை மணி வரையில், கடைசிக் காட்சி முடியும் வரையில் இருந்து நவாப்பையும் அவரது இளம் நடிகர்களையும் பாராட்டி விட்டுப் போனார்கள். பிறகு கூட தங்கள் சகாக்களிடம் போய், 'பிரமாதம் பிரமாதம்' என்று நாடகத்தைப்பற்றி வருணித்தார்களாம்!'' என்று தானே நாடகத்தை நடத்தியவன் போல் பூரித்தான் குப்பண்ணா.

''இன்னொரு விஷயம் தெரியுமா! இந்தக் கோஷ்டியில் வந்தவர்கள் பள்ளிக்கூட மாணவர்கள்போல் அவர்கள் கண்டது கேட்டது எல்லாவற்றையும் விடாமல் குட்டை கோட்டு புஸ்தகத்தில் எழுதிக் கொண்டு போனார்கள்!'' என்ற சங்கதியையும் அதிசயமாகச் சொன்னான்.

''ஆமாம்! அவர்கள் நாட்டில் போய்ப் பரீட்சை இருக்குமல்லவா! இங்கு தெரிந்து கொண்டதை அங்கு ஒப்பிக்க வேண்டாமா!'' என்று நான் ஹாஸ்யமாகச் சொன்னேன்.

''அடேடே! பார்த்தாயா! முக்கியமான சம்பவத்தைச் சொல்ல மறந்து விட்டேன்! ஞாயிற்றுக் கிழமை மாலை நம் கதம்ப நிகழ்ச்சி ஒன்று மியூஸியம் தியேட்டரில் அவர்களுக்காக வைத்தார்களே! அதற்கு வந்திருந்தாயா நீ!'' என்றான்.

''இல்லையப்பா! நம்மை யார் கூப்பிடுகிறார்கள்! அங்கும் பிரமாதம்தானே!'' என்றேன்.

''ஆமாம் சந்தேகமென்ன! ஸ்ரீமதி கமலா லக்ஷ்மணன் பரதநாட்டியம், ரேடியோ வாத்திய கோஷ்டி, கர்நாடக சங்கீத கலாசாலை மாணவிகள் கோஷ்டி கானம், பூதலூர் கோட்டு வாத்தியம், ராஜமாணிக்கம் பிள்ளைவாள் பிடில் கச்சேரி, ராஜரத்தினம் பிள்ளைவாள் நாகஸ்வரம், கோபிநாத் கதக்களி முதலிய எட்டு அயிட்டம்கள்! கன கச்சிதமாக இரண்டரை மணி சாவகாசத்தில் டாண் டாண் என்று முடித்தார்கள். அதில் பொம்மலாட்டம் கன ஜோர். பிரமாத அப்ளாஸ் அதற்கு. இதில் ஒரு விசேஷம் தெரியுமோ! இந்த முறை சர்க்கார் ஏற்பாடெல்லாம் கல்வி இலாகாவே செய்து விட்டார்கள்'' என்றான் குப்பண்ணா.

''ஓ! அதனால்தான் அவ்வளவு தடபுடல் இல்லாமல் காதும் காதும்வைத்தாற்போல் நடந்து விட்டதாக்கும்! வந்தவர்களைப் பத்திரமாக ஊருக்கு அனுப்பி விட்டாயோ!'' என்றேன்.

''அவர்கள் இன்னும் கொச்சி, பெங்களூர், பம்பாய் எல்லாம் போய்ப் பார்த்துவிட்டு ஊருக்குப் போவார்கள்'' என்றான்.

''அதெல்லாம் சரி, கலை என்று வந்தவர்கள் 'பீஸ் பீஸ்' என்று பீஸ் பீஸா பிய்த் தெடுத்துக் கொண்டிருந்தார்களாமே!'' என்றேன்.

''ஆமாம்! இந்தியாவும் ரஷ்யாவும் சமாதானத்தை எப்படி ஒரே மனதாக விரும்புகின்றன என்பதை அடிக்கடி ஆணித்தரமாகச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். நல்லுறவில் இது ஒரு முக்கிய அம்சமில்லையா!'' என்றான்.

''உண்மை! உண்மை!'' என்று ஆமோதித்து எங்கள் நல்லுறவைக் காப்பாற்றிக் கொண்டேன்.

''அதிருக்கட்டும். நமது சென்னை மவுண்டு ரோடு ஒரு கலையழகு பெற்று வருகிறதே, பார்த்தாயா!'' என்று பேச்சை மவுண்ட்ரோடு பக்கம் திருப்பினேன்.

''என்னப்பா அது! கலையலங்காரம்! எக்ஸிபிஷன் கேட்டுகளைச் சொல்கிறாயா!'' என்றான்.

''இல்லையப்பா. மவுண்ட் ரோட்டில் யாரோ தேவர்கள் இரவில் வந்து சதுரங்கம் ஆடுகிறார்களாம். மறந்து போய்ச் சதுரங்கக் காய்களை அங்கேயே வைத்து விட்டு மறைந்து விடுகிறார்கள் போலிருக்கிறது. வெள்ளை கறுப்பு வர்ணங்கள் தீட்டிய தகர பீப்பாய்களைப் பார்க்கவில்லையா, நீ!'' என்றேன்.

''ஓ, அதுவா! தார் பீப்பாய்கள் வரிசையாக அங்கங்கே அடுக்கி வைத்திருக்கிறதே, அதைச் சொல்கிறாயா! மோட்டார் ஓட்டிகளுக்கு சர்க்கஸ் பயிற்சி அளிப்பதற்காகவே வைத்திருக்கிறார்கள்! இல்லாவிட்டால் நமது மோட்டார்காரர்கள் டக்கோட்டா விமானங்கள் போல் பறக்க ஆரம்பித்து விடுகின்றனராம். அதைத் தடுக்கத்தான்...'' என்றான் குப்பண்ணா.

''இல்லை; ஒரு வேளை தார் பீப்பாய்களைத் திறப்பதற்கு முடியாமல் மோட்டார்கார் அல்லது லாரி மோதித் திறக்க வைக்க ஒரு சூழ்ச்சியாகவும் இருக்கலாம்...'' என்று சொன்னேன்.

''மவுண்ட் ரோட்டில் அப்படியாவது தார் பீப்பாய்களாவது கண் திறந்து தார் வழிந்தால் அந்தக் குழிகளாவது நிரம்பும்'' என்றான் குப்பண்ணா.

''உனக்கும் எனக்கும் என்ன அந்தக் கவலை! நாம்தான் 'வாக்கஸ் ஆல்' பிரயாணிகளாயிற்றே! நடை பிராணிகளுக்கு எது இருந்தால் என்ன!'' என்றேன்.

''அடேடே! உன்னோடு பேசிக் கொண்டே நேரம் போனது தெரியவில்லை. ஒரு முக்கியமான பார்ட்டிக்கு அழைப்பு வந்திருக்கிறது. வீட்டுக்குப் போய்க் குல்லாவை மாற்றிக் கொண்டு போக வேண்டும்'' என்று என்னை மவுண்ட் ரோடு சந்தியில் விட்டு விட்டுப் போய் விட்டான் குப்பண்ணா.

சங்கின் குழலோசை எல்லோர்க்கும் இனிமை தரும்



# ஜெமினி ஸ்டூடியோஸ்

இன்பமளிக்க இனிய
படங்களைத் தயாரிப்பவர்கள்

# வெள்ளித்திரை ஹாஸ்யம்

## சினிமா பார்க்கிறர்?







"நீங்கள் என்ன நட்சத்திரம்?"
"சினிமா நட்சத்திரம்."
"அப்படியா. ரொம்ப நல்ல நட்சத்திரமாச்சே! அதற்கு ஜாதகமே வேண்டாம்!"




"'டாக்கியை' எங்கள் தாத்தா வெறும் 'மூவி' யாகத்தான் பார்க்கிறுர். அவர் செவிடு."




"அந்தப் படத்தில் ஒன்று வரும் என்று என் தோழி சொன்னுள். அவளுக்குத்தான் என்ன முன் யோசனை! அவள் சொன்னபடியே வந்து விட்டது."
"என்ன?"
"இடைவேளை!"

"இந்தப் படம் குழந்தைகளுக்கு ரொம்ப தமாஷான படம்!"



# சிலர் அனுபவம்!

படம் எடுக்கும்போது!






சாமா






படம் ஓடும்போது!




"நிஜமாக நான் சொன்னது காதில் விழுந்ததா? இல்லாவிட்டால் சும்மா நடிக்கிறாயா?"

"நிஜமா விழவில்லே. நடிப்புக்குப் பணம் வாங்காமல் சும்மா நடித்து விடுவேனா?"



"கயிறு அறுந்து போனால் என்ன பண்ணுவது?"

"அதற்காக நீங்கள் ஒன்றும் கவலைப்பட வேண்டாம். வேண்டிய அளவு கயிறு கொண்டு வந்திருக்கிறோம்!"



"கொஞ்சம் பணத்தை வெள்ளித் திரையில் போடலாமென்று பார்க்கிறேன்."

"உனக்கு இருக்கும் பணத்துக்கு வெள்ளித் திரையில் என்ன, தங்கத் திரையிலேகூட போடலாம்; போடு! போடு. போடுன்னு போடு!"

# சூப்பர் கம் - டிப்டு டயர்கள்




பயர்ஸ்டோன் சூப்பர் கம்-டிப்டு டயர்கள் அலாதியான தொந்தரவற்ற உழைப்பும், கூடுதலான மைலேஜும் கொடுக்கிறது என்பது நிரூபிக்கப் பட்டிருக்கிறது. இருந்தும் சாதாரண டயர்களை விட விலை அதிகமில்லை.

## பத்திர மளிப்பவை

ஏனெனில்

பயர்ஸ்டோன் சூப்பர் கம்-டிப்டு டயர்கள் மிக வலுவானவை. வேறெந்த சாதாரண டயரும் இணையாகாத அளவுக்கு சிராய்ப்பையும் வெடிப்பையும் எதிர்க்கும் சக்தி வாய்ந்தது

எனவே உங்கள் ஊர் பயர்ஸ்டோன் டீலரை இன்றே காணுங்கள்

**Firestone**

**பயர்ஸ்டோன்**

## சூப்பர் கம் - டிப்டு டயர்கள்

நினைவிருக்கட்டும் - ஒரு புது டயருக்கு ஒரு புது டியூப் அவசியமே.




அத்தியாயம் 43

## இன்பக் கனவு

வக்கீல் குடும்பத்தைப் பற்றி எழுதிக் கொண்டிருந்தேன். அந்த வீட்டிலேயே ரொம்ப யோக்கியமானவர், கண்யமானவர் என்று நானும் என் அருமைத் தந்தையும் கருதிய ஸ்ரீ பத்மநாபன் அவர்கள் ஒரு பசுத்தோல் போர்த்த புலி என்பதைப் பல நாட்களுக்குப் பிறகு தான் தெரிந்து கொண்டேன். டைரக்டர் ராஜாராம் பத்மநாபனை 'ருத்ராக்ஷப் பூனை' என்று குறிப்பிடுவது வழக்கம். உண்மையிலேயே அவருடைய கண்கள் பூனையின் கண்களைப் போலத்தான் இருக்கும். இலேசான மஞ்சள் நிறமுடைய கண்கள். கழுத்தில் எப்போதும் ருத்ராக்ஷமும் இருக்கும். அதனால் அது பொருத்தமான பெயராகவே இருந்தது.

ஆனால் இதெல்லாம் விஜயராம பட்டினத்தில் நாங்கள் அவர்களைச் சந்தித்த போது எனக்குத் தெரியாது. அப்போது எனக்கு அவர்களிடம் உண்டான மதிப்பு சொல்லி முடியாது. ஒவ்வொரு விஷயத்திலும் அந்தக் குடும்பத்தாரைப் போல் நானும் இருக்க விரும்பினேன். என் அருமைத் தந்தையிடம் எனக்கு இருந்த அளவிலாத அன்பையும், மதிப்பையும் மீறிக்கொண்டு, அவர் பட்டிக்காட்டுக் கட்டுப் பெட்டியாய் இருப்பது நெஞ்சை உறுத்தும். நான் ஷீலா மாதிரி அடியோடு மாறுவதற்கு அவர் சம்மதிக்க மாட்டார் என்றும் எனக்கு நன்றாகத் தெரிந்திருந்தது.

ஆனால் வக்கீல் பத்மநாபனிடத்தில் அப்போது எனக்கும், என் தந்தைக்கும் மிகுந்த மதிப்பு ஏற்பட்டது. எனக்கு ஷீலாவின் தந்தை என்பதால் ஏற்பட்டது. என் தந்தை அவர் மிகுந்த படிப்பாளி என்பதாலும், கடவுள் நம்பிக்கை உள்ளவர் என்பதாலும் ரொம்ப மதிப்பு வைத்திருந்தார். பத்மநாபன் அடிக்கடி "நம் கையில் என்ன இருக்கிறது? எல்லாம் அவருடைய பொறுப்பு. நாம் அவருடைய கருவிகள் தானே?" என்று சொல்லிக் கொண்டிருப்பார். இது என் தந்தையைக் கவர்ந்ததில் வியப்பில்லை அல்லவா? நல்ல வேளையாக அவர் பத்மநாபனுடைய வேஷம் கலைந்து பார்க்கும் வரை உயிரோடு இல்லை. பார்த்திருந்தால் மனமுடைந்து போயிருப்பார்.

பௌர்ணமி யன்று கடற்கரைக்கு எல்லோரும் சென்று நிலாச் சாப்பாடு சாப்பிட்டோம். வெண்ணிலவு பொழிந்த அமுதக் கிரணங்களின் ஒளியில் உலகமே அலாதியானதொரு சோபை பெற்று விளங்கியதாகத் தோன்றியது. நிலவொளியில் தென்னங் கீற்றுக்கள் செய்த




விந்தை ஏதோ மந்திரவாதியின் ஜாலம் மாதிரி தோன்றிற்று. அலைகள் எழும்பிக் கரையில் மோத வரும்போது பாற்கடல் என்று கூறலாம்போல் பிரமை உண்டாயிற்று. அங்கங்கே வெண் மணலில் தென்னை மரங்களின் நிழல்கள் ஆனந்த நடனம் ஆடின. ஏதோ கனவுலகில் சஞ்சரிப்பதாகத் தோன்றியது அக்காட்சி



நான் மெதுவாக ஒரு பாட்டை முனகினேன். ஷீலா என்னை நன்றாகப் பாடும்படி வற்புறுத்தினாள். நானும் பாடினேன்.

வெண்மணல் பரந்த நதிக் கரைதனிலே
தண்மதி விரித்த வெள்ளி நிலவினிலே—நான்
கண்ட அற்புதம் என்னசொல்வேன் சகி?—எந்தன்
கண்கள் செய்த தவம் நவில்வேன் சகி.

இன்பக் கனவொன்று துயிலினில் கண்டேன் சகி—அந்த
நினைவினில் பரவசம் கொண்டேன் சகி.

தண்டை சதங்கை கொஞ்ச வந்தானே—நீல
கொண்டல் மேனி திகழ நின்றானே—வெண்ணெய்
உண்டவாயில் முறுவல் செய்தானே—அந்த
இன்பத்தில் என்னை மறந்தேன் சகி—பேர்
இன்பம் அதுவென உணர்ந்தேன் சகி.

கண்ணன் குழலினை அழகாய் கையிலெடுத்தான்—அதை
இதழினில் பொருத்தி இசை தொடுத்தான்—தெய்வத்
தமிழென அமுதக் கீதம் பொழிந்தான்—அப்போ
அனலில் மெழுகாய் உள்ளம் உருகியதே—அந்த
ஆற்று மணலும் நீராய்ப் பெருகியதே. (இன்பக்)

பாட்டை பத்மநாபன் மிகவும் ரஸித்தார். ரமேஷ் அருகில் வந்து, "எக்ஸலெண்ட், இந்து! ரொம்பப் பிரமாதமாகப் பாடு




கிறாயே! சினிமா 'ஸ்டார்ஸ்' கெட்டார்கள்" என்றார். எனக்குப் பெருமை தாங்கவில்லை. பிறகு பத்மநாபன் சொல்லவே, அண்ணனும் தங்கையுமாக ஏதோ ஹிந்துஸ்தானி கீதங்கள் பாடினார்கள். அப்பாவுக்கும் எனக்கும் ஒன்றுமே விளங்கவில்லை. ஆனால் இருவருக்கும் இனிய குரல் இருந்தது. ஆகவே நன்றாக இருந்தது.

இப்படியெல்லாம் உற்சாகமாகப் பல நாட்கள் உருண்டோடி விட்டன. என் தந்தைக்கு விஜயராம பட்டினத்தை விட்டுப் புறப்பட மனமே வரவில்லை. முக்கியமாகப் பத்மநாபனை விட்டு வரவே அவர் விரும்பவில்லை. எப்போதும் அவர்கள் பேசிக் கொண்டே இருந்தார்கள். என் தந்தை யாருடனும் அவ்வளவு பேசி நான் அதற்கு முன்னால் பார்த்ததேயில்லை.

எனக்கோ கேட்கவே வேண்டாம். நானும் பத்மநாபனின் குடும்பத்தில் ஒருத்திமாதிரி ஆகிவிட வேண்டுமென்று தோன்றியது. கோமளவல்லி அம்மாளும் என்னிடம் மிகப் பிரியமாக இருந்தார். அவர்களுடைய நட்பை நான் பெறற்கரிய பேறென்று நினைத்தேன். ஆனால் அதெல்லாம் ஒரு இன்பக் கனவாகவே தேய்ந்து மறைந்து விடும் என்று நான் அப்போது அறிந்திருக்கவே இல்லை.

லீலா என்னைத் தங்களுடன் சென்னைக்கு வந்து விட்டுப் போகும்படி

அழைத்தபோது தலைகால் புரியாமல் குதித்தேன். என் தந்தை மந்திரமூர்த்தியிடம் ஓடிச் சென்று நான் சென்னைக்குப் போவதாகக் கூறினேன்.

"சென்னைக்கா! எதற்காக?" என்று கேட்டார் என் தந்தை.

"ஷீலா என்னை வரவேண்டும் என்று வற்புறுத்துகிறாள்."

"சுலோசனா சொன்னால் போதுமா, அம்மா? வக்கீல் சம்சாரம் உன்னை வரச் சொன்னால்தானே போகலாம்? அவர்களுக்கு உன்னை அழைத்துப்போக விருப்பமிருக்காது."

"ஷீலா சொன்னதை அவள் அம்மா ஒருநாளும் தட்ட மாட்டார்கள். என்னையும் அவர்களுக்கு ரொம்பப் பிடித்துத்தான் இருக்கிறது."

"பிடித்திருப்பதுதான் இன்னும் கவலைக் கிடமானது. கூடப் போனாயானால் அது போய் விடும். நீ ரொம்பக் கஷ்டப் படுவாய், அம்மா."

"என்னப்பா நீங்கள்? எது சொன்னாலும் இப்படிச் சொல்லுகிறீர்கள். அப்படியென்றால் நீங்களும் வாருங்கள். சென்னைக்குப் போவோம்."

"இல்லை, அம்மா! அதுவும் இப்போது முடியாது. எனக்கும் இந்த நல்ல மனிதர்களை விட்டுப் பிரிய மனமில்லைதான். ஆனால் குங்குமத் துறையில் எனக்கு ரொம்ப முக்கியமான காரியங்கள் இருக்கின்றன. சின்னக் கருப்பன்செட்டியார் என்னைச் சபித்துக் கொண்டிருப்பார். அதற்கு நான் ஏதாவது வழி செய்ய வேண்டாமா? இங்கே உட்கார்ந்திருந்தே நாட்கள் வீணாகிப் போய் விட்டன."

"போங்கள் அப்பா! இப்போது சுலோவுடன் சென்னைக்குப் போகா விட்டால் அப்புறம் போனாலும் ஒன்றுதான், போகா விட்டாலும் ஒன்றுதான். எனக்கும் நாலு இடங்களைப் பார்க்க வேண்டுமென்று ஆசையாக இருக்காதா?" என்று சொல்லிக் கொண்டே குழந்தை மாதிரி அழ ஆரம்பித்து விட்டேன்.

பல தடவை வேண்டாமென்று சொல்லிப் பார்த்தார் என் தந்தை. நான் அழுது கொண்டே இருக்கவே கடைசியில் அவருக்கும் மனம் இளகி விட்டது.

"சரிதான். மூஞ்சியெல்லாம் அழுது வீங்கி விட்டது. உனக்கு இஷ்டமானால் போய் விட்டு வா. ஆனால் பத்மநாபன் அனுப்பச் சொன்னால்தான் அனுப்புவேன். அவரைக் கேட்டு விடுகிறேன்."

"அவர் கூப்பிடாமல் நான் போவேனாக்கும். அவர்தான் என்னையும் கூப்பிடச் சொல்லிக் கூறினாராம்."

"உன் இஷ்டம், அம்மா. இருந்தாலும் எனக்கென்னமோ அவ்வளவு சரியாகப் படவில்லை. நல்ல மனிதர்கள்தான். ரொம்பப்பிரியமாக இருக்கிறார்கள். ஆனால் தூரத்துப் பச்சைதான் கண்ணுக்கு அழகு. ரொம்ப நீ அவர்களுடன் நெருங்கிப் பழகுவது அவர்களுக்கு உபத்திரவமாகத் தோன்றிவிடக் கூடாதே என்ற கவலையினால் சொன்னேனே தவிர, நீ சென்னைக்குப் போவதில் எனக்கு என்ன ஆக்ஷேபனை இருக்கப் போகிறது?"




"அவர்கள் ஒன்றும் அப்படிப்பட்ட மனிதர்கள் இல்லை. அந்த மாமி கூட என்னை வரச் சொல்லிக் கூப்பிடுகிறார்கள். நான் செய்யும் காரியங்களையெல்லாம் அவர்கள் எப்படி மெச்சுகிறார்கள், தெரியுமா?" என்றேன்.

எனக்கு ஓலைகளில் விதம் விதமாகக் கூடைகள் முடைவது, பாய்கள் பின்னுவது முதலிய வேலைகள் தெரியும். அன்று நான் ஒரு ஓலைப் பெட்டி செய்து ஷீலாவுக்குக் கொடுத்தேன். மாமி பார்த்து அதிசயித்துப் போய் விட்டார். "என்ன கைத்திறமை இந்து

# THE SAND-GLASS

## served its turn—



மணல் நிரப்பிய கண்ணாடி ஜாடியின் உதவியால் ஒன்று, இரண்டு அல்லது நான்கு மணி நேரம் போன்ற குறுகிய கால அளவுகளை கண்டு பிடிக்க முடிந்தது. ஆனால் அவ்வாறு நேரத்தை கண்டுபிடித்த பின்பு கண்ணாடி ஜாடியை திருப்பி வைக்க வேண்டியதாக இருந்தது.

இன்று ஒரு நல்ல கைக்கடியாரத்தினால் சுலபமாக நேரத்தை அறிய பழக்கமுடைய நாம், மேற்குறிப்பிட்ட முறை எத்தகைய விநோதமானதென ஆச்சரியமடைகிறோம்.



The KEEPSAKE
NEW SHAPE

| | |
|---|---|
| Everbright Steel | Rs. 145 |
| Rolled Gold ... | Rs. 172 |
| 9-ct. Gold ... | Rs. 220 |
| 18-ct. Gold ... | Rs. 305 |

வெஸ்ட் எண்ட் கடியாரங்கள் அதன் உண்மை உழைப்பால் பிரசித்தி பெற்றிருக்கிறது. அதற்குக் காரணம் அவை செய்யப்பட்டுள்ள வேலைத் திறந்தான். இந்தியாவுக்கென விசேஷமாகத் தயாரிக்கப்படும் வெஸ்ட் எண்ட் கடியாரங்கள் உறுதியும், அழகிய தோற்றமும், விலைக்கேற்ற மதிப்பும் ஒருங்கே கொண்டு சிறந்து விளங்குகிறது. டயலின் மேலுள்ள எங்கள் முழுப் பெயரைப் பார்த்து வாங்குங்கள்.

***Accurate timing today depends on***

# WEST END WATCHES



***Write for FREE Catalogue***

**WEST END WATCH CO. BOMBAY AND CALCUTTA**

## ஜம்மியின் லிவர்க்யூர்

குழந்தைகளின் ஈரல், குலைக்கட்டிகளுக்கு



### அறிவிப்பு

பம்பாயில் எமது ஸ்தாபனத்தின் மற்றொரு கிளைக் காரியாலயத்தை கீழ்க்கண்ட விலாசத்தில் திறந்துள்ளோம் என்ற செய்தியை மிக மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

"ஜோதி சதன்", கிங்ஸ் சர்கிள்
(கிங்ஸ் சர்கிள் ரயில்வே ஸ்டேஷனுக்கு எதிரில்)
ஸியான் ரோடு :: பம்பாய் - 22

17-2-1955 முதல் எமது டாக்டரை மேற்கண்ட விலாசத்தில் கலந்து ஆலோசனை பெறலாம்
ஆலோசனை நேரம்: வார நாட்களில் காலை 8 மணி முதல் 11 மணி வரை
சனிக்கிழமைகளில்: காலை 8 முதல் 11 மணி வரை; மாலை 3 முதல் 5 மணி வரை

வழக்கம்போல் கீழ்க்கண்டுள்ள விலாசத்தில் எமது லிடி கிளை ஆபீஸில் ஆலோசனை பெறலாம்
பரேக் மான்ஷன், 512, சாண்டர்ஸ்ட் ரோடு (டி. டி)
(வல்லபாய் படேல் ரோடு) - போன்: 71893 - பம்பாய் - 4

**ஜம்மி வெங்கடரமணய்யா & சன்ஸ்**

தலைமை ஆபீஸ்: சென்னை - 4

---

பலஹீனத்திற்கும்
உற்சாகமின்மைக்கும்



## Sanatogen

ஸானடோஜன் ஜெர்மன் டானிக்
உணவை சாப்பிடுங்கள்

வுக்கு? நீ எங்களோடு வந்து இருந்துவிடேன். ஷீலாவுக்குத் துணையாகவும் இருக்கும். உன்னிடமிருந்து அவள் எத்தனையோ விஷயம் கற்றுக் கொள்ள முடியும்" என்று சொன்னார்.

நானும் உற்சாகமாக 'வந்து விடுகிறேன்" என்று சொன்னேன். உடனேயே மேரியைக் கூப்பிட்டு அருகில் உட்கார வைத்துக் கொண்டு பாய் பின்னுவதற்குச் சொல்லிக் கொடுக்க ஆரம்பித்தேன். மேரி ரொம்ப சூட்டிகையான குழந்தை. மிக சீக்கிரம் கற்றுக்கொண்டு விட்டாள். 'இந்து, அக்கா! நீ இவ்வளவு கெட்டிக்காரியாக இருக்கயே!" என்று அவள் சொன்னதும் எனக்கு உச்சி குளிர்ந்து போய் விட்டது.

அப்பாவிடம் பேசிவிட்டு நான் நேரே மாமியிடம் போனேன். "மாமி! அப்பாவிடம் நான் உங்களோடு சென்னை வருவதற்கு அனுமதி கேட்டேன். அவர் போகக் கூடாது என்கிறார். உங்களுக்கு உபத்திரவமாக இருக்குமாம்" என்று சொன்னேன்.



தில்லியில் பிப்ரவரி 27உ முதல் ஒரு வாரம் நடக்கவிருக்கும் திரைப்படக் கலை அரங்கின் இரண்டு டைரக்டர்களில் ஒருவர், ஸ்ரீ பிருத்விராஜ் கபூர். சங்கீத நாடக அகாடமியின் நிர்வாக சபை அங்கத்தினர். பாரத மக்களின் உள்ளத்தைக் கவர்ந்த கலைஞர். திறமை நிரம்பிய நடிக; நட்சத்திரம்.

"ஒருநாளும் இல்லை. நீ எங்களோடு வந்தால் சௌகரியமாக அல்லவா இருக்கும்? உன்னோடு பழக ஆரம்பித்த பிறகு மீராகூடப் படுத்துவதைக் குறைத்துக் கொண்டிருக்கிறாளே. நான் உங்க அப்பாவிடம் சொல்லி உன்னை அழைத்துக் கொண்டு போகிறேன். பத்து நாளாவது நீ சுலோசனாவுடன் இருந்து விட்டுத் தான் போகவேண்டும்" என்றார்.

நான் மிகத் திருப்தியுடன் மீராவை அழைத்துக் கொண்டு சமுத்திரக் கரைக்கு விளையாடச் சென்றேன். சுலோசனாவுக்கு முதல் நாள் சமுத்திரத்தில் வெகுநேரம் ஸ்நானம் செய்ததனால் ஜலதோஷம் பிடித்துக் கொண்டிருந்தது. ஆகவே நானும் மீராவும் மாத்திரம் விளையாடச் சென்றோம்.

மீராவிடம் மிக அழகான பந்து இருந்தது. வான வில்லின் வர்ணங்களுடன் அது ஜொலித்தது. அதை எடுத்துக் கொண்டு வந்தாள் மீரா. எனக்கே அதை வைத்துக் கொண்டு விளையாட ஆசையாக இருந்தது. நாங்கள் இருவரும் மணலில் பந்தை வீசி எறிந்து விளையாட ஆரம்பித்தோம். நான் சின்னஞ் சிறு குழந்தையைப்போல் துள்ளி விளையாடிக் கொண்டிருந்தேன். திடீரென்று பந்தை எறிந்தபோது கை வழுக்கிப் பந்து சமுத்திரத்தில் போய் விழுந்து விட்டது. அப்போது அலை பின்னால் போய்க் கொண்டிருந்தபடியால் பந்தும் வெகுதூரம் போய் விட்டது. நான் ஓட்டமாய் ஓடினேன், பிடிக்க. முழங்கால் வரை தண்ணீரில் இறங்கியும் பந்து எட்டவில்லை. இன்னும் ஒரு அடி எடுத்து வைத்தேன். மேரி "அக்கா, அக்கா!" என்று அலறும் குரல் கேட்டது. பிரும்மாண்டமான அலை ஒன்று வந்து மோதிற்று. ஒரு கணம் திகைத்துத் திணறினேன். காலை வேக

மாக யாரோ இழுப்பது போலிருந்தது. நான் சமாளித்துக் கொண்டு திரும்பிக் கரையில், சொட்டச் சொட்ட ஏறினேன். பந்து மீராவின் கையில் இருந்தது. அலை திருப்பிக் கொண்டு வந்து விட்டது. மிதக்கும் பொருள் தானே.

மேரி கலகல வென்று சிரித்துக் கொண்டே "நல்ல காரியம் செஞ்சே, அக்கா! பந்தை எடுக்கறேன்னு சமுத்திரத்திலே விழுந்துடப் பாத்தியே. ஆனா அந்த அலைக்கு எங்கிட்ட ரொம்பப் பிரியம் போலிருக்கு. பந்தும் கிடைச்சுது. நீயும் நல்ல வேளையா விழாமே வந்துட்டே" என்றாள்.

இதைப் போய் மேரி வீடெங்கும் டமாரம் அடித்து விட்டாள். சுலோசனா கவலையுடன் என்னை, "இந்த மாதிரி தனியாகச் சமுத்திரத்தில் போய்க் காலை வைக்கலாமா?" என்று கேட்டாள்.

எல்லோரும் அவரவர்களுக்குத் தோன்றிய முறையில் தங்கள் கவலையைத் தெரிவித்தனர்.

ரமேஷ், "என்ன, இந்து! பந்துக்காகப் பிராணனை விடப் பார்த்தாயாமே! நான் பார்த்திருக்கிற இங்கிலீஷ் ஸினிமாக்களில் கூட உன்னைப்போல் ஒரு வீரக் கதாநாயகியை நான் பார்த்ததில்லை" என்று பரிகசித்தார்.

என் தந்தை மிகவும் கவலையுடன் "என்ன இந்து இப்படி இருக்கிறாயே? கிணற்றில் விழுந்து ஒரு மாதத்துக்குள், சமுத்திரத்தில் விழுகிறேன் என்கிறாயே? உன்னை எப்படி நான் காப்பாற்றுவது? உனக்கு வயதாகவில்லையா அம்மா? உன்னைப் பார்த்துக் கொள்ள உனக்குத் தெரிய வேண்டாமா?" என்று கூறினார்.

நானும் இனிமேல் மிக ஜாக்கிரதையாக இருப்பதாக வாக்களித்தேன்.

நான் சென்னை போக விருப்பியதற்கு இன்னொரு காரணம் இருந்தது. குங்குமத்துறையில் அய்யாக்குட்டியின் உபத்திரவம் சகிக்க முடியாததாக இருக்கும். எப்போதும் அசட்டுச் சிரிப்புச் சிரித்து, என்னிடம் ஏதாவது பேசி ஆத்திரத்தைக் கிளப்பிவிட்டுக் கொண்டே இருப்பார்.

மறுபடியும் முன்பு மாதிரி ஏதேனும் கேள்வி பதில்களுக்கு இடமில்லாமல் செய்து கொள்ள வேண்டுமென்று விரும்பினேன். மேலும் ரங்கதுரையிடமிருந்து ஒரு தகவலும் இல்லை. அது வேறு ஒரு பக்கம் என் நெஞ்சைச் சுட்டுக் கொண்டிருந்தது. இத்தனை யெல்லாம் அவர்களுடன் குதூகலமாகப் பொழுது போக்கிய போதிலும், ரங்கதுரையின் நினைவு மாத்திரம் நெஞ்சை விட்டு அகலவே இல்லை. திரும்பத் திரும்ப 'ரங்கதுரையுடன் இந்த ஊருக்கு வரவேண்டும். "நீங்கள் பார்த்த இங்கிலாந்து தேசம் இதைவிட அழகாக இருக்கிறதா?" என்று கேட்க வேண்டும். அவரைப் பாடச் சொல்லிக் கேட்க வேண்டும்' என்ற எண்ணம் என்னைச் சுற்றி வட்டமிட்டுக் கொண்டே இருந்தது. அப்படிப்பட்ட ஒரு தினத்தை என கற்பனையில் கண்டு நான் பூரித்துப் போய் விடுவேன். சில சமயம் என்னை மறந்து இத்தகைய இன்பக் கனவுகளில் ஆழ்ந்திருப்பேன்.



நானும் ரங்கதுரையுடன் சேர்ந்து வக்கீல் வீட்டுக்கு விருந்துண்ண வருவதாகக் கனவு காண்பேன். நான் என் கற்பனையில் மிக நாகரிகமாக, அலங்கரித்துக்கொண் டிருப்பேன். ரங்கதுரை என்னுடைய அழகைக் கண்டு வியப்பதாக எண்ணுவேன்.

இப்படி நான் ஒரு நாள் கடற்கரை மணலில் உட்கார்ந்து கனவு கண்டு கொண்டிருந்தேன். 'ரங்கதுரை கடலைப் பார்த்துக் கொண்டு ஒரு கல்லின் மீது உட்கார்ந்திருக்கிறார். நான் ஓசைப்படாமல் பின்னால் சென்று அவர் கண்களைப் பொத்துகிறேன். "அடியேன் கண்ணம்மா" என்று அவர் கலீரென்று சிரிக்கிறார்.

என் கனவு கலைந்தது. ஷீலா என் தோளைப்பற்றிக் கொண்டவாறே அருகில் உட்கார்ந்து, "என்னம்மா? யோசனை பலமாக இருக்கிறது? நீ இப்போது இருப்பதைப் பார்த்தால் லைலா மஜ்னுவின் கதையல்லவா ஞாபகம் வருகிறது. உன்னைப் பார்த்தால் மஜ்னுவை நினைத்து உருகும் லைலா மாதிரி இருக்கிறது. எந்



# தி யுனைடெட் கமர்ஷியல் பாங்க் லிட்.,

தலைமை ஆபீஸ்: கல்கத்தா.

செலுத்தப்பட்ட மூலதனம் ரூ. 2 கோடிகள்
ரிசர்வ் நிதி ரூ. 86½ லக்ஷங்கள்

வெளிநாட்டு பிராஞ்சு ஆபீஸ்கள்:
பாகிஸ்தானில்:
சிட்டகாங், கராச்சி.
பர்மாவில்:
ரங்கூன், மோல்மீன், அக்யாப், மாண்டலே, பேஸீன்.
மலேயாவில்:
சிங்கப்பூர், பெனங்.
யுனைடெட் கிங்டத்தில்:
லண்டன்.

ஹாங்காங்கிலும் கூட ஆபீஸ்கள் உண்டு.

ஏஜெண்டுகள்:
உலகமெங்கும்---
ஐரோப்பா, அமெரிக்கா, ஆசியா, ஆப்பிரிக்கா, அஸ்திரேலியா,
எல்லாவித பாங்க் அலுவல்களையும் செய்கிறது

ஜி. டி. பிர்லா,
சேர்மன்.
பி. டி. தாகூர்,
ஜெனரல் மானேஜர்.

INVEST IN OUR
3-YEAR
Cash Certificates

ASP UC-1/55

---

# பாரதீய மியூஸிக் அண்டு ஆர்ட்ஸ் சொஸைடி (REGD.)

மாதுங்கா - பம்பாய்-19

★

## இரண்டாவது ஆண்டு விழா 1955

சங்கீதக் கச்சேரிகளும் நடன நிகழ்ச்சிகளும்
மியூஸிக் ஸ்கூல் உதவி நிதிக்காக
4-3-55 முதல் 9-3-55 வரை

★

4-3-55 வெள்ளிக்கிழமை இரவு
7-30 மணிக்கு ஆரம்ப விழா
8-00 மணிக்கு ஸ்ரீமதி தனம்மாள் & பார்ட்டி

5-3-55 சனி மாலை 6 மணிக்கு
அரியக்குடி ராமானுஜ அய்யங்கார் — பாட்டு
மைசூர் டி. சௌடய்யா — வயலின்
பாலக்காடு மணி —மிருதங்கம்

6-3-55 ஞாயிறு மாலை 5-30 மணிக்கு
மதுரை மணி அய்யர் — பாட்டு
லால்குடி ஜெயராமன் — வயலின்
பாலக்காடு மணி —மிருதங்கம்

7-3-55 திங்கள் இரவு 8 மணிக்கு
டி. ஆர். மகாலிங்கம் & பார்ட்டி — புல்லாங்குழல்

8-3-55 செவ்வாய் இரவு 8 மணிக்கு
கதகளி — நடனம்

9-3-55 புதன் மாலை 5-30 மணிக்கு
குமாரி ஈ. வி. சரோஜா & பார்ட்டி
*(வழுவூர் ராமய்யாப் பிள்ளை சிஷ்யை)*
— பரதநாட்டியம்

★

பம்பாய்-மாதுங்கா நாப்பு தோட்டத்தில்
விசேஷமாக அமைக்கப்பட்டிருக்கும் பந்தலில்

★

கட்டணங்கள்: ஆதரவாளர்கள் ரூ. 100/-
சீஸன் டிக்கெட்டுகள்:
மெம்பர்கள்: ரூ. 35/-, 16/-, 10/-, 5/-
மெம்பரல்லாதார்கள்: ரூ. 50/- 25/- 15/- 10/-
தினசரி டிக்கெட்டுகள்: ரூ. 10/- 5/- 2/8/-

*12 வயதுக்குட்பட்டவர்களுக்கு அரை கட்டணம்*
*கடைசி வகுப்புக்கு மட்டும் ரூ. 1/8/-*

மஜ்னு அந்த பாக்கியத்தைச் செய்திருக்கிருனே? அவன் எங்கேதான் இருக்கிருனே?'' என்ருள்.

''நீ ஷீலா, நான் லைலா போயேன். இதெல்லாம் என்ன பேச்சு ஷீலா?'' என்றேன். ஆனல் அவள் என் மனத்தை அறிந்து கொண்டு பேசியது ஒரு விதத்தில் எனக்கு மகிழ்ச்சியே அளித்தது.

''ஆமாம். சொல்லா விட்டால் தெரியாதோ? இப்படித்தான் ஒன்றும் தெரியாத மாதிரி நடிக்கிறவர்கள் எல்லாரும் ஒருநாள் காதல் கடலில் தலை குப்புற விழுந்து விடுவார்கள். அப்புறம் கரையேறவே முடியாமல் திண்டாடுவார்கள். இந்த மாதிரி எத்தனையோ பேரை நான் பார்த்திருக்கிறேன். நான் ஒருத்திதான் நல்ல வேளையாக இதில் விழாமல் தப்பித்துக் கொண்டு வருகிறேன்.''

எனக்கு என்னையுமறியாமல் கண்ணீர் பொங்கிக் கொண்டு வந்து விட்டது. அதைப் பார்த்த ஷீலா, ''அட! என்ன இந்து? நான் உன்னை ஒன்றும் சொல்லவில்லையே. எதற்கு அழுகிருய்? நான் பொதுவாக அல்லவா பேசுகிறேன்?'' என்று பதற்றத்துடன் கூறினள்.

''இல்லை ஷீலா! நீ சொன்னதற்காக நான் அழவில்லை. அதில் உண்மை இருப்பதால்தான் கண்ணீர் வந்து விட்டது. நீ சொன்ன அந்தக் கடலில் நான் விழுந்து விட்டவள்தான். ஆனல் நான் கரையேறவே விரும்பவில்லை.''

''மை காட்! (அட கடவுளே!) இதற்கா அழுகிருய்? இதில் அழும்படி என்ன இருக்கிறது? நீ பண்ணியது ஒன்றும் தப்பே இல்லையே?''

அவள் இப்படிப் பேசியது என்னை வியப்பில் ஆழ்த்தியது. ''ஷீலா! நீ இப்படித்தான் பேசுவாய். ஒருநாள் நீயும் விழுந்து தத்தளிப்பாய். அப்போது தெரியும். நானவது கரையிலிருந்து விழுந்தேன். நீ மலையிலிருந்து விழப் போகிருய். உன்னுடைய தவிப்பு இன்னும் அதிகமாக இருக்கும்.''

''அப்படியே வைத்துக் கொண்டாலும் எனக்கு நன்ருக நீந்தத் தெரியும். உன்னை மாதிரி அழுது கொண்டிருக்க மாட்டேன். எதற்கு அழுதாய்? சரியாகச் சொல்லு.''

ரங்கதுரை தங்க பாண்டியனுடன் குங்குமத் துறைக்கு வந்தது, என்னைப் பார்த்து ''அஜந்தா சித்திரம்'' என்று சொன்னது, பிறகு என் அன்னை அவரிடம் வாக்குறுதி கேட்டது முதலிய விவரங்களைக் கூறினேன். ஆனல் பெயர் மாத்திரம் சொல்லவில்லை.



வட இந்திய நட்சத்திரங்களில் குணச்சித்திர நடிகை என்று புகழ் பெற்றவர் ஸ்ரீமதி நர்கிஸ். கடல் கடந்து சென்று நமது இந்தியக் கலையின் சிறப்பை அமெரிக்க நாட்டினர் வியந்து பாராட்டும் வண்ணம் நிலைநாட்டிய கலைஞர் குழுவில் முக்கியமானவர்களில் ஒருவர். சங்கீத நாடக அகாடமியின் அங்கத்தினர்.

''இவ்வளவு ஆனபிறகு எதற்கு அழுகிருய்? உன் அம்மா உனக்கு நல்ல பிள்ளையாக, உனக்குப் பிடித்தவனகத்தானே தேர்ந்தெடுத்திருக்கிருள். இனிமேல் கல்யாணம்தான் பாக்கி. சீக்கிரம் கல்யாண விருந்து எனக்குக் கிடைக்குமென்று சொல்லு'' என்ருள் ஷீலா. அவளுக்கு எப்போதுமே ஒரு விஷயத்தை முழுதும் காதில் வாங்கிக் கொள்ள முடிவதில்லை. பாதி முடிவதற்குள் தானகவே பாக்கியைத் தீர்மானித்து விடுவாள். அது தவருகவே இருக்கும்.

''முழுதும் கேட்பதற்குள் அவசரப்படுகிருயே, ஷீலா. அந்த மனிதர் இப்போது இங்கு இல்லை. படிப்புக்காக வெளியூருக்குப் போயிருக்கிருர்!......''

''அதனல் என்ன? படிப்பு முடிந்ததும் வந்து மாலை போட்டு விடுகிருர். அதற்கு அழுவானேன்?''

''இல்லை, ஷீலா! முழுதும் கேளேன்.''

"இன்னும் என்ன விஷயம் வைத்திருக்கிறாய்? அவர் வேறு யாரையாவது கல்யாணம் பண்ணிக் கொண்டு விட்டாரா? இந்த ஆண்களே இப்படித்தான். நம்பவே கூடாது."

"ஐயோ! ஷீலா சற்றுக் கேளேன். அவர் போய் ஆறு மாதமாகிறது. ஒரே ஒரு கடிதம்தான் எழுதினார். பிறகு கடிதமே இல்லை. என்ன ஆயிற்று என்பதே புரியவில்லை. அதுதான் கஷ்டமாக இருக்கிறது."

"பூ! இவ்வளவுதானா? நான் என்னமோ என்று நினைத்தேன். விட்டுத் தள்ளு. அவனுக்கு அதிர்ஷ்டம் இருந்தால் உன்னை வந்து தானாகவே கல்யாணம் பண்ணிக் கொள்கிறான். இல்லாவிட்டால் எப்படியாவது போகிறான். இதற்கு நீ கவலைப்படுவானேன்? கண்ணீர் விடுவானேன்? இந்த அசட்டுத்தனமான விஷயங்கள் எனக்குப் புரிவதே இல்லை" என்று சொல்லிக் கொண்டே என் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு வீட்டுக்குக் கிளம்பினாள்.

எனக்கு ஷீலாவின் குணநிசயம் புரியவே யில்லை.

பிறகு அவள், "இதைப்பார், இந்து. லைலா மஜ்னுவைப் பற்றிச் சொன்னேன் அல்லவா? அவர்களை உலகத்திலேயே அதிசயமான காதலர்கள் என்றெல்லாம் பிதற்றுகிறார்கள். என்ன ஆயிற்று தெரியுமோ இல்லையோ! இரண்டு பேரும் காதலித்தார்கள். கடைசியில் இருவரும் பைத்தியம் பிடித்துச் செத்துப் போனார்கள். ஜாக்கிரதை. இதெல்லாம் ஒரு வகைப் பைத்தியம் மாதிரிதான். ஆனால் ஆஸ்பத்திரிக்கு அனுப்பும் படியான, அபாயகரமான பைத்தியம் இல்லை" என்று சொன்னாள்.

"எனக்கு என்னமோ உன்னை டாக்டரிடம் பரிசோதிக்கச் சொல்லி ஏதாவது கோளாறு இருக்கிறதா என்று பார்க்கச் சொல்ல வேண்டுமென்று தோன்றுகிறது" என்றேன்.

இருவரும் சிரித்துக் கொண்டே வீட்டினுள் நுழைந்தோம். உள்ளே சென்றவுடன் வக்கீல் பத்மநாபன், "ஷீலா! எனக்கு ப்ரொபஸர் சுந்தரவதனத்திடமிருந்து லெட்டர் வந்திருக்கிறது. நாளைப் புறப்பட வேண்டும். எல்லோரும் ரெடியாகி விடுங்கள்" என்றார்.

என் தந்தையும் அங்கிருந்தார். பத்மநாபன் என்னைப் பார்த்து, "நீயும்தான் அம்மா! நீ எங்களோடு மெட்ராஸ் வருகிறாய். உங்கப்பா தன் வேலைகளை முடித்துக் கொண்டு மெட்ராஸுக்கு வந்து உன்னை அழைத்துக் கொண்டு போவார். ஆகவே நீயும் ரெடியாகி விடு" என்றார்.

"ரொம்ப வந்தனம், மாமா" என்று சொல்லிவிட்டு இதை மாமியிடம் சொல்ல சந்தோஷமாய் ஓடினேன்.

* * *

என் தந்தை ஸ்ரீ பத்மநாபன் அவர்களைப் பார்த்து, "தாங்கள் எவ்வாறு சென்னைக்குப் போகப் போகிறீர்கள்?" என்று கேட்டார்.

"ஏன்? காரில்தான்" என்றார் வக்கீல்.

"இத்தனை பேரும் எப்படிக் காரில் போவீர்கள்?"

எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. 'அப்பா நான் போகாம லிருப்பதற்கு வழி கண்டு பிடிக்கிறார் போலும்' என்று எண்ணினேன்.

வக்கீல், "அதற்கென்ன! கார் பெரிய கார்தான். அதில் ஒன்றும் சிரமமிருக்காது. டிரைவரை ரயிலில் போகச் சொல்லி விடுகிறேன். நானும் ரமேஷுமாக மாற்றி மாற்றி டிரைவ் பண்ணிக் கொண்டு போய் விடுவோம்" என்றார்.

"ஓ! நீங்களும் கார் ஓட்டுவீர்களா?"

"நான் என்ன? ஷீலா கூடத்தான் ஓட்டுவாள். மேரிக்கு இன்னும் கால் எட்டவில்லை. எட்டினால் அவளும் ஓட்டுவாள். ஆனால் அவளுக்கு எப்படி ஓட்டுவது என்று நன்றாகத் தெரியும்" என்று பெருமை யடித்துக் கொண்டார் பத்மநாபன்.

அதற்குள் கோமளவல்லி யம்மாள் குறுக்கிட்டு, "போதுமே உங்கள் பெருமை. அது ஒன்றுதான் பாக்கி. சுலோசனாவை நீங்கள் வளர்த்துக் குட்டிச் சுவராக்கியது போதும். என் மீராவை நான் வளர்க்கிறேன். அவள் விஷயத்தில் நீங்கள் தலையிட வேண்டாம். அவளாவது கொஞ்சம் சமர்த்தாகவும், அடக்கமாகவும் இருக்கட்டும். இங்கே வாடா, மீராக் கண்ணு!" என்று அவள் கையைப் பிடித்தார். மீரா திமிறிக் கொண்டு, "அதெல்லாம் முடியாது. நான் ஷீலாக்கா மாதிரிதான் இருப்பேன். கலர் கலரா புடவை கட்டிப்பேன். கார் ஓட்டுவேன். காலேஜிலே படிப்பேன். உன்னுட்டம் இருக்கவே மாட்டேன்" என்று சொல்லிக் கொண்டே அவளுடைய அப்பாவின் கழுத்தைப் போய்க் கட்டிக் கொண்டாள். பத்மநாபனுக்கு ஆனந்தம் தாங்கவில்லை. (தொடரும்)

நவரசம் ததும்பும்
நகைச்சுவை பொங்கும் இனிய
திரைப்படம்!



விஜயாவின்

# மிஸ்ஸியம்மா

இப்பொழுது லக்ஷக்கணக்கான
ரஸிகர்களை மகிழ்வித்துக்கொண்டிருக்கிறள்

சென்னை.. **காஸினோ.. கிரௌன்.. ராக்ஸி**
மற்றும் தென்னாடெங்கும்





## ‘கோலினஸ்’ உங்கள் பற்களை சுத்தம் செய்வது தவிர, மேற்கொண்டும் உதவுகிறது!

### இப்பொழுதே இந்த நூதன டூத்பேஸ்டை நீங்கள் உபயோகிக்கத் தொடங்குவது நலம்

ஆக்டிவ் க்ளோரோபில் சேர்ந்த ‘கோலினஸ்’ பற்களை சுத்தமாக்குவதுடன் நிற்பதில்லை! இந்நூதன டூத்பேஸ்ட் பல் சிதைவுக்குக் காரணமான கிருமிகளை ஒழித்து, ஈறுகளை உறுதியாக்கி, உங்கள் சுவாசத்தை மணிக்கணக்கில் புதுமணம் கமழ வைத்திருக்கிறது.

இதன் ரகசியம் அற்புதமான ‘கோலினஸ்’ நுரைதான். அது ஆக்டிவ் க்ளோரோபிலை வாயில் பிரஷ் நுழைய முடியாத மூலை முடுக்குகளுக்கும் எடுத்துச் சென்று, உங்களுக்கு மிகுந்த அனுகூலம் தருகிறது.

**அதிசயமான சிக்கனம்!**

ஈரமில்லாத பிரஷில் அரையங்குல அளவே தேவை. எனவே ஆக்டிவ் க்ளோரோபில் சேர்ந்த ‘கோலினஸ்’ உபயோகிப்பது உங்களுக்கு எவ்வளவு லாபகரம் பாருங்கள்! இன்றே ஒரு பெரிய டியூப் வாங்கவும்.





# ஆற்றங்கரையினிலே

பேராசிரியர் ரா. பி. சேதுப்பிள்ளை

## 7. அன்னமும் ஆனையும்

காலைப் பொழுது. கதிரவன் ஒளி வீசி எழுந்தான். கமலப் பள்ளியில் கண்ணுறங்கிய அன்னம் விழித்து எழுந்து அருகேயிருந்த பூஞ்சோலையில் சென்று உலாவிற்று. அதன் நடையழகைக் கண்டு மகிழ்ந்தன, பறவையெல்லாம்.

சோலையைத் தலை நிமிர்ந்து பார்த்தது அவ்வன்னம். "இப் பூஞ்சோலைக்கு எனது நடையன்றோ அழகு செய்கின்றது. இன்னிசை பாடும் வண்டினங்களும் என் நடையில் ஈடுபட்டு வாயடங்கி விட்டனவே" என்று எண்ணி இறுமாப்புற்றது. அதன் அகத்தில் எழுந்த செருக்கு முகத்திலே தெரிந்தது.

அன்னத்தின் செருக்கைக் கண்டு வெறுப்புற்ற வண்டுகள் "என்னதான் இருந்தாலும் இந்த அன்னத்திற்கு இவ்வளவு கர்வம் ஆகாது. இச்சோலைக்கு அன்ன நடை ஒன்று தானா அழகு தருகின்றது? மயில் அழகாக ஆடவில்லையா? குயில் இனிதாகக் கூவவில்லையா? கிளி மழலை மொழி பேசவில்லையா? செருக்குற்றவர் சீரழிவர் என்பதை இவ் ஏழை அன்னம் இன்னும் அறியவில்லை! இந்த மட அன்னத்திற்கு ஒரு காலம் வந்தால் சின்னஞ் சிறு வண்டுகளாய எமக்கும் ஒரு காலம் வரும்" என்று கருதிப் பொறுத்திருந்தன.

அப்போது அச்சோலையிலே பூப்பறிக்க வந்தனர் சில மங்கையர். இளங் கிளிகளை அங்கையில் வைத்துக் கொஞ்சிப் பேசிக் கொண்டு அழகுற நடந்து வந்த வஞ்சியரைக் கண்டது அவ்வன்னம். "இம்மாதரது நடையின் முன்னே என் நடை செல்லாது" என்று செருக்கு ஒழிந்தது; தலை கவிழ்ந்து சோலையை விட்டு வெளியே சென்றது.

அன்னத்தின் தோல்வி கண்ட வண்டுகள் ஆனந்த முற்றன. விளையாட்டரங்கத்தைச் சுற்றி நின்று வெற்றி தோல்விகளைக் கண்டு கை கொட்டி முழங்கும் சிறுவர் போல் செருக்கழிந்த அன்னத்தின் சிறுமை கண்டு ஆரவாரம் செய்தன சிறு வண்டுகள்.

"பாகொக்கும் சொல் பைங்கிளியோடும்
பல பேசி
மாகத்தும்பர் மங்கையர் நாண
மலர் கொய்யும்
தோகைக் கொம்பின் அன்னவர்க்கு அன்னம்
நடை தோற்றுப்
போகக் கண்டு வண்டினம் ஆர்க்கும்
பொழில் கண்டார்."

என்று இக்காட்சியை ஒரு சொல் ஓவியமாக எழுதிக் காட்டினார் கம்பர்.

மிதிலைமா நகரில் அன்னங்கள் ஆடும் ஓர் அழகிய துறை அமைந்திருந்தது. அதன் அருகே சிறந்தோங்கி நின்றது சீதையின் கன்னி மாடம். அம்மாடத்தின் மேடையிலே வீசிய மெல்லிய பூங்காற்றை நுகர்ந்து நின்றாள் சீதை. அப்போது வீதியின் வழியே நடந்து சென்ற இராமன் தற்செயலாகக் கண்ணெடுத்து, மாடத்தில் நின்ற மங்கையை நோக்கினான்: மங்கையும் எதிர் நோக்கினாள். கண்ணொடு கண் கலந்தது. காதல் பிறந்தது.

தன் உள்ளங் கவர்ந்த அண்ணலின் அழகைக் கண்ணால் முகந்து பருகினாள் சீதை. அவ்வீரனது வேழ நடை அவள் உள்ளத்தை அள்ளுவதாயிற்று.

"படர்ந்தொளி பரந்துயிர் பருகும் ஆகமும்
தடந்தரு தாமரைத் தாளு மேயல
கடந்தரு மாமதக் களிநல் யானைபோல்
நடந்தது கிடந்தது என் உள்ளம் நண்ணியே."

என்று மையலால் கையறுற்றாள்.

கன்னி மாடத்தின் மேடையிலே கண்டு காதலித்த மங்கையை மீண்டும் மிதிலை மன்னன் மாளிகையில் காணும் பேறு பெற்றான் இராமன். மன்னரும் முனிவரும் மண



சங்கீத நாடக அகாடமியின் அங்கத்தினர், இந்தியப் படாதிபதிகளில் முக்கியமானவர், புதிய நட்சத்திரங்களைக் கண்டு பிடிப்பதிலும், ஜனரஞ்சகமும் கலை நுட்பமும் ஒருங்கே அமையும் முறையில் படங்களைத் தயாரிப்பதிலும் புகழ் பெற்ற திரைப்பட டைரக்டர் ஸ்ரீ சாந்தாராம்.



மகனை இராமனும் அமர்ந்திருந்த மணி மண்டபத்தை நோக்கி நடந்து வந்தாள் மணமகளாய சீதை.

**"அன்னமும் அரம்பையரும் ஆரமிழ்தும் நாண
மன்னவை இருந்த மணி மண்டபம் அடைந்தாள்"**

அப்பொழுது அன்ன நடையையும் வென்ற சீதையின் அணி நடையைக் கண்டு அக மகிழ்ந்தான் இராமன். வேழ நடையுடைய நம்பியும் அன்ன நடையை வென்ற நங்கையும் திருமணம் புரிந்து வாழ்ந்தார்கள்.

அயோத்திமா நகரில் அரசு வீற்றிருந்து ஆளுதற்குரிய தலைமகனை இராமன் தேனடைந்த சோலைத் திருநாடு துறந்து கானகம் செல்லும் நிலை வந்துற்றது. அதைக் குறித்து அவன் சிறிதும் வருந்தினான் அல்லன். மரவுரி தரித்து மாநகரினின்றும் புறப்பட்டான்.

அந்நிலையில் சீதையும் மரவுரி புனைந்து உடன் எழுந்தாள். காதல் மனையாளின் கருத்தை அறிந்தபோது வீரன் திருமுகத்தில் கவலை படர்ந்தது. மாளிகையன்றி மற்றோரிடம் அறியாத சீதை கானகத்தின் கடுமையை எவ்வாறு பொறுப்பாள் என்று வருந்தினான். மந்த மாருதம் தவழும் மாளிகையில் மெல்லிய மஞ்சத்திலே துயின்று பழகிய மங்கை, கானகப் புல்லிலும் கல்லிலும் எவ்வாறு துயில்வாள் என்று ஏங்கினான். காட்டில் வாழ்வதற்கு எவ்வகையிலும் தகுதியற்ற சீதையால் என்னென்ன தொல்லைகள் வருமோ என்று எண்ணிக் கவலையுற்றான் ராமன்.

கணவனுடன் கானகத்துக்குப் புறப்பட்ட சீதையின் உள்ளத்தில் இன்பமே நிறைந்து நின்றது. மாளிகையையும் மஞ்சத்தையும் மறந்தாள்; காட்டின் கடுமையையும் கதிரவனின் கொடுமையையும் அறியலானாள்.

**"கல்நகு திரள் புயக்
கணவன் பின் செல
நல் நகர் ஒத்தது
நடந்த கானமும்**

கங்கைக் கரையில் "களியன்னமும் மட அன்னமும்" நடமாடக் கண்டுகளித்தாள். மரம் அடர்ந்த சோலைகளைக் கண்டு மகிழ்ந்தாள். புன்னகை பூத்த முகத்தோடு விளையாடிக் கொண்டு வழி நடந்தாள்.

**"கருப்பேந்திரம் முதலாயின
கண்டாள், இடர் காணாள்
பொருப்பேந்திய தோளானொடு
விளையாடினள் போனாள்."**

இராமனும் சீதையும் கோதாவரியாற்றங் கரையை வந்து அடைந்தார்கள். செஞ்சொற் கவிஞரின் உள்ளம் போல் தெளிந்து சென்ற

தண்ணீரைக் கண்டு குளிர்ந்தது அவர் நெஞ்சம். அவ்வாற்றங்கரையில் ஓர் அழகிய அன்னம் ஒதுங்கிச் சென்றது. ஒரு துறையிற் போந்து தண்ணீரைப் பருகிய யானைக் கன்று கரையை நோக்கி நடந்து வந்தது.

சீதையின் மென்னடையைக் கண்டு நாணியே நன்னடை அன்னம் ஒதுங்கிச் சென்றது என்று எண்ணி இன்புற்றான் இராமன். இளங்களிற்றின் பெருமித நடையைக் கண்டபோது நாயகனது வீறு நடையின் சீர்மையறிந்து விம்மிதமுற்றாள் சீதை.

> "ஒதிமம் ஒதுங்கக் கண்ட
> உத்தமன் உழையள் ஆகும்
> சீதை தன் நடையை நோக்கிச்
> சிறியதோர் முறுவல் செய்தான்
> மாதவள் தானும் ஆண்டு
> வந்து நீர் உண்டு மீளும்
> போதகம் நடப்ப நோக்கிப்
> புதியதோர் முறுவல் பூத்தாள்."

என்று இக் காட்சியை அழகுறப் பாடினார் கம்பர். ஆற்றங் கரையில் அன்னத்தின் நடையைக் கண்ட இராமன் அதன் நடையோடு சீதையின் நடையை ஒப்பிட்டுப் பார்த்தான். மிதிலை மாளிகையில் அவள் மணக் கோலத்தில் நடந்து வந்த அணி நடையும், கரடு முரடான கானகத்தில் மரவுரி புனைந்து நடந்து வந்த மணி நடையும் அலை அலையாக அவன் மனத்தில் எழுந்து இன்பம் ஊட்டின. பட்டு விரித்த மாளிகையிலும் பாதையற்ற கானகத்திலும் பாங்குற நடந்த நடையின் அழகை நினைத்து அகமகிழ்ந்தான். புன்முறுவல் அவன் முகத்திலே தோன்றிற்று. சிந்தனை தேக்கிய முகத்தில் எழுந்த முறுவல், சிறிய முறுவல். சிறிய முறுவலாகவே அமைந்தது.

ஆற்றங்கரையிலே யானைக் கன்றின் நடையைக் கண்ட போது சீதையின் உள்ளத்தில் சிறந்த இன்பம் பிறந்தது. மிதிலை வீதியில் காதலனாகிய இராமன் நடந்த விழுமிய நடையும், பின்பு கானகத்தில் நடந்த கண்ணிய நடையும் ஒன்றன் பின் ஒன்றாக வந்து உவகை யூட்டின. அதன் அறிகுறியாக அவள் முகத்திலும் முறுவல் தோன்றிற்று. இயல்பாகவே மந்தகாசம் தவழ்ந்து கொண்டிருந்த முகத்தில் இப்போது புதியதோர் புன்னகை எழுந்தது. அது செடி கொடிகளிலே பூத்த மலர் போல் அம்மங்கையின் திருமுகத்தில் நின்று அழகு செய்தது.

எனவே இருவர் மனத்திலும் எழுந்த இன்ப உணர்ச்சி ஒன்றே எனினும், இராமன் முகத்தில் அது சிறிய முறுவலாக வெளிப்பட்டது. சீதையின் முகத்தில் அது புதிய முறுவலாகப் பூத்தது. கானகத்தில் கவலையோடு சென்ற தலைவனது மன நிலையையும், அவனுடன் களித்து விளையாடிச் சென்ற சீதையின் மன நிலையையும் அவ்விருவரது முகத்தில் எழுந்த முறுவலின் மூலமாகப் புலப்படுத்திய கம்பர் கவித்திறம் போற்றுதற்குரியதாகும்.



# இல்லந் தோறும் எழில் தவழும்

இந்தியாவின் நெசவு நிபுணர்களால் சம்பிரதாய மோஸ்தர்களிலேயே நவநாகரீகமும் புகுத்தி நூதனமுறையில் சிருஷ்டிக்கப்பட்ட வீட்டு அலங்காரத்திற்கேற்ற நேர்த்திமிகுந்த கைத்தறித்துணிகள் இருக்கின்றன. நாற்காலிகள், ஸோபாக்களுக்கு உறை போடுவதற்கான துணிகள், அலங்காரச்சீலைகள், திரைகள், படுதாக்கள், மேஜை உறைகளும் அதற்குப் பொருத்தமான மாதிரியில் சிறு டவல்களும், மற்றும் பெட்ஷீட்டுகளும் படுக்கை விரிப்புகளும் வசீகரமான செக்மோஸ்தர்களிலும் விதவிதமான வர்ணங்களிலும் கிடைக்கின்றன.

பாரத நாட்டின் கைத்தறி நெசவாளர்கள் கலைச்சிறப்புடன் நெய்வதில் அவர்களுக்குரிய பரம்பரைத் திறமைக்கும், விதவிதமான புதுப்புது அழகு மோஸ்தர்களை சிருஷ்டிக்கும் சாமர்த்தியத்திற்கும் பெயர் பெற்றவர்கள். பாரதநாட்டின் கைத்தறி ஜவுளிகள், நெசவுநேர்த்தி, பூர்த்தியழகு, மோஸ்தர், உழைப்புத்திறன் முதலியசகல அம்சங்களிலும் எப்பொழுதும் இணையற்று விளங்குகின்றன.

நீடித்துழைப்பவை ● அலங்காரமானவை ● தனிச்சிறப்புடையவை




## கைத்தறி ஜவுளிகளை

## வாங்குக

ஒவ்வொரு கெஜம் வாங்கும்போதும்—பொருளாதார முன்னேற்றம் ஒரு படி உயரும்.

அகில இந்திய கைத்தறி போர்டு, மத்திய விற்பனை ஸ்தாபனம், 1/155, மவுண்டு ரோடு, சென்னை-2

AC 661 Tam

# சந்திரமதி

## கல்கி





### 1

சில நாளைக்கு முன்பு விகடனில் வெளியான "காதல் சக்கரம்" என்னும் கட்டுரையைப் படித்தபோது எங்கள் ஊரில் பல வருஷங்களுக்கு முன்னர் நடந்த சம்பவம் ஞாபகம் வந்தது. மேற்படி கட்டுரையின் விஷயத்துக்கும், நான் சொல்லப் போகும் சம்பவத்துக்கும், அதிக சம்பந்தமில்லைதான். ஆனால் தலைப்பு மட்டும் இரண்டுக்கும் பொருத்தமானது. நான் சொல்லப் போவது ஒரு காதல் சம்பவமே. அதற்கு, ஒரு சக்கரம் அன்று—நாலு சக்கரங்கள் உதவி செய்தன. என் கதையில் ஒரு மோட்டார் வண்டி முக்கியமான ஸ்தானத்தை வகிக்கிறது.

தயவு செய்து இருபத்தைந்து வருஷம் பின்னால் போங்கள். அப்போது என்னுடைய பள்ளிக்கூடத்தில் இப்போதைப் போல் ஆடம்பரம் ஒன்றும் கிடையாது. கட்டடம் இல்லை; பெஞ்சு நாற்காலியும் கூட இல்லை. கீத்துக் கொட்டகையில்தான் பள்ளிக்கூடம் நடந்தது. கீழே மணலைக் கொட்டிப் பரப்பி யிருந்தது. வெறும் பலகைகளை வரிசையாகப் போட்டுப் பிள்ளைகள் உட்கார்ந்திருந்தார்கள். ஆனால் அந்தக் காலத்தில் பிள்ளைகளுக்குச் சொல்லிக் கொடுப்பதென்றால் எனக்கு வெகு உற்சாகமா யிருந்தது; பிள்ளைகளும் உற்சாகமாகப் படித்தார்கள்.

நான் சொல்லும் காலத்தில் பள்ளிக்கூடத்தில் முப்பது குழந்தைகள் இருந்தன. அக்கிரஹாரத்திலிருந்து ஐந்தாறு குழந்தைகள்; வேளாளத் தெருவிலிருந்து ஏழெட்டுப் பேர்; பாக்கிக் குழந்தைகள் குடியானத் தெருவிலிருந்து வந்தன.

குடியானக் குழந்தைகளில் நாலைந்து பெண்களும் இருந்தார்கள். அவர்களில் ஒருத்திக்குச் சந்திரமதி என்று பெயர். அவள் நாட்டாண்மைக்கார நல்லானின் மகள். தாயில்லாக் குழந்தை, அவளைப் பார்க்கும் போது எனக்குப் பாரதியாரின் பின் வரும் வரிகள் ஞாபகத்துக்கு வரும்:

"பச்சைக் குழந்தையடி—கண்ணில்
பாவையடி சந்திரமதி
இச்சைக்கினிய மது—என்
இரு விழிக்கும் தேனிலவு"

அவளுடைய முகத்தில் களை சொட்டிற்று. கருவண்டுகளைப் போன்ற அவளுடைய பரந்த கண்கள் யாருடைய உள்ளத்தையும் கொள்ளை கொள்ளும். தலை மயிரை அலட்சியமாய் எடுத்து ஒரு சொருக்குப் போட்டுக் கொண்டு வருவாள். அப்போது அவளைப் பார்த்தால், பண்டைக்காலத்துத் திறமை வாய்ந்த சிற்பி ஒருவன் சாமுத்திரிகா லட்சணத்தில் அணுவளவும் பிசகாமல் அமைத்த ஒரு சிலை உயிர் பெற்று ஒய்யாரமாக நடந்து வருவது போல் தோன்றும்.

அழகைப் போலவே சமர்த்து. அவளுடைய வகுப்பில் அவள்தான் எப்போதும் முதலாவதா யிருப்பாள். அவளைப் பள்ளிக்கூடத்திலிருந்து நிறுத்தியபோது எனக்குண்டான துக்கத்தைச் சொல்லி முடியாது. நமது சமூக நிலைமையைப் பற்றி நினைத்து அடிக்கடி வருந்துவேன். வேறொரு தேசமா யிருந்தால், இந்தமாதிரி அழகும் சமர்த்துமுள்ள பெண்கள் வருங்காலத்தில் எவ்வளவோ முன்னுக்கு வருவார்கள். இந் நாட்டிலோ, சின்ன சாதி—பெரிய சாதி, ஏழை—பணக்காரன் முதலிய எவ்வளவோ வித்தியாசங்கள், கட்டுப்பாடுகள் பெண் குலத்தின் பெருமை பிரகாசிப்பதற்கு வழியே கிடையாது. வயதாகும்போது யாராவது ஒரு குடிகாரன் கழுத்தில் இந்தப் பெண்ணைக் கட்டி விடுவார்கள்; அடியும் உதையும் பட்டு எப்படியோ காலத்தைக் கழித்து விட்டு, வந்த

'ஆனந்த விகடனி'ல் 8 - 3 - 1936 இல் வெளி வந்தது.

இடத்துக்குப் போய்ச் சேர்வான் — இவ்வாறெல்லாம் நான் எண்ணமிட்டதுண்டு.

நாலைந்து வருஷங்கள் சென்றன. சந்திரமதி நான் எதிர்பார்த்தது போலவே அழகு வடிவும் இள மங்கையானாள். அவளுடைய கலியாணமும் நான் எதிர் பார்த்தது போலவே நடக்குமென்று தோன்றிற்று. குளக்கரைக்கோ, ஆற்றங் கரைக்கோ நான் போகும்போது சில சமயம் சந்திரமதி எதிர்ப்படுவாள். "ஸார்! சௌக்கியந்தானா!" என்று கேட்பாள். எனக்கு உடம்பு பூரித்துப் போகும். ஒருநாள் காலை நேரத்தில் குளக்கரையில் இருந்த இலுப்பந் தோப்பில் தரையில் பூப்பாவாடை போட்டது போல உதிர்ந்திருந்த இலுப்பப் பூக்களை அவள் திரட்டிக் கொண்டிருந்தாள். மேலே மரக்கிளைகளில் நானாவிதமான பட்சிகள் பாடிக் கொண்டிருந்தன. இலுப்பப் பூவின் மனோகரமான மணம் எங்கெங்கும் பரவிற்று. அந்தக் காட்சியும், கீதமும், மணமும் என்னைப் பூரணமாய் வசீகரித்தன. அவ்விடத்தில் சற்று நின்று, "என்ன, சந்திரமதி! உனக்குக் கலியாணமாமே?" என்று சிரித்துக் கொண்டே கேட்டேன். அவளுடைய கண்களில் ஜலம் துளித்ததைக் கண்டதும், என்னுடைய சிரிப்பு அடங்கிச் சாம்பலாகி விட்டது.

"ஸார்! நான் சொல்றதைக் கேளுங்கள். நீங்கள் என்னைக் கட்டிக்கொண்டு விடுங்கள். நான் வீட்டில் அம்மாவுக்கு ஒத்தாசையாக வேலை செய்து கொண்டிருக்கிறேன்" என்று சொன்னாள்.

எனக்கு அப்போது வயது ஐம்பது. ஆனாலும் நாம் இருபத்தைந்து வயது இளைஞனாயிருக்கக் கூடாதா என்ற ஏக்கம் உண்டாயிற்று. நான் மட்டும் வாலிபனாயிருந்திருந்தால், சந்திரமதியை



அந்தக் கறுப்பு மீசைக்காரனுக்குக் கலியாணம் செய்து கொடுப்பதைப் பார்த்துக் கொண்டிருப்பேனா! என்னுடைய சாதி, சம்பிரதாயம், குலம், கோத்திரம் எல்லாவற்றையும் அவளுக்காகத் தத்தம் செய்யத் தயாராயிருப்பேன். அவளுக்காக மோட்சத்தைக்கூடத் தியாகம் செய்வேன். ஆனால் என்ன பிரயோஜனம்! சீதைக்குச் சுயம்வரம் வைத்த ஜனகர், "உலகத்தில் ஆண்மையும் வீரமும் அற்றுப் போய்விட்டனவா!" என்று கதறினாராமே, அந்த மாதிரி நானும், "நம்முடைய தேசத்தில் வாலிபமும் தீரமும் சுசித்துப் போய் விட்டனவே!" என்று நினைத்து வருந்தினேன்.

## 2

இப்போது, இந்தக் கதையில் சில புதிய பாத்திரங்களை உங்களுக்கு நான் அறிமுகப் படுத்தி வைக்க வேண்டும். அவர்களில் ஒருவன்தான் மேலே நான் குறிப்பிட்ட கறுப்பு மீசைக்காரன்.

அவனுக்கு வயது நாற்பத்தைந்துக்கு மேலிருக்கும். ஆனால் தலை மயிருக்கும், மீசைக்கும் ஏதோ வர்ணம் தடவி, நரை விழுந்தது தெரியாமல் பாதுகாத்து வந்தான். அவனுக்குக் "கறுப்பு மீசைக்காரன்" என்றும் "அக்கரையான்" என்றும் பெயர் வழங்கி வந்தது. அக்கரைச் சீமையில் அவன் என்ன அக்கிரமம் செய்தானோ, யார் குடியைக் கெடுத்தானோ, நிறையப் பணத்துடன் நாலைந்து வருஷத்துக்கு முன்னால் எங்களூருக்கு வந்து சேர்ந்தான். கொஞ்சம் நிலமும் வாங்கியிருந்தான். நிலம் வாங்குவதற்கும், சாகுபடி செய்வதற்கும் நல்லான் அவனுக்கு உதவி செய்தான்.

நல்லான் ஊருக்கு நாட்டாண்மைக்காரனானாலும், சொத்து ஒன்றுமில்லாதவன். ஏதோ கொஞ்சம் இருந்ததைக் கள்ளுக் கடைக்குத் தொலைத்து விட்டான். அக்கரையானும் அப்படியொன்றும் மதுவிலக்கில் தீவிரமானவனல்ல. ஆகவே, இருவருக்கும் சிநேகம் நாளுக்கு நாள் முதிர்ந்து வந்தது. கடைசியில் நல்லான் தன் பெண் சந்திரமதியைக் கறுப்பனுக்குக்கட்டிக்கொடுத்து விடப் போவதாக ஊரில் ஒரு வதந்தி பிறந்தது.

நல்லானுடைய நோக்கம் என்னமோ அவ்வளவு தீயது என்று சொல்லுவதற்கில்லை. அக்கரையானுக்கு நல்ல சொத்திருந்தது. பெண்டாட்டியா, பிள்ளையா, ஒன்றும் இல்லை. சந்திரமதியை அவனுக்குக் கட்டிக் கொடுத்தால், அவ்வளவு சொத்துக்கும் அவளே எஜமானியாவாள். பெண்ணின் நன்மையைத்தான் அவன் கோரினான். ஆனால் அவளுடைய மன நிலை இன்னதென்பதை அவன் உணர்ந்து கொள்ளவில்லை; உணர முயற்சி செய்யவும் இல்லை.

அவளுடைய மனநிலை ஒருவாறு எனக்குத் தெரிந்திருந்தது. அதைப் பூரணமாக அறிந்து கொண்டு விட்டதாகவே ஒரு சமயம் நான் எண்ணியதுண்டு. அது எவ்வளவு தவறென்று பின்னால் தெரிந்தது. தலை நரைத்த கிழவனாகிய எனக்கு, இளம் பெண்ணின் ஹிருதயம் எவ்வாறு தெரியும்! கிடக்க.

எங்கள் கிராமத்துக்கு அடுத்த கிராமத்தில் ஒரு பெரிய ஜமீன்தார் இருந்தார். அவருடைய பிள்ளைகள் சிறு பிள்ளைகளாயிருந்தபோது என்னிடம் படித்தார்கள். பிறகு அவர்கள், சமீபத்திலுள்ள பட்டணத்துக்குப் போய் ஹைஸ்கூலில் சேர்ந்து படித்தார்கள். பட்டணத்து ஹைஸ்கூல்களின் சமாசாரம் தான் உங்களுக்குத் தெரியுமே! வருஷத்தில் பாதி நாளைக்கு மேல் விடுமுறைதான். விடுமுறைக்காகப் பிள்ளைகள் ஊருக்கு வரும்போதெல்லாம், ஜமீன்தார் அவர்களை என்னிடம் அனுப்பி வைப்பார். இந்தப் பிள்ளைகளுடன் ஜமீன்தாரின் மைத்துனர் மகன் ஒருவனும் வருவான். அவன் பெயர் துரையப்பன். முதலிலே இந்தப் பையனை அவ்வளவாக எனக்குப் பிடிக்க

வில்லை. டிப்பு, ஜெரப்பு அதிகம்; ரொம்ப கர்வக் காரன்; பெரியவர்களிடம் மட்டு மரியாதை கிடையாது. "ஐயோ! அந்த டம்பாச்சாரியோடு சேர்ந்து நம் ஜமீன்தாரின் பிள்ளைகளும் கெட்டுப் போவார்களே!" என்று கவலைப் பட்டேன்.

ஆனால் நாளடைவில் அந்தப் பையன் மேலிருந்த வெறுப்பு எனக்குக் குறைந்து வந்தது. அபிமானம் கூட உண்டாயிற்று. அதற்குக் காரணம் என்ன தெரியுமா! சொன்னால் நீங்கள் ஆச்சரியப்படு வீர்கள். என்னைப் பற்றிக்கூட ஒரு மாதிரி நினைக் கத் தொடங்குவீர்கள். ஆனாலும் உண்மையைச் சொல்லத்தான் வேண்டும். துரையப்பனையும் சந்திரமதியையும் பற்றி ஊரில் வதந்தி உண்டாகிப் பரவிற்று. கோவிலிலும், குளக் கரையிலும், மாந்தோப்பிலும், களத்து மேட்டிலும் துரையப்ப னும் சந்திரமதியும் சந்திப்பதாகப் பேச்சு ஏற்பட் டது. ஒன்றைப் பத்தாகச் சொல்லுவதுதான் நம் முடைய ஊர் வழக்கமாயிற்றே. ஆகையால், இந்தப் பேச்சை நான் முழுதும் நம்பவில்லை. ஆனாலும் அது உண்மையா யிருக்கக் கூடாதா வென்று ஆசைப்பட்டேன். சந்திரமதிக்கு எவ் வளவு அதிர்ஷ்டம் வந்தாலும் தகும். எப்படி யாவது அவன் கறுப்பு மீசைக்காரனுக்கு வாழ்க் கைப் படாமலிருந்தால் நல்லது. துரையப்பன் பணக்காரனா யிருக்கலாம்; சந்திரமதி ஏழையா யிருக்கலாம். அவர்களுடைய சாதிகளிலும் ஏற்றத் தாழ்வு இருக்கலாம். இதனாலெல்லாம் என்ன மோசம்! அவர்கள் இருவரும் கலியாணம் செய்து கொண்டு ஏன் சுகமாயிருக்கக் கூடாது!

வதந்தியில் உண்மை உண்டென்று எனக்குச் சீக்கிரத்தில் தெரிய வந்தது. ஒரு நாள் அந்தக் கறுப்பு மீசைக்காரன்—அவன் மோரக் கட்டை யில் இடிவிழ!—என்னிடம் வந்தான். "ஸார்! அப்புறம் என் மேல் தப்பு சொல்லாதேங்கோ. யாரோ ஒரு வெள்ளாளப் பையன் வருகிறானாமே இங்கே, துரையப்பன் என்று—அவன் இனிமேல் இந்த ஊர்ப் பக்கம் தலைகாட்டக் கூடாது. காட்டி னால் வெட்டி மடைவாயில் வைத்து விடுவேன்" என்றான். இந்த உருட்டலுக் கெல்லாம் நானா பயப்படுகிறவன்! துரையப்பனுடைய தகப்பனார் லேசுப்பட்டவரல்லவென்றும், கவர்ன்மெண்டே அவர் கைக்குள் அடக்க மென்றும், துரையப்பன் மேல் யாராவது கையை வைத்தாலும் போதும், அவன் கதி அதோகதிதான் என்றும் அவனைத் திருப்பிப் பய முறுத்தினேன். "எல்லாம் சீக்கிரம் பார்க்கலாம்" என்று அக்கரையான் உறுமிக் கொண்டு போய் விட்டான்.

இன்னும் ஒரே ஒரு ஆளை உங்களுக்கு நான் தெரியப்படுத்தியாக வேண்டும். அவன் பெயர் நாகரத்தினம். குடியானப் பையன். இவனைப் பற்றி எப்படி யெல்லாம் என்னுடைய அபிப்பி ராயத்தை மாற்றிக் கொள்ள வேண்டி வந்தது என்பதை நினைக்கும் போது எனக்கே வெட்கமாக இருக்கிறது. அவனும் நாலாம் வகுப்பு வரை யிலும் என் பள்ளிக்கூடத்தில் படித்தவன்தான். அப்புறம் விவசாயத்தில் அவன் தகப்பனுக்கு ஒத்தாசையாக வேலை செய்யத் தொடங்கினான். தகப்பன் இறந்த பிறகு அவன் விவசாயத்தை விட்டு விட்டான். ஒரு வண்டியும், இரண்டு காளை களும் வாங்கி, சத்த வண்டி ஓட்டத் தொடங்கி னான். இந்தத் தொழிலில் அவன் உல்லாசமாகக் காலங் கழித்தா னென்று சொல்லலாம். சில நாள் நான் பார்த்திருக்கிறேன். அவன் வண்டி அடித்து

விட்டுத் திரும்பி வெறும் வண்டியைச் சாலையோடு ஓட்டிக் கொண்டு வருவான். அப்போதெல்லாம்:

"மானா மருதையிலே—ஒரு
மருக்கொழுந்துக் கூடைக்காரி!"

என்று வாய் விட்டு உல்லாசமாகப் பாடுவான். அதைக் கேட்கும் போது, எனக்குக்கூட, இந்தப் பிள்ளைகளுடன் டானா, டாவன்னா என்று மாரடித்துக் கொண்டிருப்பதை விட்டு வண்டி ஓட்டத் தொடங்கலாமா என்று தோன்றும்.

இப்படி உல்லாஸமா யிருந்தவனுக்குத் திடீரென்று மறுபடியும் படிப்பில் ருசியுண்டானது எனக்கு மிகவும் வியப்பளித்தது. ஒரு நாள் வந்து, தான் படித்ததெல்லாம் மறந்து போகிற தென்றும், மறுபடி படிக்க வேண்டு மென்றும், இங்லீஷ் கற்றுக் கொள்ளக்கூட ஆசையா யிருக்கிற தென்றும், இராத்திரியில் தினம் வந்து படிப்பதாகவும் சொன்னான். நானும் மகிழ்ச்சியுடன் ஒப்புக் கொண்டேன்.

சாதாரணமாகக் குடியானப் பிள்ளைகளைப் போலல்லாமல், நாகரத்தினம் நல்ல புத்திசாலி, சீக்கிரம் அவனுக்குப் படிப்பு வந்தது. அக்கறையுடன் படித்தான். என்னிடம் அவனுக்கிருந்த பக்தி விசுவாசத்தைச் சொல்லி முடியாது. ஆகவே, அவனிடம் எனக்கும் மிகவும் நல்ல அபிப்பிராயம் இருக்கத்தான் செய்தது. ஒரு நாள் இராத்திரி அவ்வளவு நல்ல அபிப்பிராயமும் மாறிப்போயிற்று.

"இந்த விஷப் பாம்பையா நல்லவன் என்று நினைத்திருந்தோம்!" என்று வியப்புண்டாயிற்று.

## 3

கதையில் முக்கியமான இடத்துக்கு இப்போது வருகிறோம். துரையப்பனையும் சந்திரமதியையும் பற்றிய வதந்தி ஏற்பட்டு ஒரு வருஷத்துக்கு மேலாகிவிட்டது. சங்கராந்தி விடுமுறைக்கு ஜமீன்தார் பிள்ளைகளும் அவனும் வந்திருந்தபோது ஏதாவது நடக்கு மென்று எதிர் பார்த்தேன். ஒன்றும் நடக்கவில்லை. தை சென்று, மாசியும் பிறந்து விட்டது. சித்திரையில் சந்திரமதிக்கும் கறுப்பு மீசைக் காரனுக்கும் கலியாணம் நடக்கு மென்று கேள்விப்பட்டேன். இதனால் எனக்கு மிகுந்த மனவருத்தம் உண்டாயிற்று. சில தினங்கள் மாலை நேரத்தில் நான் ஆற்றங்கரையில் உலாவச் செல்வதுண்டு. அன்று வழக்கம்போல் சென்றவன் வாய்க்கால் மதகின்மேல் உட்கார்ந்து சந்திரமதியைப் பற்றிய சிந்தனையில் வெகுநேரம் ஆழ்ந்திருந்து விட்டேன். நன்றாக இருட்டி விட்டது. நிலவு கிடையாது. "சரி போகலாம்" என்று எண்ணியபோது, மதகுக்கடியில் ஏதோ பேச்சுக் குரல் கேட்டது. இருட்டிய பிறகு ஆற்று மணலோடு வந்து அவர்கள் அங்கே உட்கார்ந்திருக்க வேண்டும். பேச்சில் "வெள்ளாழப் பையன்," "சந்திரமதி" என்ற சொற்கள் காதில் விழவே உற்றுக் கவனித்தேன். குரலிலிருந்து, நல்லானும், 'கறுப்பு மீசைக்காரனும்' நாகரத்தினமும் என்று தெரிந்தது.

நல்லான், கறுப்பு மீசைக்காரன் இவர்களுடன் நாகரத்தினமும் இருந்ததுதான் எனக்கு வியப்பளித்தது. அவர்கள் என்ன பேசுகிறார்கள் என்று கேட்க ஆவலுண்டாயிற்று. சமய சந்தர்ப்பங்களும் அதற்கு உதவி செய்தன. அவர்கள் பேசியதைக் கேட்கக் கேட்க எனக்குக் கோபம் பொங்கிக் கொண்டிருந்தது. அட பாவிகளா! இப்படியா சூழ்ச்சி செய்கிறீர்கள்! வெளிப் பார்வைக்குச் சாதுவைப்போல் தோன்றிய இந்த நாகரத்தினத்தின் வஞ்ச நெஞ்சந்தான் என்ன!

என்னையறியாமல் "அடே, படுபாவி!" என்ற வார்த்தைகள் என் வாயிலிருந்து வந்து விட்டன. "யார் அங்கே!" என்று ஒரு குரல் கேட்டது. "ஏன், நான்தான்!" என்றேன். அடுத்த நிமிஷம் மூன்று பேரும் வந்து என்னைச் சூழ்ந்து கொண்டார்கள். அக்கரையான், தன் மடியில் செருகியிருந்த கொடுவாளைக் கையில் எடுத்துக் கொண்டான். "இதோ பாருங்க, ஸார்! இந்தக் கொடுவாளால் சிங்கப்பூரில் ஒன்பது பேரின் தலையைச் சீவியிருக்கிறேன், தெரியுமா!" என்றான்.

அந்தக் கும்மிருட்டில் அந்த நிர்மானுஷ்யமான இடத்தில் அவன் அப்படிப் பேசியது எனக்குப் பயத்தை உண்டாக்கிற்று. கை கால்கள் வெடவெடத்தன. மேலும் அவன் தொடர்ந்து, "நாங்கள் பேசியது உங்கள் காதில் விழுந்திருக்க வேண்டும். அதை யாரிடமும் சொல்வதில்லையென்று உங்கள் தலைமேல் அடித்துச் சத்தியம் செய்யுங்கள். இல்லாவிட்டால் இங்கேயே வெட்டி இந்த மதகின் அடியில் புதைத்து விடுவேன்" என்றான்.

(அடுத்த இதழில் முடியும்)

வட்ட மேஜை

# அமெரிக்காவிலிருந்து நெய் இறக்குமதி

சமீபத்தில் செய்தித் தாள்களில் அமெரிக்காவிலிருந்து நெய் நம் தேசத்துக்கு ஏற்றுமதி செய்யப்படும் என்ற வெளியாகி யிருக்கிறது. இச் செய்தி நம் தேசத்திலுள்ள நெய் வெண்ணெய் தயாரிப்பவர்களிடையும், வியாபாரிகளிடையும் பெரிய அதிர்ச்சியை உண்டாக்கி யிருக்கிறது.

நம் தேசத்தில் நெய் தயாரித்தல் ஒரு முக்கியமான குடிசைத் தொழில். விவசாயிகள் கிராமங்களில் தங்களிடமுள்ள உபரி பாலை நெய், வெண்ணெயாக மாற்றி நகரங்களுக்கு அனுப்புகிறார்கள். மழை பற்றாக்குறை காலத்திலும் கால்நடைகள் மூலம் கிடைக்கும் இவ்வருமானத்தைக் கொண்டு விவசாயிகள் தங்கள் குடும்பத்தைக் காப்பாற்றிக் கொண்டனர்.

தற்பொழுது அமெரிக்காவிலிருந்து நெய் இறக்குமதியானால் நம் குடிசைத் தொழில் மிகவும் பாதிக்கப்படும். விவசாயிகளுக்குக் கால் நடைகளைப் பேணி, வளர்ப்பதில் ஊக்கம் குறைந்து விடும். நம் சர்க்கார் கால்நடைகளின் தரத்தை அபிவிருத்தி செய்வதற்காகச் செய்யும் முயற்சிகள் வீணாகி விடும் என்பதில் ஐயமில்லை.

யுத்தத்துக்கு முன்பு நம் தேசத்திலிருந்து இலங்கை, மலாயா, பர்மா ஆகிய இடங்களுக்கு நெய் ஏற்றுமதியாகி வந்தது. யுத்த காலத்தில் கால்நடைகளின் க்ஷேமம் பாதிக்கப்பட்டதாலும் பிறகு ஏற்பட்ட மழை பற்றாக்குறையாலும் நம் நாடு நெய் ஏற்றுமதியில் பின் தங்கிட நேரிட்டது. ஆனால் தற்பொழுது சர்க்கார் அளிக்கும் ஊக்கத்தினால்தான் கால்நடைகளின் தரம் படிப்படியாக அபிவிருத்தியாகி நம் தேசமே நெய் உற்பத்தியில் உபரி ஸ்தானம் அடையக் கூடும். ஆகையால் இச்சந்தர்ப்பத்தில் அமெரிக்காவிலிருந்து நெய் இறக்குமதி செய்ய உத்தேசித்திருப்பது மிகவும் கவலை தரும் பிரச்னையாக இருக்கிறது.

திருப்பூர்
17—2—55

கே. எஸ். கண்ணன்

# உங்கள் வதனத்தை மென்மையாக, புதுமை எழிலோங்க வைத்திருப்பது மிகச் சுலபமே!

## உங்கள் சருமத்திற்கு பாண்ட்ஸ் சௌந்தரிய பராமரிப்பு அளித்து வந்தால் போதும்

பிரசித்தி பெற்ற பாண்ட்ஸ் க்ரீம்கள் உங்கள் சருமத்திற்கு மிகச் சிறந்தவை; சீதோஷ்ணச் சூழ்நிலையின் கெட்ட விளைவுகளைத் தடுத்து சருமத்தைப் பாதுகாக்கும். உலக முழுவதிலுமுள்ள அழகு நங்கையரைப் பின்பற்றி நீங்களும் உங்கள் வதனத்திற்கு இந்தக்ரீம்களின் சௌமியமான பராமரிப்பு அளித்து, அதை மிருதுவாகவும் புதுமலர் சோபையுடனும் வைத்திருக்கக்கூடும்.



வரண்ட சீதோஷ்ண நிலை உங்கள் முகப் பொலிவைப் பாழ்படுத்தினால் நீங்கள் உபயோகிக்கவேண்டியது பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம். அதிலுள்ள செழிப்பான எண்ணெய்கள் சருமத்திற்கு சமனூட்டி, கடுமையான வெயில் மற்றும் வரண்ட காற்றிலும் அது வாடி வதங்காமல் காப்பாற்றுகின்றன.



உங்கள் சருமம் இயற்கையாகவே எண்ணெய் பசையுடையதானால் அல்லது உஷ்ணமும் கசகசப்பும் மிகுந்த சூழ்நிலையில் பிசுக்கடையும் பட்சத்தில், பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உபயோகிக்கவும். இக்குளுமையான மென்மிய க்ரீம் சருமத் துவாரங்களில் படியும் பிசுக்கையும் செத்த ஜீவ அணுக்களையும் அகற்றி உங்கள் முகத்திற்கு சௌமிய பாதுகாப்பளிக்கிறது.

## உலகில் எழிலரசிகள் உபயோகிக்கும் க்ரீம்கள்

பாண்ட்ஸ் க்ரீம்களை பிரதி தினமும் உபயோகித்து சருமத்தில் ஏற்படும் வித்தியாசத்தை கவனியுங்கள். சொற்ப நாட்களில் உங்கள் வதனம் அதிக தெளிவுடனும் மென்மையுடனும் விளங்குவதைக் காண்பீர்கள்—உணரவும் செய்வீர்கள்!

# பாண்ட்ஸ்

கோல்ட் க்ரீம்

வானிஷிங் க்ரீம்



# மிஸ்ஸியம்மா காட்சிகள்

ஏலே வேண்டாண்டா; ஒரே ஒரு அடி மட்டும் அடிக்கிறேண்டா!

இல்லறம் இப்படி நடந்தால் நல்லறம் ஆமோ நிலாவே!

மிஸ்டர் ஓஸி

இன்னும் கொஞ்சம் வெள்ளை அப்பனைத் தள்ளுங்கோ, இப்படி

'சு''ப' இரண்டையும் மட்டும், தள்ளிப் போட்டு விடுங்கள் அப்புறம் பாருங்கோ

சாமா

மிஸ்ஸியம்மா படத்தைப் பார்த்தபின், நினைவிலிருந்து எழுதப்பட்ட 'சாமா'வின் சித்திரங்கள்.

# மிஸ்ஸியம்மா

சோமாஸ்

மிஸ் மேரியும் இன்னொருவன் பாலுவும் கலாசாலையில் தோழமை பூண்டவர்கள் அல்ல; பந்துக்களும் அல்ல; ஏற்கெனவே அறிமுகமானவர்களும் அல்ல. பின் எப்படி ஒருவரை யொருவர் அறிந்து கொண்டார்கள்! எப்படி ஒருவர் வாழ்வுக்கு ஒருவர் உறுதுணையானார்கள்!

அனாதை பாலு பி. ஏ. பாஸ் செய்து விட்டு வேலையில்லாமல் திண்டாடுகிறான். ஒரு உத்தியோகஸ்தர் வீட்டில் பையனுக்கு டியூஷன் சொல்லித் தருகிறான். அதே வீட்டில், மிஸ் மேரி, பெண்ணுக்குப் பாட்டு சொல்லித் தருகிறாள். அந்த வீட்டுக்காரர் உத்தியோகம் மாறுதலாகி, அந்த ஊரை விட்டுப் புறப்படுகிறார். டியூஷன்கள் அதன் காரணமாக நிறுத்தப் படுகின்றன.

கணவனும் மனைவியுமாக இருக்கும் இரண்டு உபாத்தியாயர்கள் தேவை என்ற விளம்பரத்தைப் பார்த்த பாலு மேரியின் உதவியை நாடுகிறான். முதலில் மறுத்து, விகல்பமெடுத்த மேரி கடைசியில் அவன் வழிக்கு வருகிறாள். பிச்சைக்காரன் லோகிதாசனுடன் ஆண்டிப்பேட்டைக்குச் சென்று இருவரும் அந்த வேலையை ஏற்றுக் கொள்ளுகின்றனர். சந்தர்ப்பக் கோளாறுதான் காரணம். மேற்படி கோளாற்றின் காரணமாக எழும் பலவிதச் சிக்கல்கள்தான் விஜயாவின் "மிஸ்ஸியம்மா" கதை.

மேற்படி சிக்கல்களைக் கவனித்துப் புரிந்து கொண்டு விட்டோமானால், இந்தப் படத்தில் வரும் சம்பவங்களுக்கு அனாவசியமாகக் காரணம் தேடித் தவிக்க மாட்டோம். இப்படி ஏன் நிகழ வேண்டும், இது நிகழக்கூடியதுதானா, இந்த நிகழ்ச்சிக்கும் நம் வாழ்க்கைக்கும் பொருத்தம் இருக்கிறதா என்றெல்லாம் கேள்வி கேட்க மாட்டோம். ஒரு நல்ல பொழுது போக்குப் படம், விரஸமில்லாத காட்சிகள் நிறைந்த சுவாரஸ்யமான படம் பார்க்கிறோம் என்கிற நினைவுடன் படத்தைப் பார்க்க ஆரம்பிக்க வேண்டும்.

வெறியன் டேவிட், மிஸ் மேரியின் தந்தைக்குக் கடன் கொடுக்கவில்லை யென்றால், மேரி வேலை தேடி அலைந்திருக்க மாட்டாள்; மேரிக்கு வேலை தேட வேண்டிய நிர்ப்பந்தம் இல்லை யென்றால் அவள், பாலுவுடன் கணவன்-மனைவி நாடகத்துக்கு இசைந்திருக்க மாட்டாள். மிஸ் மேரியும் பாலுவும் கணவன்-மனைவியாக நடித்திருக்கவில்லை யென்றால் ஆண்டிப் பேட்டை ஜமீன்தார் தம் மகளின் நினைவுச்சின்னமாகத் தாம் நடத்திவரும் மகாலட்சுமி ஆரம்பப் பள்ளியில் அவர்களுக்கு வேலை கொடுத்திருக்க மாட்டார். ஜமீன்தாரின் நாலு வயதுக் குழந்தை பதினாறு ஆண்டுகளுக்கு முன்பு காணாமற் போகவில்லை யென்றால் கதையே இல்லை. காணாமற்போன மகாலட்சுமியின் காலில் ஒரு மச்சம் இல்லை யென்றால் துப்பறியும் ராஜுவால் கூட அவளைக் கண்டு பிடித்திருக்க முடியாது.

மகாலட்சுமியின் காலில் இருந்த மச்சம் மிஸ் மேரியின் காலில் இல்லை யென்றால் திரைப்படக் கதை வேறெங்காவது திரும்பி யிருக்கும். காதல் பைத்தியம் டேவிட், மிஸ் மேரியைத் தேடிக் கொண்டு ஆண்டிப் பேட்டைக்கு வரவில்லை யென்றால், கதையின் முடிவை இப்படிச் சொல்லி வைத்தாற்போல் அமைத்திருக்க முடியாது.

எல்லாவற்றையும் விட இந்தப் படத்தில் முக்கியமான காட்சி மிஸ் மேரி, டேவிட்டிடம் கடுங்கோபங் கொண்டு கால் செருப்பைக் கழற்றியதுதான். ஆகா! அந்தப் புண்ணியவதிக்கு அத்தனை பெரிய கோபம் வராமலிருந்து அவ்விதம் செய்யாமலிருந்தால் திரைப்படத்தின் கதி என்ன ஆகியிருக்குமோ! கர்த்தருக்குத்தான் தெரியும்.

ஜமீன்தார் மகள் சீதா பாலுவினிடம் நெருங்கிப் பழகுகிறாள்; நடனமும் பாட்டும் பயில்கிறாள்; அவனைக் கெஞ்சுகிறாள்; கொஞ்சுகிறாள்; அபிநயம் பிடிக்கிறாள்; இதெல்லாம் நமக்குப் பிடிக்காவிட்டாலும் கதையின் முக்கியமான திரும்புமுனையை உத்தேசித்துச் சகித்துக் கொள்ள வேண்டியதுதான். அந்த அசட்டுப் பெண் அப்படி அசட்டுத்தனமாக நடந்துகொள்ளவில்லை யென்றால், மிஸ் மேரி பாலுவைக் கல்யாணம் செய்து கொண்டிருக்க மாட்டாள். அந்த அளவுக்கு அவள் உள்ளத்தைக் கனிய வைத்த அந் நிகழ்ச்சியைப் புறக்கணிக்க முடியாதல்லவா!

இந்தப் படத்தின் உயிர் நாடியாயிருந்து, கதைக்குக் கவர்ச்சியும் அழகும் அளிப்பவர் ஸ்ரீமதி சாவித்திரிதான். அவர் மிஸ் மேரியாகத் தோன்றி ஒவ்வொரு கட்டத்திலும் பாத்திரத்தின் இயல்பை உணர்ந்து நடித்திருக்கிறார்.

ஆரம்பத்தில் பாட்டு டியூஷன் சொல்லித் தருவதிலிருந்து, வேலை தேடும் போதும், பாலுவைச் சந்திக்கும் போதும், அவனுடன் சம்பாஷிக்கும் போதும், டேவிட்டின் காதலைத் திரஸ்கரிக்கும் போதும், பாலுவுடன் வேலை பார்க்கும் போதும் பிரமாதமாக நடித்திருக்கிறார். ஜமீன்தாரிணியின் அன்புப் பிணைப்பில் சிக்கித் தவிக்கும் அபலை மேரி

யின் நிலை ஸ்ரீமதி சாவித்திரியின் மூக பாவங்களில் நன்கு பிரதிபலிக்கிறது.

பாலுவின் பாத்திரத்தை ஜெமினி கணேசன் ஏற்று நடித்து அதற்குத் தனி உரிமை பெற்று விட்டார். மிஸ் மேரியைத் தம் 'ஐடியா'வுக்குச் சம்மதிக்கச் செய்தது, ஆண்டிப் பேட்டையில் வேலை பார்த்தது, ஜமீன்தார் மகள் சீதாவிடமும் மிஸ் மேரியிடமும் அகப்பட்டுக் கொண்டு தவித்தது, மேரியின் கோப தாபங்களுக்கு ஈடு கொடுத்தது, கடைசியில் காலை முறித்துக் கொண்டது போல் நடித்துக் காதலில் வெற்றி பெற்றது ஆகிய கட்டங்களில் ஜெமினி கணேசன் சக்கைப் போடு போட்டு விட்டார். காதலில் வெற்றிபெற்றதுடன் படத்திலும் பாலுவுக்கு முழு வெற்றிதான்.

மிஸ்ஸியம்மாவின் வெற்றிக்கு வேலைக்கார லோகிதாசன் ரொம்ப ரொம்ப முக்கியமானவன் ; "தருமம் தலை காக்கும்" என்று பாட்டுப் பாடிப் பிச்சை யெடுக்கும் காட்சியிலிருந்து, வென்னீயப் பனைத் தன்னைச் சொல்லி உளவு சொல்லும் கட்டங்கள் வரையில் லோகிதாசன் எல்லாரையும் சிரிப்பாய்ச் சிரிக்க அடிக்கிறான். அந்தப் பாத்திரத்தை ஏற்று நடிப்பவர் தலைசிறந்த ஹாஸ்ய நடிகர் ஸ்ரீ கே. சாரங்கபாணியல்லவா ! நன்றாய் நடிப்பதுதானே அவர் 'பாணி'!

இந்தப் படத்தில் அந்தப் 'பாணி'க்கு நல்ல வாய்ப்பு கிடைத்திருக்கிறது. கிடைத்த வாய்ப்பைச் சுவை குன்றாமல் பயன்படுத்தி அருமையாக வெற்றி பெற்று விட்டார் ஸ்ரீ சாரங்கபாணி.

துப்பறியும் சிங்கமாக நடிக்கும் தங்கவேலு எல்லாக் கட்டங்களிலும் தங்கமாக நடிக்கிறார்.

வெறியன் டேவிட்டாக நடிக்கும் ஸ்ரீ நம்பியார் மிகவும் திறமையாகவே நடித்திருக்கிறார்.

டைரக்டர் ஸ்ரீ பிரஸாத்தின் திறமையான டைரக்ஷனில் படம் விறுவிறுப்பாகச் செல்கிறது.

"மிஸ்ஸியம்மா" ஒரு நல்ல படம் ; யாவரும் குடும்பத்துடன் பார்த்து ரஸிக்கக் கூடிய படம்.




"இன்று பகுள பஞ்சமி. இந்த பகுள பஞ்சமியில்தான் நமது சங்கீத மூர்த்தி ஸ்ரீ தியாகராஜர் சமாதி அடைந்தார். இதே பகுள பஞ்சமியில் திருவையாறு தியாகராஜ ஆராதனை நடந்த தினத்திலேதான், மாலையில் அந்தச் செய்தி வந்தது—காந்திஜி மறைந்தார் என்று. எனவே, இன்று–பகுள பஞ்சமியன்று — நாம் காந்திஜி மண்டப நிதிக்கு நம்முடைய காணிக்கையைச் செலுத்தும்படி நேர்ந்தது ஒரு எதிர்பாராத பொருத்தமே!"

பெப்ருவரி 11-ந் தேதி சென்னை கர்நாடக சங்கீதக் கல்லூரியின் தலைவர் ஸ்ரீ முசிரி சுப்பிரமணிய ஐயர் தமது வரவேற்புரையில் இவ்வாறு குறிப்பிட்டார். சங்கீத வித்வான்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து அன்று, காந்தி மண்டப நிதிக்குச் சென்னை கவர்னர் ஸ்ரீ பிரகாசா அவர்களிடம் தங்கள் காணிக்கையாக ரூபாய் ஆயிரத்து எண்பத்தாறு சமர்ப்பித்தார்கள்.

இந்த வைபவத்துக்குச் செம்மங்குடி ஸ்ரீநிவாஸய்யர் அனுப்பியிருந்த வாழ்த்துச் செய்தியில், "தேசத் தந்தை காந்தியடிகளின் மணி மண்டபத் திருப்பணிக்கு நம் சங்கீத கலைஞர்களின் காணிக்கையை மேன்மை தங்கிய சென்னை கவர்னர் ஸ்ரீ பிரகாசா அவர்களிடம் சேர்ப்பிக்கும் விழா இனிது நடந்தேற ஆண்டவனைப் பிரார்த்திக்கிறேன்......காந்தியடிகளின் மணி மண்டபத் திருப்பணிக்கு முக்கியமாக இருந்து அரும்பணி ஆற்றிய அமரர் கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களை இந்த சமயத்தில் நினைக்காமல் இருக்க முடியாது. அன்னாருக்கு சங்கீத மண்டலம் என்றும் கடமைப்பட்டிருக்கிறது" என்று குறிப்பிட்டிருந்தார்.

நமது தென்னாட்டு சங்கீத வித்வான்கள் செய்த இந்த அருமையான காரியத்தைப் பாராட்டுகிறோம். ராமபிரானுடைய பரம தாஸரான ஸ்ரீ தியாகப் பிரும்மத்தைச் சதா சர்வதா சங்கீதத்தினால் ஆராதித்து வரும் நமது வித்வான்கள், ராமபிரானின் பரம பக்தரும் நமது சுதந்திர பாரத புண்ய பூமியின் தந்தையுமான மகாத்மா காந்திஜிக்குத் தங்கள் அஞ்சலியை இவ்வாறு தெரிவித்துக் கொண்டது மிகவும் பொருத்தமாகும். தேசபக்தி மிக்க அருமையான காரியமாகும். இதையே கவர்னர் அவர்களும் வெகுவாகப் பாராட்டிப் பேசினார்.

"எனக்கு வடநாட்டு வித்வான்களையும் தெரியும், தென்னாட்டு வித்வான்களையும் தெரியும். வடநாட்டு வித்வான்களுக்கு வாங்கத் தெரியும், உங்கள் மாதிரிக் கொடுக்கத் தெரியாது!" என்று கவர்னர் அவர்கள்



**முக்கியமான தென் இந்தியப் படாதிபதிகளில் ஒருவர். பிரபல திரைப்பட டைரக்டர். புதிய புதிய முறைகளில் படங்களைத் தயாரிக்க வேண்டும் என்று ஆர்வ மிக்கவர். அனேக தமிழ், தெலுங்குப் படங்களைத் தயாரித்துத் தந்த கலைஞர் ஸ்ரீ பி என். ரெட்டி. சங்கீத நாடக அகாடமியின் அங்கத்தினர்.**

---

ஹாஸ்யத்தோடு குறிப்பிட்ட போது அங்கு கூடியிருந்த வித்வான்களும், சங்கீத அன்பர்களும் அதைப் பலத்த கரகோஷத்துடன் அநுபவித்தார்கள்!

இந்த விழாவுக்கு நமது அருமைத் தலைவர் ராஜாஜியும், சென்னை மேல் சட்டசபைத் தலைவர் டாக்டர் பி. வி. செரியனும் விஜயம் செய்து வித்வான்களைக் கௌரவித்தார்கள்.

"ராஜாஜியின் முயற்சியே இந்த யோசனை உருவானதற்குக் காரணம். இனி இந்த மண்டபம் எழுந்து வளரும் நிலையில் நீங்கள் அடிக்கடி வந்து பார்க்க வேண்டும். பிரார்த்தனை மண்டபம் பூர்த்தியானதும், அங்கே உங்களுடைய துதிப் பாடல்கள் முழங்குமாக!" என்று ஸ்ரீபிரகாசா அவர்கள் நமது சங்கீத வித்வான்களுக்கு அன்போடு அழைப்புக் கூறித் தமது மகிழ்ச்சியை வெளியிட்டார்.

அந்த மகிழ்ச்சிக்குச் சான்றாக அன்று விழாவின் ஆரம்பத்தில் சங்கீதக் கல்லூரி மாணவிகள் பாடிய பஞ்சரத்னக் கீர்த்தனைகள் பக்தியும் இசை இன்பமும் இணைந்து உள்ளத்தை நிரப்பின.

நிதி விவரம் வருமாறு :—

ரூ. 25—0—0 கொடுத்தவர்கள் :—அரியக்குடி ஸ்ரீ ராமானுஜ அய்யங்கார், முசிரி ஸ்ரீ சுப்பிரமணிய அய்யர், மகாராஜபுரம் ஸ்ரீ விசுவநாத அய்யர், செம்மங்குடி ஸ்ரீ சீனிவாசய்யர், ஸ்ரீ சுவாமிநாத பிள்ளை, ஸ்ரீ ராஜமாணிக்கம் பிள்ளை, ஸ்ரீ பாப்பா வெங்கட்ராமய்யர், ஸ்ரீமதி பட்டம்மாள், பழனி ஸ்ரீ சுப்பிரமணிய பிள்ளை, ஸ்ரீ ஜி. என். பாலசுப்ரமணியம், ஸ்ரீமதி எம்.எல். வஸந்தகுமாரி, ஸ்ரீ தண்டபாணி தேசிகர், ஸ்ரீ ராமையாப் பிள்ளை, ஸ்ரீமதி பால சரஸ்வதி, ஸ்ரீ டி. என். கிருஷ்ணன், ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி, பாலக்காடு ஸ்ரீ மணி, ஆலத்தூர் சகோதரர்கள், மதுரை ஸ்ரீ மணி அய்யர், குழிக்கரை ஸ்ரீ பிச்சையப்பா, காருகுறிச்சி ஸ்ரீ அருணாசலம், திருவீழிமிழலை சுப்ரமண்ய பிள்ளை சகோதரர்கள், ஸ்ரீ வீருசாமிப் பிள்ளை, ஸ்ரீமதி ஸி. சரஸ்வதி பாய், செம்பை வைத்தியநாத பாகவதர், வீணை ஸ்ரீ சாம்பசிவய்யர்.

ரூ. 15—0—0 கொடுத்தவர்கள் :—ஸ்ரீ டி. என். சுந்தரேசய்யர், நாச்சியார் கோவில் ஸ்ரீ ராகவப் பிள்ளை.

ரூ. 10—0—0 கொடுத்தவர்கள் :— மாயவரம் ஸ்ரீ கிருஷ்ணய்யர், ஸ்ரீ டி. கே. மூர்த்தி, ஸ்ரீ கோதண்டராமய்யர், கோயமுத்தூர் ஸ்ரீ ராமசாமி, ஸ்ரீ ஆர். கே. வெங்கடராம சாஸ்திரி, தேவகோட்டை ஸ்ரீ நாராயணய்யங்கார், ஸ்ரீ எம். ஏ. கல்யாண கிருஷ்ண பாகவதர், வரகூர் ஸ்ரீ முத்துஸ்வாமி அய்யர், ஸ்ரீமதி பிருந்தா, ஸ்ரீ அண்ணாசாமி பாகவதர், மாயவரம் ஸ்ரீ ராஜம் அய்யர், பாலக்காடு ஸ்ரீ ரகு, ஸ்ரீ எஸ். பாலசந்திரன், வேலூர் ஸ்ரீ ராமபத்ரன், சித்தூர் ஸ்ரீ சுப்ரமணிய பிள்ளை, ஸ்ரீ நாராயணசாமி (அரியக்குடி சிஷ்யன்), வீணை வித்வான் ஸ்ரீ எஸ். ராமநாதன், ஸ்ரீ டி. கே. ரங்காச்சாரி, ஸ்ரீ டி. ஆர். பாலசுப்பிரமணியம், லால்குடி ஸ்ரீ ஜெயராமன், மதுரை ஸ்ரீ கிருஷ்ணய்யங்கார், ஸ்ரீ பி. ஐ. நடேசப் பிள்ளை, ஸ்ரீ சமனி சங்கர சாஸ்திரி, ஸ்ரீ எஸ். வி. பார்த்தசாரதி, ஸ்ரீமதி டி. முக்தா.

ரூ. 5—0—0 கொடுத்தவர்கள் :—பூதலூர் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரி, காரைக்குடி ஸ்ரீ முத்து அய்யர், ஸ்ரீ பி. பாலகிருஷ்ணய்யர், பிடில் ஸ்ரீ மணி, பிடில் ஸ்ரீ ராஜம், கோயமுத்தூர் ஸ்ரீ ராஜப்பையர், ஸ்ரீ பி. ராஜம், பிடில் வித்வான் திருக்கோடிக்காவல் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி, ஸ்ரீ ராஜகோபாலன், திருப்பாற்கடல் ஸ்ரீ வீரராகவன், மணக்கால் ஸ்ரீ ரங்கராஜன், புல்லாங்குழல் ஸ்ரீ டி. கே. ராதா கிருஷ்ணன், பிடில் ஸ்ரீ டி. கே. ராமச்சந்திரன், கல்பாத்தி ஸ்ரீ ராமநாதன், மிருதங்கம் ஸ்ரீ ஏ. கண்ணன், ஸ்ரீ பாபநாசம் சிவன், ஸ்ரீ கே. எஸ். வெங்கடராமன், ஸ்ரீ எஸ். ஆர். ஜானகிராமன், ஸ்ரீ வி. கோவிந்தசாமி நாயகர், ஸ்ரீ சேதுராமய்யா, ஸ்ரீ எஸ். வி. எஸ். நாராயணன், பத்தமடை ஸ்ரீ சுந்தரமய்யர், பத்தமடை ஸ்ரீ கிருஷ்ணய்யர், சித்தூர் ஸ்ரீ கோபால கிருஷ்ணன், கடம் ஸ்ரீ வில்வாத்ரி ஐயர்.

ரூ. 1. கொடுத்தவர் : ஸ்ரீ கே. வி. கிருஷ்ணய்யர்.

ஸ்ரீ சுவாதித் திருநாள் சங்கீதக் கலாசாலை ஆசிரியர்கள் அளித்த நன்கொடை விவரம் :

ரூ. 3—0—0 கொடுத்தவர்கள் :—ஸ்ரீ என். வி. நாராயண பாகவதர், ஸ்ரீ கே. ஆர். குமாரசாமி ஐயர், ஸ்ரீ கே. வி. கேசவ பாகவதர், ஸ்ரீ வி. எஸ். கிருஷ்ணய்யர், ஸ்ரீ என். ஜி. சீதாராம ஐயர், ஸ்ரீ கே.எஸ். ஹரிஹர அய்யர், ஸ்ரீ கே. எஸ். நாராயணசாமி அய்யர்.

ரூ. 2—0—0 கொடுத்தவர் :—ஸ்ரீ கே. கே. சிவராமன்.

ரூ. 1—0—0 கொடுத்தவர்கள் :—ஸ்ரீ என். சங்கர், ஸ்ரீ டி. வி. கிருஷ்ணமூர்த்தி, ஸ்ரீ கே. ஏ. கிருஷ்ணமாச்சாரி, ஸ்ரீ எஸ். கணேச சர்மா, ஸ்ரீமதி பி. பொன்னம்மாள், ஸ்ரீமதி ஜானகி, ஸ்ரீமதி எம். சாந்தம்மா.





அது சதா சந்தோஷமற்ற குழந்தையாகவே இருந்தது. வயதிற்கேற்ற திடமான வளர்ச்சியுமில்லை. எப்பொதும், சிணுக்கம்; அதிருப்தி. அதனால் அதன் தாயார் மனக்கவலையுற்றது இயற்கைதானே?

பின்னர் ஒரு நாள் .... சந்தோஷத்துடன் துள்ளிவிளையாடும் ஒரு அழகிய 'க்ளாக்ஸோ' குழந்தையின் தாயான அவளது அண்டை வீட்டுக்காரி, கவலைப்படும் இவ்வன்னையிடம் இரங்கி 'க்ளாக்ஸோ'வைச் சிபாரிசு செய்தாள்






திடமான எலும்புகளும் பற்களும் வளர்வதற்கெனவே விடமின் டி யும், ரத்த புஷ்டிக்கென இரும்புச்சத்தும் சேர்த்துத் தயாரிக்கப்பட்ட 'க்ளாக்ஸோ' ஒரு சுத்தமான போஷாக்களிக்கும் பால் ஆகாரம்.

குழந்தையின் முகத்தில் குதூகலம் பொங்குகிறது இப்பொழுது —கிரமமாக தேகதிடம் பெற்று, நன்கு உண்டு, உறங்கி வருகிறது. ஆம், உண்மையாகவே - அது வேறொரு குழந்தைதான் - அதாவது, ஆரோக்யமும் ஆனந்தமும் பெற்ற 'க்ளாக்ஸோ' பேபி.

# Glaxo

"க்ளாக்ஸோ" ஒரு சிறந்த சுத்தமான போஷாக்களிக்கும் பால் ஆகாரம்.

'க்ளாக்ஸோ' லேபரடரீஸ் (இந்தியா) லிமிடெட்
பம்பாய் - கல்கத்தா - மதருஸ்

# இரண்டும் வாட்டர்புரூப் கடியாரங்கள் —
# அவை ரோலெக்ஸ் தயாரிப்புகளுந்தான்



ஆடவருக்கேற்றது டியூடர். அதன் வாட்டர் புரூப் கேஸ் உள்ளிருக்கிற நேர்மையான 17 ஜுவல் யந்திரத்தை தூசி, அழுக்கு, ஈரம் புகாமல் பாதுகாக்கின்றது. வெளியே அது வல்களுடைய பெண்மணிகளுக்கு டியூடர் ஆய்ஸ்டர் கடியாரத்தை சிபார்சு செய்வோம் — வருடக்கணக்கில் சேவைபுரியும். எமது டியூடர் கடியாரங்களின் எல்லா நிறுசுகளையும் வந்து பாருங்கள் — நேரில் வரமுடியாதவர்களுக்கு ஒரு இலவச காட்லாக் அனுப்புவோம்.



## டியூடர்

கடியாரங்கள்

ஜெனிவா, ஸ்விட்ஸர் லாந்து, தயாரிப்புகள்

தென்இந்தியாவில் ஏக விநியோகஸ்தர்கள்:

**மெஸர்ஸ் பி. ஆர் & ஸன்ஸ் லிட்.,**

மவுண்ட் ரோட், மதராஸ்

R. 756

# சக்கரவர்த்தித் திருமகன்

## 54. இடது கண் துடித்தது!

எதிர்பாராத கஷ்டங்களும் விபத்துகளும் ஒன்றன்பின் ஒன்றாக வந்ததைக் கண்டு விதியின் போக்கை யாராலும் விலக்க முடியாது என்கிற உணர்ச்சி மனத்தைக் கவர்ந்து ராமலக்ஷ்மணர்கள் தங்களுக்குள்ள இயற்கை தைரியத்தை அவ்வப்போது இழந்தார்கள். ஆனபோதிலும் ஒருவரை ஒருவர் தேற்றிக் கொண்டு சென்றார்கள்.

காட்டில் போய்க் கொண்டிருந்த பொழுது எதிர்பாராதபடி ஒரு கோர உருவம் கொண்ட ராக்ஷசனுடைய கையில் இரு ராஜகுமாரர்களும் அகப்பட்டுக் கொண்டார்கள். அந்த ராக்ஷசனுக்குத் தலையுமில்லை, கால்களுமில்லை. பெரிய வயிறும், மிக நீண்ட இரண்டு கைகளுமே அவன் உருவம். காட்டில் ஒரு இடத்தில் அசையாமலிருந்து கொண்டு இரண்டு கைகளையும் நீட்டி அவற்றுள் அகப்படும் புலி, கரடி முதலிய மிருகங்களை வயிற்றுக்குள் போட்டுக் கொண்டு தின்று விடுவான். வயிற்றிலேயே அவனுக்கு ஒரு பெரிய வாய். மார்பிலே ஒரு கண். பார்த்தாலும் சகிக்க முடியாத இந்தக் கோர உருவத்தோடு இருந்த அரக்கன் கையில் அகப்பட்ட இராஜ குமாரர்கள் கொஞ்ச நேரம் திகைத்தார்கள். இன்னது செய்வது என்று தெரியவில்லை. பிறகு ராமன் லக்ஷ்மணனுக்குச் சொன்னான்: "நீ ஒரு கையை வெட்டித் தள்ளு, நான் ஒரு கையை வெட்டி விடுகிறேன்."

ராஜாஜி

அப்படியே செய்தார்கள். அந்த அரக்கன் பெயர், கபந்தன். கைகள் வெட்டியவுடன் ஒன்றும் செய்ய முடியாமல் அரக்கன் பேச ஆரம்பித்தான். "நான் செய்த துராக்கிரமத்தால் சாபம் பெற்று இந்த உருவத்தில் வாழ்ந்து வந்தேன். நீங்கள் ராம லக்ஷ்மணர்கள் என்று எண்ணுகிறேன். நீங்கள் வந்து என் கைகளை வெட்டி விட்டு என் உடலை தகனம் செய்தீர்களாகில் நான் என் சொந்த உருவம் பெறுவேன். இதுவே எனக்கு இந்திரன் சொன்ன சாப விமோசனம்" என்றான்.

ராஜகுமாரர்கள் கபந்தனை எரித்தார்கள். எரிந்ததும் அவன் திவ்ய மங்கள ரூபத்துடன் நெருப்பிலிருந்து வெளி வந்து சுவர்க்கம் செல்ல விமானம் ஏறினான். "நீங்கள் சீதையை அடைவீர்கள். மிகவும் ரம்யமான பம்பா தீரத்துக்குச் சென்று அங்கே ரிச்யமூக மலையில் வசித்து வரும் சுக்கிரீவன் என்ற வானர ராஜாவின் உதவியைப் பெற வேண்டும். அவன் தன் அண்ணனாகிய வாலியால் ராஜ்யத்திலிருந்து துரத்தப்பட்டு கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறான். அவனுடைய நட்பை நீங்கள் சம்பாதித்தாலொழிய உங்கள் காரியம் நிறைவேறாது" என்று சொல்லி மறைந்தான்.

* * *

பிறகு ராமனும் லக்ஷ்மணனும் பம்பையை நோக்கிச் சென்றார்கள். அந்த அழகிய பிரதேசத்தில் மதங்க ரிஷியின் சிஷ்யையான சபரி என்கிற விருத்த சந்நியாசியம்மையைக் கண்டு அவளுடைய உபசாரத்தைப் பெற்றார்கள். சபரியம்மை மகாஞானி. ராமன் ஈசுவராவதாரம் என்பதை அறிந்தவள். அவன் வருவான். அவனைக் கண்டு அவன் பாதத்தில் வணங்கி பரமபத மடையவே காத்திருந்தாள். ராமனுக்காகத் தான் தேடி வைத்திருந்த மிகுந்த ருசியான பழங்களை அவனுக்கும் லக்ஷ்மணனுக்கும் தந்து உபசரித்தாள்.

பிறகு சபரி அவ்விடத்திய மகிமைகளையெல்லாம் ராமனுக்குக் காட்டியும் சொல்லியும் தீயெழுப்பி அதில் பிரவேசித்து உடலை நீத்து மேலுலகம் சென்றாள்.

சபரியைக் கண்டு பம்பாசரஸில் ஸ்நானம் செய்தபின் ராம லக்ஷ்மணர்கள் தைரிய மடைந்தார்கள். பிறகு செய்ய வேண்டியதை யோசித்தார்கள். "லக்ஷ்மணா! என் உள்ளத்தில் வெற்றியடைவோம் என்கிற உணர்ச்சி தோன்ற ஆரம்பித்திருக்கிறது. சுக்கிரீவனைப் பார்க்கும் வழி தேடுவாய்" என்றான் ராமன்.

பம்பை நோக்கிச் சென்றார்கள். பம்பையாறும் தடாகமும் வனமும் வசந்த பருவத்துக்குரிய அழகோடு சோபித்தன. மிருகங்களும், பறவைகளும், மரங்களும், கொடிகளும் தம்முடைய இயற்கை சௌந்தரியத்தைக் காட்டி ராமனுடைய துக்கத்தை முன்னை விட அதிகமாக வளரச் செய்தன. எதைப் பார்த்தாலும் சீதை இதை எவ்வளவு அனுபவித்திருப்பாள் என்கிற எண்ணமே அவன் உள்ளத்தை வாட்டிற்று. அவதார சங்கற்பத்தின்படி அனுபவிக்க வேண்டிய மானுட துயரத்தை எவ்வளவு அடக்கியாளப் பார்த்தாலும் முடியவில்லை. எப்போதுமே தைரியமும் ஸ்தைர்யமும் கொண்ட ராமனுடைய மனம் தளர்ந்து போய் கஷ்டப்படுவதைப் பார்த்து லக்ஷ்மணன் ஆறுதல் மொழிகள் சொல்லி வந்தான். "தேவர்களின் தாயாகிய அதிதியின் கர்ப்பத்தில் மூடி வைத்தாலும் சீதையைக் கண்டு பிடிப்போம். ராவணன் தப்பிப் போக மாட்டான். நிச்சயம், அவனை வதைத்து சீதையை மீட்போம். இந்த மனத் தாழ்ச்சி உனக்குத் தகாது. கவலையும் அதைரியமும் உன்னை அண்டலாமா? அவற்றைத் தூர விலக்கு. ஒரு பொருள் இருந்தால் அதை மறுபடி பெறுவதற்கு மனிதன் இடைவிடாத முயற்சியுடன் வேலை செய்ய வேண்டும். நம்முடைய அன்பே நமக்கு விரோதியாகப் போகிறது. அன்பின் காரணம் மனம் சோகத்தில் சிக்கி யலைந்து தளர்ச்சி அடைந்து முயற்சியைத் தடுக்கிறது. உனக்கு நான் சொல்ல வேண்டுமா? உற்சாகமே மனிதனுக்கு முக்கிய சாதனம். சோகமும் அதை உண்டாக்கும் அன்பையும் மறந்து உற்சாகத்தை மேற்கொண்டு முயற்சி செய்வோமாக. தைரியம் செய்துகொண்டு சோகத்தைத் தள்ளுவாய், அண்ணா!"

இவ்வாறெல்லாம் தம்பி அண்ணனுக்கு உபதேசம் செய்தான். ஆதிசேஷன் மகா விஷ்ணுவுக்குக் காப்பு. அந்த ஆதிசேஷனைப் போல் இளைய பெருமான் சக்கரவர்த்தித் திருமகனை உற்சாகப் படுத்தி மனத் தாழ்ச்சியை விலக்கினான் என்பது பெரியோர்களுடைய வியாக்கியானம்.

• • •

ராமன் ரிச்யமூக வனம் வந்து இங்குமங்கும் வில் பிடித்துத் திரிவதைப் பார்த்து சுக்ரீவனுக்கும் அவன் கூட்டத்துக்கும் பெரும் பயம் பிடித்துக் கொண்டது. வாலியால் துரத்தி யடிக்கப்பட்ட சுக்ரீவன், வாலி வரமுடியாத இடம் என்று கண்டு அந்த மலைப் பிரதேசத்தில் வாசம் செய்து கொண்டிருந்தான். இங்கும் வாலி மாறு வேஷம் போட்டுக் கொண்டு தன்னைக் கொல்ல வந்து விட்டானோ என்று சுக்ரீவன் பயந்தான். அல்லது வாலியினுடைய நண்பர்கள் க்ஷத்திரிய வீரர்கள் யாரோ அவன் சார்பில் வந்து தன்னைக் கொல்லப் பார்க்கிறார்கள் என்றும் பயந்தான். வனத்தி லுள்ள மற்ற வானரர்களும் கிலிபிடித்து இங்குமங்கும் ஓடினர்.

ஹனுமான் சுக்ரீவனுடைய முக்கிய மந்திரி. அவன் சுக்ரீவனுக்குத் தைரியம் கூறினான். "இது வாலியல்ல. இவர்கள் வாலியின் நண்பர்களாகவும் காணப்படவில்லை. பயப்பட வேண்டிய காரணமில்லை. நான் போய்ப் பேசித் தெரிந்து கொண்டு வருகிறேன்" என்று சொன்னதன் பேரில் சுக்ரீவன் மிக மகிழ்ச்சியடைந்து "அப்படியே செய். ஜாக்கிரதையாகப் போய் விஷயத்தைத் தெரிந்து கொண்டு வா. மிக சாமர்த்தியமாக உண்மையை உணர வேண்டும். எனக்கு ரொம்ப சந்தேகமாகத்தான் இருக்கிறது. அவர்கள் இங்கு மங்கும் தேடுவதைப் பார்த்தால் என்னைக் கண்டு பிடித்துக் கொல்லவே வந்திருப்பதாகத் தோன்றுகிறது" என்றான்.

ஹனுமான் ராம லக்ஷ்மணர்களிருந்த இடம் ஒரு பிராமண வடிவமெடுத்துச் சென்றான். போய் நின்றதுமே ஹனுமானுடைய உள்ளத்தில் ஒரு புது உணர்ச்சி உண்டானதாகத் தெரிகிறது. உள்ளதை உள்ளது போல் சொல்லிப் பேசலானான் நிகழ்ச்சியை எழுதும்போது தான் யார் என்பதைக் காட்டாமல் விஷயம் கண்டு கொள்ளவே போனதாக முனிவர் ஆரம்பிக்கிறார். ஆனால் போகப் போக ஒன்றும் மறைக்காமல் தன்னைப் பற்றியும் வானர ராஜனைப் பற்றியும் விவரமாகப் பேசுகிறான். ராம லக்ஷ்மணர்களுடைய தோற்றத்தைக் கண்டதும் நாதனைக் கண்ட பக்தனைப் போல் பரவசப்பட்டு அனுபவித்துப் புகழ்கிறான். தான் ஒரு வானரம், தன்னுடைய அரசன் சொல்லிய வண்ணம் வேஷம் போட்டுக் கொண்டு வந்ததாகவே சொல்லி விடுகிறான்.

"மனத்தைக் கவரும் ரூபம் தரித்த ராஜரிஷிகளே! தேவர்களைப் போல் விளங்குகிறீர்கள். விரதம் பூண்டவர்களாகக் காணப்படுகிறீர்கள். தவம் செய்ய வந்தீர்கள் என்றே எண்ணுகிறேன். இந்தக்

ஷ்டமான வனத்துக்கு ஏன் வந்தீர்கள்? நீங்கள் யார் என்று சொல்ல வேண்டும். இந்த நதியும் வனமும் உங்கள் வரவால் முன்னை விட அழகாக விளங்குகின்றன. உங்களுடைய முகக் காந்தியும் உங்கள் சரீர சௌந்தரியமும் ஆச்சரியமாக விளங்குகின்றன. உங்களுடைய அபூர்வ லக்ஷணங்களைக் கண்டு இந்த வனத்திலுள்ள ஜீவன்கள் பயப்படுகின்றன. உங்கள் பராக்கிரமம் சொல்லாமலே விளங்குகிறது. நீங்கள் யார், எந்த தேசத்திலிருந்து வந்திருக்கிறீர்கள்? நீங்கள் பெரிய ராஜ்யத்தை ஆட்சி புரியவே பிறந்தவர்கள் என்பது வியக்தம். ஆயினும் தாபஸ வேஷம் தரித்திருக்கிறீர்கள். ஜடையும் மரவுரியும் தரித்து வில்லும் அம்புமாக வந்திருக்கிறீர்கள்.

"நான் இவ்வளவு சொல்லியும் ஏன் பேசாமலிருக்கிறீர்கள்? இங்கே சுக்ரீவன் என்கிற வானரராஜன் தன் அண்ணன் வாலியால் நாட்டிலிருந்து துரத்தப்பட்டு இங்குமங்கும் அலைந்தும் மறைந்தும் காலம் கழித்துவருகிறான். மிகவும் துக்கப்பட்டு வருகிறான். அவனுடைய மந்திரி நான். என் பெயர் ஹனுமான். நான் வாயுவின் புத்திரன். அரசன் உத்தரவிட்டபடி பிராமண சந்நியாசி உருவம் தரித்து உங்களிடம் வந்திருக்கிறேன்."

இவ்வாறு ஹனுமான் மிக வணக்கமாகச் சொன்ன மொழிகளைக் கேட்டு ராமன் லக்ஷ்மணனுக்குச் சொன்னான்:

"தம்பி, இந்த ஹனுமான் பேசினதைக் கேட்டு இவனிடம் எனக்கு முழு நம்பிக்கை உண்டாகி யிருக்கிறது. அவன் பேச்சின் அழகைப் பார்த்தாயா? எவ்வளவு சரியான இலக்கணமும் சுவமுமாகப் பேசுகிறான்! வேதங்கள் முழுதும் அத்தியயனம் செய்து வியாகரணம் சம்பூரணமாகக் கற்றவனைப் போல் பேசுகிறான். இவனைப் போல் அல்லவோ இருக்க வேண்டும் தூதன். இத்தகைய தூதனைக் கொண்ட அரசனுக்கு ஒரு குறையுமில்லை. நாம் யாரைத் தேடி வந்தோமோ அவனே நம்மைத் தேடி வந்திருக்கிறான். சுக்ரீவனைக் காண நாம் வந்தோம். அவனே இந்தத் தூதனை அனுப்பி யிருக்கிறான். இவனுக்கு நல்வரவு சொல்லி நம்முடைய அபிப்பிராயத்தைத் தெரிவிப்பாய்!" என்றான்.

* * *

ராம லக்ஷ்மணர்களும் ஹனுமானும் பரஸ்பரம் தங்கள் வரலாற்றையும் கஷ்ட சுகங்களையும் பேசிக் கொண்டார்கள். இந்த சம்பாஷணையின் பயனாக லக்ஷ்மணனுக்கு ஹனுமானிடம் மிகுந்த பிரியம் உண்டாயிற்று. அதை ராமனிடமும் சொன்னான்.

"மகா ஐசுவரியம் படைத்த என் தமையன், சக்கரவர்த்தியின் மூத்த மகன், ராஜ்யத்தை விட்டு விட்டு வன



வாசம் செய்கிறான். உன் அரசனை சுக்ரீவனிடம் தன் காரியம் நிறைவேறுவதற்காக உதவியை நாடி வந்திருக்கிறான். சாபத்தால் ராக்ஷச வடிவம் பெற்ற தைத்யன் ஒருவன் நமக்கு 'சுக்ரீவன் என்கிற வானர ராஜனுடைய சகாயத்தைப் பெற்றீர்களானால் அரக்கன் வஞ்சித்து எடுத்துப் போன ராஜகுமாரியை மறுபடி அடைவீர்கள்' என்று சொன்னான். அவன் சொற்படி இங்கே வந்திருக்கிறோம். உன்னுடைய அரசனுடைய நட்பைத் தேடி வந்திருக்கிறோம்" என்றான் லக்ஷ்மணன்.

வாயு குமாரனான ஹனுமானும் "சுக்ரீவன் வாலியால் பீடிக்கப்பட்டு, ராஜ்யத்தையும் மனைவியையும் இழந்தான். இரண்டையும் மறுபடியும் அடைவான் என்பது இப்போது உறுதியாயிற்று. உங்கள் நட்பை என் அரசன் அடைந்து அவனும் பயனடைவான். உங்களுடைய காரியமும் அவன் உதவியினால் நிறைவேறும்" என்றான்.

பிறகு மிகுந்த சந்தோஷத்தோடு மூவரும் வானர ராஜனான சுக்ரீவன் இருப்பிடம் சென்றார்கள். போகும் மார்க்கம் வானரர்கள்தான் தாண்டக்கூடுமாகையால், ஹனுமான் சுய ரூபமான வானர உருவமெடுத்து இரு ராஜகுமாரர்களையும் தன் தோளின் மீது ஏற்றிக் கொண்டு சென்றான்.

• • •

நல்லவர்களுடைய உள்ளங்கள் வெகு சீக்கிரம் சுலபமாக ஒன்று கூடும். வெகு காலம் ஒரே இடத்தில் கூடி வாழ வேண்டியதில்லை. அநேக சந்தர்ப்பங்களில் ஒருவரோடு ஒருவர் கலந்து பழக வேண்டியதில்லை. இருவர் உள்ளங்களிலும் தானாக உதிக்கும் உணர்ச்சியே நட்பைத் திடீர் என்று உண்டாக்கும்.

**புணர்ச்சி பழகுதல் வேண்டா—உணர்ச்சிதான்**

**நட்பாம் கிழமை தரும்.**

என்பது திருக்குறள் பாட்டு.

தவிர இந்த நட்பு பகவானுடைய சங்கற்பம். ஹனுமானுடைய பக்தியையும் சேவையையும் ராமச்சந்திரன் அடைய வேண்டும் என்று நிச்சயிக்கப் பட்டிருந்தபடியால் ஒருவரை ஒருவர் கண்டவுடனே பூரண நம்பிக்கை தோன்றி விட்டது. தன் தோளின் மேல் இரு ராஜ குமாரர்களையும் தூக்கிச் செல்வது உள்ளத்தில் உண்டாகி விட்ட இணைப்பிலிருந்து தோன்றின மெய்ப்பாடு. நண்பர்களும் காதலர்களும் கட்டியணைத்துக் கொள்வதுபோல் தாசனும் பக்தனுமான ஹனு

மான் தன் சுவாமியைத் தோளின் மேல் மகிழ்ச்சி பரவசமாகத் தூக்கிச் சென்றான்.

ரிச்ய மூகத்திலிருந்து மலயமலை ஏறிப் போய்ச் சேர்ந்ததும் ஹனுமான் சுக்ரீவனிடம் போய் ராம லக்ஷ்மணர்கள் வந்து அரசனைப் பார்க்கக் காத்திருப்பதாகத் தெரிவித்து,

"இந்த ராமன் சிறந்த அறிவும் மற்ற எல்லா நற்குணங்களும் பெற்ற ராஜ குமாரன். இக்ஷ்வாகு குலத்தைச் சேர்ந்த புகழ் பெற்ற மகாராஜா தசரதனுடைய மூத்த குமாரன். தகப்பன் சொல்லை சத்திய மாக்குவதற்காகத் தம்பியுடனும் மனைவியுடனும் அயோத்தியை விட்டு வனம் சென்றான். தசரத மகாராஜன் தன் இளைய மனைவியால் தூண்டப்பட்டு ராமனைஅரண்ய வாசம் செய்யச் சொன்னான். அப்படி ராமன் தம்பி லக்ஷ்மணனுடன் காட்டிலிருந்தபோது ராஜகுமாரர்கள்பக்கத்தில்இல்லாத சமயம்பார்த்து ராமன் மனைவியை ராவணன் தூக்கிப் போய் விட்டான். அவளைத் தேடிக் கண்டு பிடித்துத் தர ராமன் உம் உதவியை நாடி வந்திருக்கிறான். இந்த ராஜகுமாரர்கள் உம்முடைய நட்பை அடையும் தகுதி வாய்ந்தவர்கள். இவர்கள் சிநேகத்தை அடைந்தால் நீரும் பெரும் பயனடைவீர்" என்றான்.

சுக்ரீவன் அழகிய மானுட உருவம் தரித்து ராஜகுமாரர்களைக் கண்டு பேசினான். ராமனை நோக்கிக் கையை நீட்டி "ராஜகுமாரனே! வானரனை என் சிநேகத்தை நீ விரும்புவாயாகில், இதோ என் கை, அங்கீகரிப்பாயாக! உன் குணங்களையும் மகிமையையும் வாயு புத்திரனால் அறிந்தேன்!" என்றான்.

ராமனும் நீட்டிய கையை அங்கீகரித்து சுக்ரீவனை ஆலிங்கனம் செய்து கொண்டான்.

உடனே ஹனுமான் குச்சிகளைக் கொண்டு வந்து தீ மூட்டினான். அக்னியைப் பூஜித்து பிரதக்ஷிணம் செய்து ராமனும் சுக்ரீவனும் நட்பு பிரதிக்ஞை செய்தார்கள். "இருவர்களுடைய சுகத்திலும் துக்கத்திலும் இருவரும் சம பங்கு கொள்வோம். நம்முடைய நட்பு என்றும் இருப்பதாக" என்று பிரமாணம் செய்தார்கள்.

இரண்டு பெரும் மரக்கிளைகளை ஆசனமாகக் கொண்டு ராமனும் சுக்ரீவனும் ஒரு இடத்திலும் ஹனுமானும் லக்ஷ்மணனும் மற்றொரு இடத்திலும் சந்தோஷமாய்ப் பேசிக் கொண்டு உட்கார்ந்தார்கள். சுக்ரீவன் தன் கஷ்டங்களைச் சொல்லிக்கொண்டான். "வாலியின் பயத்தால் வனத்தில் இங்குமங்கும் திரிந்து கொண்டும் இந்த மலையில் மறைந்திருந்தும் காலம் கழித்து வருகிறேன். நீ வாலியைக் கொன்று என் துக்கத்தைத் தீர்த்து ராஜ்யமும் மனைவியும் நான் மறுபடி பெற்று அனுபவிக்கும்படி செய்வாயோ?" என்றான்.

"நிச்சயமாக இதோ இந்த அம்புக்கு வாலி இரையாவான், சந்தேகமில்லை" என்றான் ராமன்.

இப்படி சுக்ரீவனும் ராமனும் பேசிக் கொண்டிருந்த காலத்தில் அசோக வனத்தில் சீதையின் இடது கண்கள் துடித்தன. அரக்கர்களின் அரசன் ராவணனுடைய இடது கண்களும் துடித்தன.

# படித்துப் பாருங்கள்!

## தங்கம்

கதை நமக்கு மிகவும் பழக்கமான சூழ்நிலையில் உருவாகி யிருக்கிறது. ஆகவே, பாத்திரங்கள் நமக்குப் புதியவர்களாகவே இருக்க முடியாது அல்லவா! நமக்குத் தெரிந்த பாத்திரங்களா யிருப்பதனாலேயே நம் உள்ளத்தில் மிகவும் சுலபமாக இடம் பெற்று விடுகிறார்கள்.

கிராமத்தில் ஒரு சோற்றுக் கடையில் கடுமையாக உழைத்த வேதம் தன் பெண் தங்கம் அநாதையாகி விடக் கூடாது என்று துடித்தாள். இளம் பிராயத்தில் தன்னைக் கைசோர விட்டுப் பிரிந்துவிட்ட கணவனைக் காண விழைந்து பல துன்பங்களுக்கு இடையில் உயிர் வாழ்ந்தாள்; பல ஆண்டுகள் உழைத்து உடப்பு ஓடாய்ப் போன பின்பு கணவனைக் கண்டாள். அப்புறம் அவள் நிலையை ஆசிரியர் நன்றாய்ப் பின்னியிருக்கிறார். தங்கத்தின் தங்கமான உள்ளமும், பயமறியாத தன்மையும் ஆசிரியரின் எழுத்தில் நல்ல உருவம் பெற்றிருக்கின்றன. தங்கத்தின் மாமன் மகன் மணி, ஆதரவற்ற நிலையிலிருந்து உழைப்பால் உயர்ந்து, மனப் பண்பிலும் உயர்ந்து நின்ற தன்மை கதையின் கடைசியில் சிகரமாக அமைந்து விடுகிறது. தன்னை ஆளாக்கிய நண்பன் கிருஷ்ணனுக்காகத் தங்கத்தை விட்டுக் கொடுத்த மணியின் மனமும் தங்கம்தான். அதுவே இந்தக் கதையின் ஆதார நாதம் என்று கூறலாம். சுவை குன்றாமலும் அலுப்புத் தட்டாமலும் கதை சொல்லும் திறன் இந்நூல் முழுவதும் காணப்படுவது பாராட்டுக்கு உரியது.

எழுதியவர்: பி. வி. ஆர்.; பிரசுரம்: கலைமகள் காரியாலயம், தபாற்பெட்டி எண்: 604, மயிலாப்பூர், சென்னை-4; விலை: ரூ. 2-4-0.

# மற்றெந்த தேயிலையையும் விட
# ப்ருக் பாண்ட் தேயிலையையே
## அதிகப்படியான ஜனங்கள்
## வாங்குகிருர்கள்




**முதல் காரணம் ப்ருக் பாண்ட் தேயிலை நித்தமும் புத்தம் புதியதாக இருப்பதே!**

தோட்டத்திலிருந்து கடைகளுக்கு துரிதமாக அனுப்பப்படுவதால் ப்ருக் பாண்ட் தேயிலை எப்பொழுதும் புத்தம் புதியதாக இருக்கிறது.

**மற்றொரு காரணம் அதன் பரிசுத்தத் தன்மையே!**

காற்றுப் புகாமல் பாக் செய்யப்பட்டிருப்பதால் ப்ருக் பாண்ட் தேயிலை மாசு மருவற்று, கலப்பற்று, களங்கமற்று விளங்குகிறது.






## 22. வீரப்பன் சதி

நந்த வனத்தில் தோன்றிய மங்கை மிகவும் அழகாயிருந்தாள். உமா அவளைப் பார்த்துச் சிறிது நேரம் திகைத்துப் போனான். இத்தனை நாட்களாக அவளை உமா அந்த நந்தவனத்தில் பார்த்ததில்லை.

"என்ன உமா, ஏன் இப்படிப் பிரமித்து நிற்கிறாய்? என்னைப் பார்க்கப் பயமாயிருக்கிறதா?" என்று அழகான குரலில் அந்தப் பெண்மணி கேட்டாள்.

அவள் உமாவின் பெயரைச் சொல்லி அழைத்ததும் உமாவுக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. 'நான் இவளை முன்பு பார்த்ததாக நினைவில்லையே! இவளுக்கு எப்படி என் பெயர் தெரிந்தது?' என்று மனசில் நினைத்தபடி வாய் திறவாமல் நின்று கொண்டிருந்தான்.

"என்ன உமா, பேச வெட்கப்படுகிறாய்? முன்பின் அறியாத ஒரு பெண் உன்னைப் பெயரைச் சொல்லி அழைக்கிறாளே என்று தானே ஆச்சரியப் படுகிறாய்? உனக்கு நான் முன்பின் அறிமுகமாகாதவளாக இருக்கலாம். ஆனால் உன்னை எனக்கு நன்றாகத் தெரியும். இந்தப் பத்து நாட்களாக நீ நந்தவனத்துக்கு உலாவ வரும் போது உன்னை நான் பார்த்துக் கொண்டு தான் இருக்கிறேன். ஆனால் நான் உன் கண்களுக்குத் தெரிந்திருக்க மாட்டேன்!"

"நீங்கள் சொல்லுவது எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே? ஏதோ ஒரு தேவதையைப் போல அல்லவா பேசுகிறீர்கள்?"

"நான் ஒரு தேவதையைப் போலவா...? தேவதையேதான். பெரும்பாலும் இந்த நந்தவனத்தில்தான் இருப்பேன். உன்னைப் போன்ற நல்லவர்களுக்கு ஏதாவது ஆபத்து சம்பவிக்கும்படி நேரிட்டால் உதவி செய்யக் காத்துக் கொண்டிருக்கும் வன தேவதை நான். உனக்கும் உன் அண்ணன் பிரபாகரனுக்கும் இன்று நேரிடப் போகும் ஆபத்தைப் பற்றி நன்றாக உணர்ந்து கொண்டவள்!" என்றாள்.

"அப்படியா? என் அண்ணன் பெயரையும் அவனுக்கு உண்டாகப் போகும் ஆபத்தைப் பற்றியும் நீங்கள் சொல்லுவதிலிருந்தே நீங்கள் நிச்சயம் ஒரு தேவதையாக இருக்க வேண்டும் என்று தெரிகிறது. என் அண்ணன் இந்த வில் போட்டியில் ஜெயிப்பானா?" என்று கேட்டான்.

"அதெப்படி ஜெயிப்பான், அம்மா? அவனுக்கு எதிராக இன்று இரவு போட்டியிடுபவன் மாயா மகேந்திரபுரத்து அரசன் வீரசிம்மன் அல்லவா? அவன் வில் வித்தையில் மிகவும் கெட்டிக்காரன். அவன் மேகங்களைப் பார்த்து அம்பு விட்டால் கூட மழை பெய்யும் என்று சொல்லுவார்களே!" என்றாள் தேவதை.

"அப்படியானால் என் அண்ணா வில் போட்டியில் ஜெயிக்க மாட்டானா?" என்று திகிலுடன் கேட்டான் உமா.

"அதெப்படி அவன் ஜயிக்க முடியும்? முடியவே முடியாது. உன் அண்ணன் மிகவும் புத்திசாலியாக இருந்தால் உண்மையை உணர்ந்து பீமவர்மனிடம் மன்னிப்புக் கேட்டுத் தப்பித்துக் கொள்ளலாம். அப்பொழுது இந்தப் போட்டியே ஏற்படாது. நீங்கள் உங்கள் வழியே செல்ல அனுமதிக்கப்படுவீர்கள்."

"அம்மா, மன்னிப்புக் கேட்க என் அண்ணா ஒரு நாளும் சம்மதிக்க மாட்டான். உங்களைப் பார்த்தால் மிகவும் நல்லவராகத் தெரிகிறது. இந்தப் போட்டியில் என் அண்ணன் வெற்றியடைய ஏதாவது உங்களால் உபகாரம் செய்ய முடியுமா?"




"நீங்கள் இரண்டு பேர்களும் மிகவும் நல்லவர்கள் என்பது எனக்குத் தெரியும். உங்களுக்குக் கட்டாயம் நான் உபகாரம் செய்

கிறேன். ஆனல் நான் செய்யும் உபகாரம் உனக்கும் உன் அண்ணனுக்கும் தவிர வேறு யாருக்கும் தெரியக் கூடாது. அப்படியானல் இப்பொழுதே உங்களுக்கு உதவி புரிகிறேன்!''

"அம்மா, நீங்கள் செய்யப் போகும் உதவியைப் பற்றி என் அண்ணனைத் தவிர வேறு ஒருவருக்கும் சொல்ல மாட்டேன். என்னை நம்புங்கள்'' என்ருள் உமா.

"அப்படியானல் இதோ என் உதவி'' என்று தனது இடுப்பிலிருந்து சில அம்புகளை எடுத்தாள். அந்த அம்புகளை மூன்று முறை மேலும் கீழுமாகத் தடவினுள்.

"உமா, இந்தா, மூன்று அம்புகளையும் நீ ரகசியமாக எடுத்துக் கொண்டு போய் உன் அண்ணனிடம் நான் கொடுத்ததாகச் சொல்லிக் கொடு. உன் அண்ணுவை இன்று மாலை நடக்க இருக்கும் போட்டியில் இந்த அம்புகளையே உபயோகிக்கச் சொல். வேறு அம்புகளை உபயோகிக்க வேண்டாம். நான் கொடுத்த அம்புகளை மாத்திரம் உபயோகித்தால் அரசன் வீரசிம்மன் எளிதில் இன்று போட்டியில் தோற்கடிக்கப் படுவான். அதற்குச் சந்தேகம் இல்லை. நாழிகை ஆகிவிட்டது. சீக்கிரம் கொண்டு போய்க் கொடு'' என்று வனதேவதை சொன்னுள்.

சமயத்துக்கு உபகாரம் செய்யும் வன தேவதைக்கு வணக்கம் தெரிவித்து அந்த இடத்தை விட்டு வெகு வேகமாக அரண்மனையை நோக்கி ஓடினுள் உமா. கண்களுக்கு எட்டிய வரையிலும் உமாவைக் காணவில்லையே என்ற கவலையுடன் பிரபாகரன் மாடியினின்று நந்தவனத்தையே பார்த்துக் கொண்டிருந்தான்.

அண்ணு தன் வரவை நோக்கியபடி மாடியில் நின்று கொண்டிருப்பதைப் பார்த்தாள் உமா. உடனே, "அண்ணு, இங்கே ஓடி வா! ஒரு முக்கிய சமாசாரம்'' என்று கைதட்டிக் கூப்பிட்டாள். பிரபாகரனும் வேகமாக மாடியிலிருந்து கீழே இறங்கி வந்தான்.

அதே சமயத்தில் வீரப்ப தேவனும் நந்தவனத்துக்கு வந்தான். எந்த விதத்திலும் பிரபாகரனைப் போட்டியில் வெற்றி பெருமல் செய்ய வேண்டும் என்ற எண்ணம்தான் அவன் மனத்தில் குடிகொண்டிருந்தது. அதனுல் அவன் பிரபாகரனுடைய அறையை அடிக்கடி ரகசியமாக வட்டமிட்டுக் கொண்டிருந்தான். அப்படி இருக்கும் அவன் உமா, தன் அண்ணனை ஏதோ முக்கிய சமாசாரம் என்று கூப்பிடும் பொழுது கேட்டுக்கொண்டு சும்மா இருப்பானு? அந்த முக்கிய சமாசாரத்தை அறிய ஆவல் கொண்ட அவன் மெதுவாகப் பிரபாகரனை மறைவாக இருந்து பின்பற்றினுன். அவர்கள் பேசிக் கொண்டிருந்த இடத்துக்குப் பக்கத்தில் உள்ள ஒரு பெரிய பூச்செடியின் மறைவில் பேச்சு மூச்சில்லாமல் உட்கார்ந்திருந்தான்.

"என்ன உமா, என்ன முக்கிய சமாசாரம், சீக்கிரமாகச் சொல்லு!'' என்ருன் பிரபாகரன்.

"அண்ணு, அது ஒரு ரகசிய சமாசாரம். அருகில் வா, சொல்லுகிறேன்'' என்ருள். பிரபாகரன் தனது வலது காது உமாவின் வாயின் அருகில் வரும்படி குனிந்து கொண்டான்.

"அண்ணு, ஒரு வன தேவதையைப் பார்த்தேன். அவள் மிகவும் அழகாக இருந்தாள். அவளைப் பார்த்தால் மிகவும் நல்லவள் போலத் தோற்றமளித்தாள்'' என்று உமா மேலே சொல்லுவதற்குள், "உன் ரகசிய சமாசாரத்தைச் சாதாரணமாகவே சொல். இங்கு ஒருவரும் இல்லை. என் முதுகு வலிக்கிறது. குனிந்து கொண்டிருக்க முடியவில்லை. வனதேவதை என்ன சொன்னுள்?'' என்ருன் பிரபாகரன்.

"அண்ணு, அவசரப்படாதே! நான் சொல்லுவதைக் கவனமாகக் கேள். இதோ என் கையில் இருக்கும் மூன்று அம்புகளையும் அவள் கொடுத்து உன்னிடம் கொடுக்கும்படி சொன்னுள். இவை மூன்றும் மிகவும் மந்திர சக்தி வாய்ந்தவைகளாம். இந்த அம்புகளைக் கொண்டு தான் அரசன் வீரசிம்மனைத் தோற்கடிக்க முடியுமாம். இல்லா விட்டால் ஒரு நாளும் முடியாதாம். ஆதலால் நீ இந்த அம்புகளையே இன்று நடக்க இருக்கும் போட்டிக்கு எடுத்துச் செல். இந்தச் சமாசாரம் வேறு ஒருவருக்கும் தெரியக் கூடாது என்று வனதேவதை என்னிடம் உறுதி



படத்தில் பல வளையல்கள் ஒன்ருேடொன்று சேர்க்கப்பட்டுக் கிடக்கின்றன. மொத்தம் எவ்வளவு வளையல்கள் இருக்கின்றன என்று எண்ணிக் கண்டு பிடியுங்கள்!

# கால்கேட்
# குளோரோபில் டூத்பவுடர்




## குளோரோபிலின் பூரண நன்மைகளை நீங்கள் உபயோகிக் கையில் தருகிறது!

## வீரிய குளோரோபில்தான் பலன் தரும்!

வீரிய குளோரோபிலின் நன்மைகளை எல்லாம் புதிய கால்கேட் குளோரோபில் டூத் பவுடர் தருகிறது வீரிய குளோரோபில் தான் வாய் நாற்றம், கிரிமிகளை நீக்கி ஈறுகளைப் பலப்படுத்துகிறது. கால்கேட் முறையில் குழந்தைகளுக்கு குளோரோபில் கவனிப்பை அளியுங்கள்—அரிய சந்தர்ப்பம்.



### வாய் நாற்றத்தை அழிக்கிறது

ஒரு விசேஷ சூத்திரம் காரணமாக கால்கேட் குளோரோபில் டூத்பவுடர் துரிதமாக, திருத்தமாக வேலை செய்கிறது. உங்கள் வாய் அதிகநேரம் புதுமை, இனிமையுடன் இருக்கிறது. அதன் வாசனை ஜோரானது!

### கிருமிகளை ஒழிக்கிறது

சாப்பிட்டவுடன் கால்கேட் குளோரோபில் டூத் பவுடரை உபயோகிப்பதால் பற்களைச் சிதைக்கும் அமிலங்கள் ஒழிகின்றன.








### ஈறுகளை பலப்படுத்துகிறது

ஈறுகளை குளோரோபில் பலப்படுத்துகிறது. தினசரி கால்கேட் குளோரோபில் டூத் பவுடரை உபயோகிப்பதால் குளோரோபிலின் பூரண நன்மைகளைப்பெற்று ஈறுகளைப் பாது காக்கலாம்.

CTPG/1

மொழி வாங்கிக் கொண்டிருக்கிறாள். ஆதலால் மிகவும் ஜாக்கிரதையாக நடந்து கொள். நமக்கு இன்று கடவுள்தான் உதவி செய்கிறார் என்று நான் நினைக்கிறேன்" என்று சொல்லிக் கொண்டே வனதேவதை கொடுத்த மூன்று அம்புகளையும் பிரபாகரனிடம் கொடுத்தாள் உமா.

பிரபாகரன் அந்த அம்புகளை வாங்கிக் கொண்டான். "சபாஷ், உமா! இன்றைக்கு நல்ல சமாசாரம் கொண்டு வந்தாய். இந்த அம்பைக் கொண்டு போட்டியில் கட்டாயம் வெற்றி அடையலாம். இப்பொழுது நாம் இதை நம்முடைய அறைக்குக் கொண்டு போக வேண்டாம். யாராவது நம்மீது சந்தேகம் கொள்ளுவார்கள். சற்று நேரம் கழித்துப் போட்டிக்குச் செல்லுவதற்கு முன் இவைகளைக் கொண்டு போகலாம். அதுவரையிலும் இவைகளை ஜாக்கிரதையாக ஒருவருக்கும் தெரியாமல் வைத்து விட்டுப் போகலாம்" என்றான்.

பிறகு பிரபாகரன் இங்கும் அங்கும் சுற்றிப் பார்த்து விட்டு ஓரமாக நன்றாக வளர்ந்திருந்த செடிகளின் மத்தியில் அந்த அம்புகளை ஒளித்து வைத்து விட்டு உமாவுடன் தன் அறைக்குச் சென்றான்.

வீரப்பதேவன் தான் ஒளிந்து கொண்டிருந்த இடத்திலிருந்து மெதுவாக வெளியே வந்தான். "ஓகோ! நேர்முகமாகப் போட்டியில் கலந்தால் தோற்றுத்தான் ஆகவேண்டுமென்று தெரிந்து மந்திர அம்புகளினால் ஜயித்து விடலாம் என்ற எண்ணமா? எண்ணி மனப்பால் குடியுங்கள். பிரபாகரா, இந்த வீரப்பதேவனை யார் என்று நினைத்தாய்? இப்பொழுதே இந்த அம்புகளை உனக்குப் பயன் படாதபடி நீ ஒளித்து வைத்திருக்கும் இடத்திலிருந்து எடுக்கிறேன். அந்த மந்திர அம்புகளை உனக்கு எதிராக உபயோகித்து உன்னை இன்று என் அரசனால் தோற்கடிக்கச் செய்கிறேன். இந்த அம்புகளை எனது அரசனின் அம்புறாத் தூணியில், மற்ற அம்புகளை அப்புறப்படுத்தி விட்டு அரசனுக்குத் தெரியாமல் வைத்து விடுகிறேன். அவருக்கு இந்த அம்புகளின் இரகசியம் தெரியவந்தால் வில்வித்தையில் தேர்ச்சி பெற்ற அவர் இந்த மந்திர சக்தி வாய்ந்த அம்புகளை உபயோகித்து வெற்றி பெற ஒருகால் மறுத்தாலும் மறுப்பார். ஆதலால் சீக்கிரம் போய் இந்த அம்புகளை அவரிடம் அவருக்குத் தெரியாமல் சேர்த்து விடுகிறேன்" என்று சந்தோஷத்துடன் அம்புகளை ஒளிக்கப்பட்டிருந்த இடத்திலிருந்து எடுத்து மறைத்து வைத்துக் கொண்டான். பிறகு தன் அரசன் இருக்கும் அறைக்குச் சென்றான். அரசன் வீரசிம்மன் இந்த மந்திர சக்தி வாய்ந்த அம்புகளை உபயோகித்து ஜயித்தவுடன், இரகசியத்தைச் சொல்லலாம் என்று திட்டம் போட்டிருந்தான் அந்தப் பொல்லாத வீரப்பதேவன்.




படத்தில் உள்ள மனிதர் எலிமாதிரி பயந்த சுபாவம் உடையவர். படத்தைத் திருப்பித் தலைகீழாகப் பாருங்கள், அவரே ஒரு எலி மாதிரி தோற்றமளிப்பார்!

மணி ஏழு அடிக்கச் சில நிமிஷங்கள் தான் இருந்தன. அப்பொழுது கூடாரம் முழுவதும் ஜனங்கள் நிரம்பி இருந்தார்கள். அரசன் வீரசிம்மன் கூடாரத்தை நோக்கிப் போட்டியிடத் தயாராக வந்து கொண்டிருந்தான். அவன் முகத்தைப் பார்த்தால் தான் ஜயிப்பது நிச்சயம் என்ற திடமான மனத்துடன் வருவதாகத் தோன்றியது. அவனைப் பின் தொடர்ந்து வீரப்பதேவனும் வந்து கொண்டிருந்தான்.

பிரபாகரனும் உமாவும் கூடாரத்துக்கு வந்து கொண்டிருந்தார்கள். "அண்ணா! நாம் ஒளித்து வைத்த மந்திர சக்திவாய்ந்த அம்புகளை நொடியில் கொண்டு வந்து விடட்டுமா?" என்று கேட்டாள் உமா.

"வேண்டாம் உமா, வேண்டாம்! நான் அந்த அம்புகளை மறக்கவில்லை. வேண்டுமென்றே தான் அதை நந்தவனத்தில் விட்டு வைத்தேன். துறவி கொடுத்த அம்புகளைத் தவிர, வேறு அம்புகளை உபயோகப் படுத்தலாமா? துறவி தாம் கொடுத்த அம்புகளைத் தவிர வேறு அம்புகளை உபயோகப்படுத்த வேண்டாம் என்று சொல்லியது ஞாபகமில்லையா?" என்று கேட்டான் பிரபாகான்.

"ஆமாம், அண்ணா! எனக்கு ஞாபகம் வருகிறது. நீ செய்தது சரிதான். மணி ஏழு ஆகப் போகிறது. போட்டியை ஆரம்பிக்க நாம் சரியான நேரத்துக்குப் போய் விடலாம், வா!" என்றான். (தொடரும்)

# ஆதார சக்தி

புதுடில்லி "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகையால் பரிசளிக்கப்பட்ட கதைகளில் இது ஏழாவது பரிசு பெற்ற தமிழ்க் கதையாகும். "கல்கி" அகில உலகச் சிறுகதைப் போட்டி நீதிபதிகள் தேர்ந்தெடுத்து அனுப்பிய நாலு பரிசுக் கதைகளில் இதுவும் ஒன்று என்பது ஏற்கெனவே அறிவிக்கப்பட்டது ஞாபகமிருக்கலாம்.

ப. ராமமூர்த்தி

**ம**னித வாழ்வில் மிகவும் சக்தி வாய்ந்ததும் அடக்கக் கூடாததுமான உணர்ச்சி எது என்ற பேச்சு ஒரு சமயம் எழுந்தது. எங்களுள் ஒவ்வொருவரும் தத்தம் மன இயல்பு, அனுபவம், படித்த அளவு, இவைகளுக்கேற்றபடி ஒவ்வொரு உணர்ச்சியைக் குறிப்பிட்டோம்.

ஒருவர் சொன்னார் :— "உலகிலேயே, மனித குலத்தில் மட்டுமல்லாது உயிருள்ள சகல ஜீவ ராசிகளுக்குள்ளேயும் மிக சக்தி வாய்ந்த உணர்ச்சி பசிதான். பசி வந்தால் மற்ற நினைவுகள் எல்லாம் மறைந்து விடும். அதைக் காட்டிலும் பயங்கரமான—பிரம்மாண்டமான—கொடூரமான —வேகமான சக்தி வேறு எதுவும் கிடையாது."

இன்னொருவர் அதை ஆமோதித்து விட்டு, "பசி மிகவும் சக்தி வாய்ந்த உணர்ச்சி என்பதை நான் ஒப்புக் கொண்டாலும், அதைவிடத் தீவிரமான விஷயம் வேறெதுவும் கிடையாது என்பது சரியல்ல. நான் அறிந்த வரையில் பசியைப் புறமுதுகு காட்டச் செய்ய வல்லது காமம். காம உணர்ச்சியின் ஆவேசம் மிகவும் பயங்கரமானது. பசியை அடக்கினாலும் அடக்கலாம். காம வேகத்தை அடக்குவதோ தடுப்பதோ மிகவும் சிரமம். இந்த விஷயம் எல்லோருமே ஒப்புக் கொள்ளக் கூடியது" என்று கூறினார்.

இவர் கூறியதும் உண்மை என்று நாங்கள் ஒப்புக் கொண்டோம். ஆயினும் ராயர் மட்டும் தம் கீச்சுக் குரலில் வெகு ஆக்ரோஷத்துடன் அதை ஆட்சேபித்தார்.

ராயர் சொன்னார்:—"பசி, காமம் ஆகிய இரண்டையும் தனித்தனியே பிரித்துப் பேச வேண்டுமா, என்ன! பசி என்று பொதுப் படையாகச் சொல்லி விட்டாலே போதுமே! ஒன்று வயிற்றுப் பசி. மற்றொன்று உடல் பசி. அவ்வளவுதானே! பொதுவாக நாம் அறிந்த வரையில் பசி மிகவும் சக்தி வாய்ந்தது தான் என்றாலும் அதைக் காட்டிலும் சக்தி மிகுந்த உணர்ச்சி கிடையவே கிடையாதா! உலகத்தில் நாம் எல்லோரும் கண்டு கேட்டு ஆனந்தப்படும் கலைப் பொக்கிஷங்கள் எத்தனை யிருக்கின்றன! கண்களுக்கு விருந்தளிக்கும் தாஜ்மஹால், அஜந்தா சித்திர விசித்திரங்கள், பிரம்மாண்டமான தென்னிந்தியக் கோயில் கோபுரங்கள், பிரமிக்க வைக்கும் வேலைப்பாடுகள் நிறைந்த அற்புதச் சிலைகள், — இவை எல்லாம் எந்த உணர்ச்சியினால் எழுந்தன!

"உலகத்தையே மறக்கச் செய்யும் அற்புதமான கீதங்களும்,—மில்டன், ஷேக்ஸ்பியர், ஹோமர், கோதே, காளிதாஸன், கம்பன் முதலிய மகா கவிகளின் பாடல்களும் இதிகாச காவியங்களும் எந்த உணர்ச்சியை ஆதாரமாகக் கொண்டு எழுந்தன!

"நான் சொல்கிறேன், மனித வாழ்க்கையில் கலையுணர்ச்சியை விட ஆவேசம் நிறைந்த சக்தி வேறு எதுவும் கிடையாது. கலைஞர்களின் சிருஷ்டியை மட்டும் கண்டு ஆனந்தப்படும் நமக்கு அந்தச் சிருஷ்டிக்கு ஆதாரமான உணர்ச்சி எவ்வளவு மகத்தானது என்பது சாதாரணமாகப் புலப்படாது. கலைக்கண் கொண்டு நாமும் சிறிது கலையுணர்ச்சியுடன் ஊன்றிப் பார்த்தால் மட்டுமே அந்த விஷயம் நமக்குப் புலப்படும். பழைய காலத்தில் கவிகளும், கலைஞர்களும் பட்ட கஷ்டங்கள் தெரிவதற்குக் காலமென்னும் கருந்திரை ஒரு பெரிய தடையாக இருக்கிறது. அவர்களைப் பற்றிய சரித்திரங்கள் கூட வெறும் ஊகம் என்றே ஒதுக்க வேண்டி யிருக்கிறது. ஆனால் சமீப காலத்தில் நமக்கு நன்றாகத் தெரிந்த ஒரு கலைஞனின் வாழ்க்கையின் விவரங்களை நாம் அறிந்து, ஆராய்ந்து பார்த்தால் நான் சொல்வது உண்மை என்று தெரிந்து விடும்.

"உதாரணமாக இரண்டு வருஷங்களுக்கு முன்பு அகில உலக சிற்ப, சித்திரப் போட்டியிலே முதல் பரிசு பெற்ற பாரத நாட்டுச் சிற்பி "மயன்" என்பவனைப் பற்றிச் சில ரகசியங்கள் இருக்கின்றன. அவைகளை நான் மிகவும் கஷ்டப்பட்டு எத்தனையோ இடங்களிலிருந்து சேகரித்தேன். உங்களுக்கும் சொல்கிறேன் கவனித்துக் கேளுங்கள்:

★

"**ம**யன்" என்பது அவனுடைய கலைப் பெயர். அவனுடைய நிஜப் பெயரைப் பற்றி நமக்கு அக்கறையில்லை. "மயன்" செதுக்கிய சிலைகள் அநேகம். ஆனால் அவைகள் எல்லாம் உலகப் பிரசித்தி பெறவில்லை. கலை ரசிகர்கள் அவைகளைப் பார்த்தால் அவை எல்லாம் சர்வ சாதாரணமான சிலைகள் என்றுதான் தீர்மானிப்பார்கள். அகில உலகப் பிரசித்தி பெற மயனுக்குள்ள யோக்கியதையைக் கூட சந்தேகிப்பார்கள். இப்படிப்பட்ட சாதாரணமான ஒரு சிற்பி எப்படி உலக மேதைகளை எல்லாம் மிஞ்சி அசாதாரணமான சிற்ப உருவத்தைச் செதுக்க முடிந்தது! அதில் தான் அவனுடைய உத்வேக ஆதாரம் – வாழ்க்கையின் ரகசியம் அடங்கி யிருக்கிறது.

மயன் கைதேர்ந்த சிற்பிகள் பரம்பரையில் வந்தவன். நான் சொல்லப் போகும் சம்பவங்கள் நடைபெற்றது அவனுடைய வாலிபப் பருவத்திலே தான். அந்த சமயம் அவனுக்குக் கல்யாணம் ஆகி யிருந்தது. அவன் மனைவியின் பெயர் மல்லிகா.

அவள் அசாதாரணமான ஓர் அழகி. சகல சாமுத்திரிகா லட்சணங்களும் அவளிடம் அடைக்கலமா யிருந்தன.

வாழ்க்கையில் சுகம் பெறுவதற்கு வேண்டிய வசதிகள் அனைத்தும் அவனுக்கு இருந்தன. நல்ல சொத்துடைய குடும்பத்தில் ஒரே மகன். ரதி போன்ற மனைவி. சுதந்திர வாழ்வு. இவ்வளவு இருந்தும் அவனுடைய மனம் ஏனோ நிம்மதி அடைய வில்லை.

அகில உலக சிற்ப – சித்திரப் போட்டி ஒன்று நடக்கப் போகிறது என்ற செய்தி அவனுக்குத் தெரிந்தது முதல் கலையார்வம் அவனை ஒரு பேய்போல் பிடித்துக் கொண்டது. பாரத நாட்டின் பழங்காலச் சிலைகளில் வடிக்கப்பட்டிருக்கும் தெய்விகக் கலையழகும், மேதைத் திறனும் உலகத்தோர் கருத்தைக் கவர்ந்தாலும் அச்சிலைகளை நிர்மாணித்த சிற்பிகளின் பரம்பரையில் வந்தவர்களை உலகம் அறியவில்லை. அவர்களுடைய வம்சங்களெல்லாம் பூண்டற்றுப் புதர் மண்டிப் போய் விட்டன என்றுதானே கலாரஸிகர்கள் நினைக்கிறார்கள்!

ஆனால் உண்மை அதுவல்ல. அந்தப் பழம் பெரும் கலைஞர்களுடைய சந்ததிகளில் ஒரு சிலராவது இன்னும் உயிருடன்தான் இருக்கிறார்கள். அவர்களிடம் அந்தக் கலைமேதா விலாசமும் உயிருடன்தான் இருக்கிறது என்னும் உண்மையை உலகத்தின் கண்களிலே நிரூபணம் செய்து காட்ட வேண்டும் என்ற உணர்ச்சி அவனுடைய உள்ளத்திலே ஊற்றெடுத்துப் பொங்க ஆரம்பித்து விட்டது. உலகப் போட்டியிலே பங்கெடுத்துக் கொண்டு அபூர்வமான சிலை ஒன்றைத் தான் நிர்மாணித்துப் பாரத நாட்டின் பெருமையை நிலை நாட்டுவது என்று தீர்மானித்து விட்டான்.

இந்த நினைவு அவன் உள்ளத்திலே எழுந்த நாள் முதல் அவனுக்கு வேறு எந்த நினைவும் இடையாது. எப்படிப்பட்ட சிலையைச் செதுக்குவது, அந்தச் சிலைக்கு என்ன உருவம் கொடுப்பது, எந்த உணர்ச்சியை அதற்கு ஊட்டுவது என்று யோசிப்பதிலேயே அவனுடைய நாட்கள் எல்லாம் கழிந்தன. புதிதாக மணம் செய்து கொண்ட அவனுடைய மனைவிக்கு அவனுடைய சிந்தனையின் வேகமும் போக்கும் பெரிய புதிராக இருந்தன. சரியான நேரத்தில் அவன் உண்ண மாட்டான். உறங்க மாட்டான். சதா தனிமையை நாடினான். வாய் விட்டுச் சிரிக்க மாட்டான். எப்பேர்ப்பட்ட துக்கமும் அவனை அசைக்க வில்லை, எந்த இன்பமும் அவனுக்கு முகமலர்ச்சியை ஊட்ட வில்லை, அவனுடைய ஒரே நினைவு உலகப் பிரசித்தியடைய வேண்டும் என்பதே!




"எப்பொழுது பார்த்தாலும் ஒரே உஷ்ணமாக இருக்கிறது."

"அப்படியா! உங்கள் பெயர் என்ன?"

"சூரிய நாராயணமூர்த்தி."

அவன் மனத்துக்குள்ளே சிங்காரம் செய்து வட்டமிட்டுக் கொண்டிருந்த அந்தப் பேராவா பிறர் அறிய முடியாத பெரிய ரகசியமாகத்தானிருந்தது. தன்னுடைய லட்சியத்தை நிறைவேற்றுவதற்காக அவன் தென்னாடெங்கும் சுற்றுப் பிரயாணம் செய்தான். பழங்காலச் சிலைகளில் பிரசித்தமானவைகளை எல்லாம் போய்ப் பார்த்தான். மாமல்லபுரம், மதுரை, திருநெல்வேலி, சுசீந்திரம், கிருஷ்ணாபுரம், தாராபுரம் ஆகிய பிரபல ஸ்தலங்களிலெல்லாம் பல நாட்கள் தங்கினான். அங்கங்கேயுள்ள அற்புத சிலா ரூபங்களையெல்லாம் அடங்காத வெறியுடன் கண்டு ஆனந்தித்தான். எந்த நிலையிலே, எந்த ஊக்கத்திலே, எந்த லட்சியத்திலே அவைகள் எழுந்திருக்கக் கூடும் என்று தன்னுடைய கற்பனைக் கண்களிலே கண்டு வியந்தான்.

ரௌத்திராகாரமோ, சிருங்காரமோ, சோக சித்திரமோ, பயமோ, விநயமோ, கருணையோ, வெறுப்போ எந்த உணர்ச்சியானாலும் ஒவ்வொன்றுக்கும் பிரசித்தமான சிலை தென்னாட்டில் ஒவ்வோரிடத்தில் ஏற்கெனவே கண்டெடுக்கப்பட்டு விட்டன. அப்படியானால் எந்த ரச பாவத்தை அவன் தேர்ந்தெடுப்பது!

*

இப்படியாக அவன் எண்ண எண்ண அவனுக்குச் சித்தமே கலங்கிப் பித்தம் பிடிக்கும் போலாகி விட்டது. அவனுடைய தகப்பனாருக்கும் தாயாருக்கும் அந்த நிலையைக் கண்டு கவலை யிருந்தது. அவனுடைய சோகத்துக்குக் காரணம் என்ன என்பதே அவர்களுக்கும் புலப்படவில்லை. அவனுடைய மனத்தை மாற்ற என்ன செய்யலாம் என்பதே அவர்களுடைய கவலையாகி விட்டது.

வாழ்க்கையில் மலர்ச்சி யூட்டக் கூடிய போகங்களிலே பிரதானமானது காதல் அல்லவா! அவனுடைய வாழ்விலே அந்தக் காதல் உதயமாகும் வழியை அவர்கள் வகுக்க நினைத்தார்கள். அவனுக்கு மணமாகி இரண்டு வருஷங்களாகியும் அவன் தன் மனைவி மல்லிகாவுடன் சேர்ந்து வாழ ஆரம்பிக்கவில்லை. ஒரு வேளை அந்த ஏக்கம் தான் அவனை வருத்துகிறதோ என்று எண்ணிய அவனுடைய பெற்றோர்கள், மல்லிகாவை அழைத்து வர ஏற்பாடுகள் செய்து ஒரு நன் முகூர்த்தத்தில் அவர்கள் இருவரையும் இணைத்து விட நினைத்தனர்.

நான் ஏற்கெனவே கூறியபடி மல்லிகா என்னும் அந்தப் பெண்ணே ஒரு தங்கப் பதுமை போன்றவள்தான். அவள் கண்களிலே வீசும் ஒளி, நட்சத்திரங்களின் பிரகாசத்தையும், சந்திரனின் தண்மையையும் ஒருங்கே கலந்து கொட்டியது. அவள் உடல் தங்கத்தில் கடைந்து, சந்தனக் கலவையின் நறுமணத்திலே ஊற வைத்து, நிலவின் குளிர்ச்சியை மேலே பூசியது போல் இருந்தது.

# தெம்பூட்டுகிறது

# காலையில் உபயோகித்தால்!

# மென்மை உணர்ச்சி

# மணிக்கணக்காய் மாறுது!

காஷ்மீர் பொக்கே டால்க் எவ்வளவு தெம்பூட்டுகிறது! அந்த மென்மை உணர்ச்சி மணிக் கணக்காக நீடிக்கிறது! ஈரத்தை உறிஞ்சி, அரிப்பும் புண்ணும் வராமல் தடுக்கிறது. குளுமை மணம், புத்துணர்ச்சி அளிக்கிறது.

கால்கேட் 1806 முதல்

தரத்துக்குப் பெயர்போனது

# காஷ்மீர் பொக்கே

## டால்கம் பவுடர்

ஆண்கள் விரும்பும் நறுமணம்




CBG/13

சோர்வைப் போக்கி சுறுசுறுப்பை அளிப்பது



# மைதீன்

## புகையிலை

காரம்·மணம் நிறைந்தது...

**E.S. மைதீன் & கோ.**

கும்பகோணம்

போன் நெ. 41 :: தந்தி: "MYDEENCO"



## அடைந்த மூக்கைத் துரிதமாகச் சுத்தி செய்கிறது!






எச்சரிக்கை!

கவனியுங்கள்

தங்க சுகாதார முத்திரையை

அது தூசியையும் கிருமிகளையும் உள்ளே வரவொட்டாமல் தடுக்கிறது. மருந்தின் பூராசக்திக்கும் உத்திரவாத மளிக்கிறது. அது அறிவிப்பதென்னவெனில் உங்களிடமிருப்பது

நிஜ **விக்ஸ் இன்ஹேலர்!**

# மலச் சிக்கல்

## உங்களை சோர்வடையச் செய்கிறதா?



ஆம், மலச் சிக்கல் ஒரு துன்பகரமான ரோகம். அது உங்களுக்கு சோர்வும், தளர்ச்சியும், மேனிக்குறைவும் உண்டாக்குகிறது. ஆயினும் உலகில் லக்ஷக்கணக்கான பேர்கள் ஒருசிறுகூட இம்மாதிரி துன்பம் அடைவதில்லை, காரணம் அவர்கள் உபயோகித்து வரும் ப்ரூக்லாக்ஸ் என்ற சக்தி வாய்ந்த எளிய விரேசனிதான். இந்த ருசி மிகுந்த சாக்லேட் பேதி மருந்து குடல் வேலையை சகஜமான முறையில் ஊக்கி, உட்புற அசுத்தங்களை வெளிப்படுத்துகிறது. படுக்கும்போது ஒரு சிறிய துண்டு உட்கொள்ளுங்கள். மறுநாள் அதன் பயனை அனுபவியுங்கள். உற்சாகமும், புத்துணர்ச்சியும் ஜீவசக்தியும் பெறுவீர்கள். மேலும், களையுடன் காண்பீர்கள்.




## ப்ரூக்லாக்ஸ்

**ஒரே இரவில்**

உங்களை குணமாக்கும்

(லண்டன் வெஸ்ட்மின்ஸ்டர் லாபரேட்ரீஸ் லிட். தயாரிப்பு)

ஏஜண்டுகள்: ஓரியண்டல் மர்க்கன்டைல் ஏஜன்ஸி
99-A, அரமனைக்காரத் தெரு,
மதராஸ்-1

அந்த அழகிய உடலின் ஒவ்வொரு அங்கமும் கைதேர்ந்த சிற்பியின் உளி பட்டு உருவானது போல் இருந்தது. அவளை மட்டும் அவன் ஒரு தரம் கூர்ந்து பார்த்து விட்டால் அவனுடைய பித்தம் தெளியாமலா போய் விடும்!

உண்மையில் உலகமே காதலுக்குத் தான் அடிமை. எப்பேர்ப்பட்ட முரடனாக இருந்தாலும், கொலைகாரனானாலும், பஞ்சமா பாதகங்களை ஈவிரக்கமின்றிப் புரியும் கசடனானாலும் ஓர் அழகிய பெண்ணிடம் அவன் மனம் ஈடுபட்டு விட்டால் அவளுக்கு அவன் அடிமையாகாமல் இருக்க முடியுமா! புராண இதிகாசங்களிலாகட்டும்—சரித்திர வரலாறுகளிலாகட்டும்—தற்காலக் காதல் விவகாரங்களில்தானாகட்டும்—அழகுக்கும் யௌவனத்துக்கும் உள்ள சக்தியும் கவர்ச்சியும் வேறு எதற்காவது உண்டா! உண்மையில் எந்தக் கலையை எடுத்து ஆராய்ந்தாலும் பெண்மைக்கும் மென்மைக்கும் அதில் இடமில்லாமல் போவதுண்டா!

மல்லிகாவை நேரில் கண்டபின் மயன் மனத்திலே ஒரு தீர்மானம் உருவாகி விட்டது. அந்தத் தீர்மானத்தை நிறைவேற்றிக் கொள்ள அவன் தன் மனைவியையே பயன்படுத்திக் கொள்ள நிச்சயித்துக் கொண்டான் ......நாக சர்ப்பத்தின் அழகு அதன் சாந்த நிலையிலே புலப்படாது. மகுடியெடுத்து ஊதி அதற்கு வெறியூட்டி விட்டால் அது படமெடுத்து ஆடும்; அழகு பூராவும் புலப்படுகிறது. அது போல் ஒரு கன்னியின் உள்ளத்தைக் காதல் மகுடியின் மாய இசைதான் மலரச் செய்கிறது. அந்த மலர்ச்சியிலே தோன்றும் சௌந்தரியத்தை வேறு எந்த சந்தர்ப்பத்தில் காண முடியும்! அந்த உணர்ச்சி வெறியின் எல்லையைப் படம் பிடித்துச் சிலை வடிவாக்கி உலகத்தின் முன் வைத்து விட்டால் அது எத்தனை மகத்தான சாதனை! அந்த அபூர்வ சாதனையைச் செய்வது என்றுதான் தீர்மானித்தான் மயன்.

ஆனால் அந்த சாதனை எளிதில் கைகூடுமா! அதற்கு என்ன வழி!......ஆம்; அதற்கு ஒரு வழி இருக்கிறது. மல்லிகாவின் வடிவத்தையே சிலைக்கு ஆதாரமாக அமைத்து, காதல் வெறி சீறிக் கொப்புளிக்கும் அவள் உடலுணர்ச்சிகளை அப்படியே அந்தச் சிலைக்கும் ஊட்டி விட்டால் அவனுடைய வேலை முடிந்து விடும்.''

இந்த இடத்தில் ராயர் தமது பேச்சைக் கொஞ்சம் நிறுத்தினர்.

'' அன்பர்களே! அந்தச் சிற்பியின் லட்சிய வரலாற்றிலே இப்போதுதான் உச்ச நிலையை உங்களுக்குச் சொல்லப் போகிறேன். அதில் சிற்சில வார்த்தைகளும், வர்ணனைகளும் விரசமாகத் தோன்றும். ஆனால் கலை உணர்ச்சியுடன், மனப்பண்புடன் நாம் அவைகளை ஊன்றிக் கவனித்தால்தான் அந்தச் சிற்பியின் ஆவேசமும் அதிலிருந்து எழுந்த அபூர்வ நிலையைக் காட்டும் சிலையின் அழகும் பெருமையும் நமக்குப் புலப்படும். ஆகையால் கலைக் கண்களின் உதவி கொண்டு மட்டும் அவனுடைய அந்தரங்க வரலாற்றை நாம் ஆராய்வது அவசியமாகிறது — நிற்க.

கதையை மேலே தொடருகிறேன் கேளுங்கள்: மண வறையிலே பஞ்சணையிலே படுத்து, காதல் நினைவிலே கருத்திழந்து, காமவெறியிலே கண்கள் சிவந்து, தேகத்தின் ஒவ்வொரு அணுவும் ஆர்வத்தினால் துடி துடிக்க, — மனிதனாய்ப் பிறந்த எந்த ஒரு ஆத்மாவும் கண்டால் மனம் ஏங்கும்படியான நிலையிலே ஓர் அபூர்வ சித்திரம் போல் அலங்கோல நிலையிலே அந்த மல்லிகா கிடந்தாள்.

அவளை உற்சாக மூட்டி வெறி கொள்ளச் செய்த மயன் அந்த நிலையிலே என்ன செய்திருக்கக்கூடும்!

சாதாரணமாக அவன் நிலையிலே வேறு ஒரு மனிதன் இருந்திருந்தால் என்ன செய்திருப்பான் என்பதை நாம் எல்லோரும் சுலபமாகக் கற்பனை செய்து விடலாம். ஆனால் மயன் ஓர் அதிசயப் பிறவியல்லவா! கலைஞனல்லவா! அவனுடைய கண்களிலே மல்லிகாவின் வெறியூட்டும் அழகும், அவளுடைய கன்னி உடலும், காதலுணர்ச்சியும் யாவரும் எதிர்பார்க்கக் கூடிய வெறியை எழுப்பி விட்டாலும் அதற்கு அவன் அடிமையாகி விடவில்லை. நாகத்துக்கு வெறியூட்டி அதன் விஷத்தைக் கறப்பது போல் மல்லிகா என்னும் அந்தக் கன்னிக்கு அவன் காம வெறியூட்டித் தன் கலை உருவத்துக்குக் கொடுக்க வேண்டிய உணர்ச்சிகளைச் சிருஷ்டித்தான். அந்த உருவத்தை அப்படியே தன் மனக் கண்களிலே படம் பிடித்துக் கொண்டான். அவளுடைய நிலையை எழுதுகோலும் காகிதமும் கொண்டு மெல்லிய கோடுகளில் சித்திரித்துப் பார்த்தான். அத்துடன் அவன் அவளை உதறி விட்டுத் தன் சிற்ப மண்டபத்துக்கு நள்ளிரவிலே ஓடி விட்டான்!

இதே மாதிரி ஒவ்வொரு நாளும் அவன் நாடகமாடினான். அவளுடைய அங்கங்களில் ஏற்படும் பூரிப்பை அளந்து கொண்டான். அவள் முகத்தில் ஏற்படும் அபூர்வ உணர்ச்சிகளைச் சிலை உருவத்துக்கு ஏற்றினான்.

மாதங்கள் ஆறு, ஏழு, எட்டு என்று கழிந்து கொண்டே வந்தன. மல்லிகாவின் மன வேதனை மளமள வென்று ஏறிக் கொண்டே வந்தது. மணமாகியும் அவள் கன்னிப் பெண்ணாகவே காலங் கழிக்க நேரிட்ட விந்தையை விதியென்றுதான் சொல்ல வேண்டும். ஒவ்வொரு இரவும் அவளுடைய கணவன் வருவான்—அவளுடன் சரசமாடுவான். காதல் மொழிகளைக் கார்மேகம் போல் பொழிவான். அவளை ஆலிங்கன ஆனந்தத்திலே அமிழ்த்துவான். அவளுடைய உணர்ச்சிகளைத் தட்டி எழுப்புவான். மெய் சிலிர்த்து, மேனி நெகிழ்ந்து, மனம் மயங்கிப் போதை தலைக்கேற அவள் நாணம் விட்டுக் குலைந்து நிற்கும் காட்சியைக் காண வேண்டும் என்பது மட்டுமே அவனுடைய லட்சியம். அந்த நிலைக்கு அவள் வந்து விரக வேதனையில் அவள் துடி துடித்துக் கொண்டிருக்கும் போதே மறுபடியும் அவன் தன் சிற்பத்துக்கு மெருகேற்றுவதற்காக ஓடி விடுவான்!

அவனுடைய லட்சியம் நிறைவேறி விட்டது. அவன் கனவு நனவாகி விட்டது. மனம் நினைத்ததை அவனுடைய கரம் உருக் கொடுத்தது. பத்து மாதங்களில் அவன் தொடங்கிய சிலையை முடித்து விட்டான். அதைப் பத்திரமாகக் கப்பலில் ஏற்றிப் போட்டி அதிகாரிகளுக்கும் அனுப்பி விட்டான்.

*

அதற்குப் பிறகுதான் அவனுக்குச் சுய உணர்வு வந்தது. தன் மனைவியிடம் காதலும் கழிவிரக்கமும் சுரந்தது. தான் பத்து மாதங்களாகச் செய்த பாவத்துக்குப் பிராயச்சித்தம் செய்ய எண்ணினான்.

அவனுடைய மனம் திரும்பும் பொழுது அவன் வாழ்விலேயும் ஒரு முக்கியமான, கொடூரமான திருப்பத்தையும் செதுக்கி வைத்து விட்டது, பாழும் விதி!

எந்த தினம் அவன் சுய உணர்வு வந்ததோ அந்த தினம் மல்லிகாவின் சுய உணர்வு அவளை

விட்டுப் போய் விட்டது! கை பிடித்த கணவ னுடைய அரவணைப்பைப் பெருமல் ஏங்கி ஏங்கி மனம் வீங்கிப் போன அவள் ஒரு தீர்மானம் செய்து கொண்டாள். தனது வாழ்க்கையே வீணுகிப் போய் விட்டது என்று அவள் முடிவு செய்து கொண்டாள்.

அந்த நாள் வரையில் மயன் தன் அபிலாஷையை அவளிடம் தெரிவிக்க வில்லை. உலகத்தின் முன் தன் உருவையும், வனப்பையும், யௌவனத்தின் இயல்பான சோபையையும், பெண்களுக்கே உரி மையான நாணத்தைக் கைவிட்டுக் காதல் நிறை வுக்காக ஏங்கி நிற்கும் சித்தர நிலையையும், ஒளிவு மறைவில்லாமல் காட்டிக் கொள்வதற்கு எந்தப் பெண், அதுவும் ஓர் இந்தியக் கன்னிப் பெண் ஒப்புக் கொள்வாள்! அந்தக் காரணத்தை மனத்தில் கொண்டுதான் அவன் தன்னுடைய காரியத்தை அவளிடம் தெரிவிக்க வில்லை. சிலையை முடிப்பதற்கு முன் அவளுக்கு அந்த விஷயம் தெரிந்து விட்டால் ஒருகாலும் அவள் அவனு டைய இச்சை நிறைவேற விட மாட்டாள்.

சிலையை முடித்துக் கப்பலேற்றி விட்டான். இனிமேல் அவளிடம் உண்மையை உரைப்பதில் ஒரு தவறும் இல்லை. மேலும் தன்னுடைய அழகை ஆதாரமாகக் கொண்ட சிற்பம் அகில உலகப் போட்டியிலே கலந்து கொள்ளப் போய் விட்டது என்பதை அறிந்து ஒரு வேளை அவள் மகிழ்ச்சியடைவதும் இயல்பே அல்லவா!

இந்த நினைவுடன் அவன் அன்றைய தினம் அவளை நாடி ஓடினுன். அந்த அபூர்வ சிற்பத்தை அப்படியே ஒரு சித்திரமாகவும் எழுதி நகல் எடுத்து வைத்திருந்தான். அதை அவளிடம் காட்டி ஆச்சரியத்தில் ஸ்தம்பித்துப் போகும்படி செய்ய ஆவலுடன் விரைந்தான்.

கடந்த பத்து மாதங்களாக நடந்த நாடகத்தின் கடைசிக் காட்சியை அன்று அவன் நடத்தினுன்.

வழக்கம் போன்ற வெறியுணர்ச்சியில் அவள் மயங்கிப் போய்க் கிடந்தாள். அவளிடமும் புதிய தொரு மாறுதல் அன்று காணப்பட்டது. லட்சி யம் சித்திக்கப் பெற்ற ஒரு கலைஞனின் மனம் எந்த மகிழ்ச்சியுடன் இருக்குமோ அந்தத் திருப்தியில் இருந்தான். கடைசி அம்சமாக அவன் தன்னிடம் வைத்திருந்த சித்திரத்தை எடுத்துக்கொடுத்தான்!

அவள் ஆச்சரியத்தில் அமிழ்ந்து போனுள். அந்தச் சித்திரம் அவன் கைப்பட எழுதிய தல்லவா! கண்ணுடியில் தெரியும் பிரதிபலிப்பைப் போல் எவ்வளவு தத்ரூபமாக அவன் அதை எழுதி விட்டான். வெட்கமும், வியப்பும், கோபமும், காதலும், கெஞ்சலும், மிஞ்சலும் கலந்த குரலில் அவள் கேட்டாள். "இது என்ன வேலை!"

மயன் நகைத்துக் கொண்டே சொன்னுன், "மல்லிகா! நீ கேட்கும் கேள்வி என்ன கேள்வி!"

"ரொம்ப அழகாய்த்தான் இருக்கிறது!"

"அழகில்லா விட்டால் எப்படி உலகம் அதைக் கவனிக்கும்!"

"எதை! உலகம் எதற்காகக் கவனிக்க வேண்டும்!"

"உன் அழகையும், என் மேதையையும் உலகம் அறிய வேண்டும் என்பதற் காகத்தானே இத்தனை நாட்கள் நான் பிரயாசைப் பட்டேன்."

"இப்பொழுது!"

"உன் உருவம் உலக மகா சிற்பங்களின் நடுவே பிரகாசிக்கப் போயிருக்கிறது. அதன் பிரதிதான் இதோ இந்தச் சித்திரம். இந்தச் சித் திரத்தின் ஜீவிய உருவம்தான் இதோ அசட்டுக் கேள்விகள் கேட்டுக் கொண்டிருக்கும் என் அருமை மல்லிகா!" என்ருன் ஆர்வத்துடன்.

அவன் வார்த்தைகளைக் கேட்ட அவள் நடுங்கி விட்டாள். நள்ளிருட்டிலே கருநாகத்தை மிதித்த வளைப் போல் துள்ளி விலகினுள் மல்லிகா. அவளு டைய உடலும், உள்ளமும் வெட்கத்தினுலும் அவமானத்தினுலும் குறுகி விட்டன. அவள் இதயத்திலே பழுக்கக் காய்ந்த ஓர் சட்டியைச் செருகி விட்டது போன்ற உணர்ச்சி எழுந்தது.

ஆஹா! என்ன காரியம் நடந்து விட்டது! நள் ளிரவில் காதல் உணர்ச்சிப் போதையிலே கிடந்த தன் உருவத்தைச் சிலை ரூபத்தில் உலகம் கண்டு புகழ்வதா! தன் மனைவியின் அங்க எழிலைச் சிலை வடிவிலே வடித்து அந்தரங்கத்தைப் பகி ரங்கமாக உலகின் கொடுங் கண்களுக்கெதிரே வைக்கத்துணிந்த ஒரு கணவனுக்குச் சுய கௌர வம், மான உணர்ச்சி எல்லாம் எப்படி அடங்கிப் போய் விட்டன! நாளைக்கு அந்தச் சிற்ப உருவம் லட்சோப லட்சம் பத்திரிகைகளில் பிரதிபலிக்கப் போகிறதே! ஐயோ, எந்த முகத்துடன் சமூகத் தின் முன் அவள் அதற்குப் பிறகு உலாவ முடியும்! இந்தப் பயங்கர நினைவு அவள் சித்தத் தையே கலக்கி விட்டது. அந்தக் கேவலமான காரியம் செய்து விட்ட கணவனை ஏறெடுத்துப் பார்க்கவே அவளுடைய கண்கள் கூசின. அவனை உதறித் தள்ளி விட்டு எழுந்து ஓடினுள், தோட் டத்தை நோக்கி.

அடுத்த நிமிஷம் தோட்டக் கிணற்றிலிருந்து 'தடால்' என்ற பேரொலி எழுந்து அந்த நள்ளிர வின் நிசப்தத்தைக் கலைத்தது............

★

மாதங்கள் மூன்ருயின. உலகப் போட்டியிலே முதற்பரிசு இந்திய சிற்ப மேதையான மயனுக்குக் கிடைத்தது. பாரெல்லாம் புகழ்ந்தது, அவன் மேதா விலாசத்தையும் அந்தச் சிலையின் லளிதத் தையும், அதற்கு ஊட்டியிருந்த உணர்ச்சியையும்.

ஆனுல் என்ன கொடுமை! இந்த உலக நினைவே இல்லாமல் சர்வ காலமும் "மல்லிகா, மல்லிகா என் கண்ணே, என்னை மன்னித்து விடு!" என்று பிதற்றிக் கொண்டு அந்தச் சித்திரத்தை உற்று நோக்கி அழுது புலம்பும் பைத்தியக்காரனை 'மயன்' தனக்கு உண்டான கீர்த்தியையோ தன் சிற்பத்துக்கு வந்து குவியும் புகழ்மாலைகளின் நறுமணத்தையோ ஒரு தரம்கூட உணர வில்லை

வாழ்க்கையே மிகவும் விசித்திரமானது. மனிதன் ஒரு லட்சியத்துக்காகப் படும் பா[illegible] மிகவும் கடுமையானது. அதிலும் கலைஞனுக[illegible] பிறந்து ஒரு லட்சியத்தை வைத்துக் கொண்[illegible] வாழ நினைப்பவனது அந்தரங்க ஆவேச சக்[illegible] சுழிக்காற்றைப் போன்ற உத்வேகம் நிறைந்தது நமக்குத் தெரிந்த இந்த ஒரு கலைஞனைப் போல் உலகத்தில் எத்தனையோ பேர். அவர்களுக்கெ[illegible] லாம் எவ்வளவோ லட்சியங்கள். அதில் முக்கா[illegible] வாசி வெறும் மனக்கோட்டையாகப் போய் வி[illegible] கிறது. ஒரு சில பாதி நிறைவேறிப் பாதி மண்ணு[illegible] விடுகிறது. மற்றும் சில நிறைவேறும் காலத்தி[illegible] அந்த லட்சியக் கலைஞனையே காக்கிப் பிழிந்[illegible] பித்தனுக்கி விடுகிறது.

ஆகையால்தான் நான் தீர்மானமாகச் சொல்[illegible] கிறேன். கலைஞனின் ஆவேச சக்தியைக் காட் டிலும் மேன்மையானதும், கடுமையானதுமா[illegible] சக்தி உலகத்தில் வேறு எதுவும் கிடையா[illegible] என்று' பசியும், தாகமும், காமமும், துக்கமு[illegible] அந்த உணர்ச்சியின் ஆவேசத்தில் நூற்றில் ஒ[illegible] பங்கு கூட எட்டிப் பிடிக்க முடியாது!"

ராயர் சொல்வது உண்மைதானே!



# நீங்கள் இன்று உங்கள் பற்களை

# மக்ளீன்

# செய்தீர்களா?



ஆம்! நான் இன்று என் பற்களை மக்ளீன்ஸ் பற்பசையைக் கொண்டு சுத்தம் செய்தேன். வசீகரம் வாய்ந்த புன்னகைக்கு ஆரோக்கியமான பற்கள் அத்தியாவசியம். ஆகையால் தான் நான் பிரதி தினமும் இரு முறை எனது பற்களை மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசையைக்கொண்டு சுத்தம் செய்கிறேன். மக்ளீன்ஸிலுள்ள ஒரு தனிப்பட்ட பொருள் பற்களின் மேல் படிந்துள்ள ஊத்தையை நீக்கி பற்களுக்கு இயற்கையாக இருக்கும் வெண்மையையும், ஒளியையும் தருகிறது. அதிக வெண்மையான பற்கள் கெட்டியான ஈறு மற்றும் நறுமணமுள்ள சுவாசத்திற்கு மக்ளீன்ஸ் பற்பசையையே உபயோகியுங்கள்.

"...மக்ளீன்ஸ் பற்பசை இப்பொழுது கடைகளில் விற்கப்படும் எல்லா ரகங்களை விட மிக உயர்ந்தது."




க்ளோரோபில் சேர்ந்தும் கிடைக்கும்

MTY-39-TAM

# இந்தியன் பாங்க், லிமிடெட்

(ஸ்தாபிதம்:  1907)

தலைமை ஆபீஸ்: "இந்தியன் பாங்க் பில்டிங்ஸ்", வடக்கு பீச் ரோடு, மதராஸ்-1

தென் இந்தியாவில் எல்லா முக்கிய இடங்களிலும், பம்பாயிலும் புது டில்லியிலும் சப் ஆபீஸ்கள், கிளைகள் இருக்கின்றன.

**மூலதனம்**

| | | | |
|---|---|---|---|
| அங்கீகரிக்கப்பட்டது | ... | ரூ. | 1,00,00,000 |
| வழங்கப்பட்டது | ... | ரூ. | 72,00,000 |
| செலுத்தப்பட்டது | ... | ரூ. | 57,80,000 |
| ரிசர்வ் & இதர நிதிகள் | ... | ரூ. | 76,50,000 |
| டெபாஸிட்டுகள் (31-12-54-ல்) | ... | ரூ. | 24·85 கோடிகள் |

எல்லாவிதமான பாங்கிங் அலுவல்களும் செய்யப்படும்

என். கோபால அய்யர், செக்ரடரி

---

# அந்த இருமலை நிறுத்துக தொண்டை ரணத்தை சமனமூட்டி குணப்படுத்துக



பெப்ஸ் தொண்டை மற்றும் மார்பு வலி நிவாரண மாத்திரைகளில் சமனமூட்டி குணப்படுத்தும் ரசங்கள் அடங்கியுள்ளன. பெப்ஸை சுவைக்கும்போதே, இந்த ரசங்கள் ஆவியாக மாறி உங்கள் சுவாசத்துடன் தொண்டை சுவாசக் குழாய் மூலமாக சுவாசப்பைக்குச் செல்லும். ஆகவே கோளாறின் ஆரம்ப ஸ்தானத்திற்கே சென்று வேலைசெய்கின்றன. அதனால்தான் பெப்ஸ் கைகண்ட ஔஷதமாய் விளங்குகிறது. பெப்ஸ் இருமலை நிறுத்தி, தொண்டை ரணத்தை சமனமாக்கி, உங்கள் சுவாசப் பையை காப்பாற்றி, கபத்தை உடைத்து, அடைப்பை நீக்குவதுடன் இன்ப்ளுயன்ஸா மற்றும் பிராங்கைடிஸ் சிகிச்சையில் இன்றியமையாததாயுமுள்ளது.




பெப்ஸ் சாப்பிடுங்கள் **PEPS**

உலக பிரசித்தி பெற்ற

தொண்டை, மார்புவலி நிவாரண மாத்திரைகள்.

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

FPY. 28-TAM

மதராஸிற்கு ஸோல் ஏஜெண்டுகள்: தாதா & கம்பெனி, பார்க் டவுன்



# கோகிலா

ரமணலால் வஸந்தலால் தேசாய்

மொழிபெயர்ப்பு: ரா. வீ

சித்திரம்.

## 41. காதல் வேதாந்தம்

விஜயலக்ஷ்மியைப் போன்ற அழகிக்கு லால்ஜி ஸேட்டை எப்படிப் பிடித்திருக்க முடியும் என்ற கேள்வி கோகிலாவின் உள்ளத்தில் வெகு நாட்களாகவே வட்டமிட்டுக் கொண்டிருந்தது. ஆனால் தனது திருஷ்டாந்தத்தைக் கொண்டு அவள் இத்தனை நாட்களும் தன் மனத்தைச் சமாதானப் படுத்தி வந்தாள்.

ஜகதிஷ் அவளுக்குப் பிடித்திருக்கிறான் என்பதற்காக எல்லோருக்குமே அவன் பிடித்திருப்பான் என்று முடிவு கட்டி விட முடியுமா? அப்படி முடிவு கட்டுவது முட்டாள்தனமாகத்தானே முடியும்? எத்தனையோ பேருக்கு அவனைக் கண்டால் பிடிக்க வில்லை. அது அவள் விஷயத்தில் மிகவும் நல்லதாகப் போயிற்று! அவன் அவளுக்கு மட்டுமே உரியவனாகி விட்டான். அதே போல் லால்ஜி ஸேட்டை அவளுக்குப் பிடிக்க வில்லை என்பதற்காக விஜயலக்ஷ்மியும் விரும்பாமல் இருக்க வேண்டும் என்று எந்த சாஸ்திரத்தில் எழுதி யிருக்கிறது? விஜயலக்ஷ்மியும் லால்ஜி ஸேட்டும் ஒருவரை யொருவர் விரும்பலாம் அல்லவா? இந்தத் தர்க்கம் அவளுடைய அதிருப்தியைத் தணித்திருந்தது; அவர்களுடைய உறவைப் பற்றி ஒரு ஸௌஜன்யமான முடிவை மேற்கொள்ளச் செய்திருந்தது.

ஆனால் இன்று விஜயலக்ஷ்மியின் பேச்சிலிருந்து அவள் லால்ஜி ஸேட்டை அடியோடு விரும்ப வில்லை என்பது ஊர்ஜிதமாகி விட்டது. இருந்தாலும் அவள் ஒன்றுமே அறியாதவளைப் போல், "நன்றா யிருக்கிறதே, நீ சொல்வது? இப்படியும் ஒருத்தி இருப்பாளா? உனக்கு எந்தப் படம் பிடித்திருக்கிறதோ, அந்தப் படத்தை வைத்துக் கொள்ளேன்! ஒன்றுமே பிடிக்க வில்லை யென்றால் பகவானின் படம் ஒன்றை வைத்துக் கொள்!" என்றாள்.

"எனக்குப் பகவானின் படத்தைக் காட்டிலும் மேலாக ஒரு உயிர்ச் சித்திரம்தான் வேண்டும். கோகிலா! உன்னிடம் படம் இருக்கிறது. ஆனால் உனக்கு அது தேவையில்லை. எனக்கு வேண்டும், ஆனால் கிடைக்க வில்லை. அப்படி யிருக்கும் பொழுது எனக்குப் பொறாமை ஏற்படாமல் என்ன செய்யும்?" என்றாள் விஜயலக்ஷ்மி. அவளுடைய சொற்களில் உள்ளத்தைத் தகர்த்தெறியும் அதிருப்தி வெடித்துக் கொண்டு புறப்பட்டது.

கோகிலா அவள் சொற்களுக்கு ஒன்றும் பதில் சொல்ல வில்லை. வாயிலிருந்து வார்த்தைகள் வெளிவரவில்லையே ஒழிய விழிகள் அநுதாபத்தைச் சொரிந்தன.

சிறிது நேரத்துக்கெல்லாம் விஜயலக்ஷ்மி அவளைப் பார்த்து, "ஏன், கோகிலா! உன்னிடம் ஜகதிஷின் படம் ஏதாவது இருக்கிறதா?" என்று கேட்டாள்.

சுவரில் மாட்டப்பட்டிருந்த படம் ஒன்றைச் சட்டென்று பார்த்த கோகிலா, "இல்லையே!" என்று பதில் அளித்தாள்.

"கோகிலா! அவருடைய புகைப்படம் ஒன்றை நீ எனக்குத் தர மாட்டாயா?" என்று கேட்டாள் விஜயலக்ஷ்மி. அவள் அப்படிக் கேட்டு விட்டாளே ஒழிய ஏதோ கனவில் கேட்பதாகத்தான் அவளுக்குப் பட்டது. அந்தக் கேள்வியைக் கேட்டதும் கேட்காததுமாகக் கோகிலாவின் முகத்தில் எத்தகைய உணர்ச்சி பாவோடுகிறது என்பதை அறிய அவாக் கொண்டு அவள் முகத்தைப் பார்த்தாள்.

கோகிலாவுக்குத் தூக்கிவாரிப் போட்டது. அதை விஜயலக்ஷ்மி கவனித்தாள். இருந்தாலும் கவனித்ததாகக் காட்டிக் கொள்ள வில்லை. ஒருகணம் கோகிலா வியப்பு மிகுந்த விழிகளுடன் விஜயலக்ஷ்மியைப் பார்த்தாள். அவள் காதுகளில் விழுந்த சொற்கள் உண்மையானதுதானா இல்லையா என்பதை ஊர்ஜிதம் செய்து கொள்வதற்காக, "ஏன், விஜயா! நீ அவர் படத்தைக் கேட்டாயா?" என்று கேட்டாள்.

"ஆமாம், கொடுப்பாய் அல்லவா?"

"தாராளமாக. நான் தர மாட்டேனென்று எண்ணுகிறாயா? ஆனால்...ஆனால்... அப்புறம் நீ என்னிடம் பொறாமை கொள்ள மாட்டாயே!" என்றாள்.

விஜயலக்ஷ்மி நகைத்தாள். அடுத்த நிமிஷம் கோகிலாவின் மோவாய்க் கட்டையைத் தன் கரங்களினால் தொட்டுத் தடவிக் கொடுத்தாள். அடிக்கடி ஜகதிஷின் கர ஸ்பரிசம் பட்ட கோகிலாவின் கன்னக் கதுப்புகளைத் தொட்ட பொழுது விஜயலக்ஷ்மிக்கு இனம்



தெரியாத ஒரு குதுகுதுப்பு உண்டாயிற்று. "கோகிலா, பொய் எதற்கு? உயிருள்ள வரை உன்னிடம் பொறுமைப்படத்தான் செய்வேன்!" என்றான்.

"விஜயா! உனக்கு மகிழ்ச்சி ஏற்பட வேண்டுமானால் அதற்கு நான் ஏதாவது செய்ய வேண்டுமா, சொல்!"

"எனக்கு என்ன தெரியும்? நீதான் கேட்கிறாய். உனக்குத் தோன்றினால் செய்யேன்!" என்றாள் விஜயலக்ஷ்மி.

வேண்டாதவர்கள் கைபட்டால் குற்றம், கால்பட்டால் குற்றம் என்பார்கள். வேண்டியவர்களைப் பற்றிய பேச்சு எழுந்தால் அதற்கு நேர் எதிரிடையாகத்தானே எடுத்துக் கொள்ள வேண்டும்! லைலா-மஜ்னு கதையில் லைலாவின் நாயும் மஜ்னுவுக்குப் பிடித்தமானது என்பார்கள். அதாவது வேண்டியவர்களுடைய பொருள் எதுவாயிருந்தாலும் வேண்டியவர்களுக்குப் பிடிக்கும் என்பது பொருள். விஜயலக்ஷ்மியின் மனத்தில் இடம் பற்றியவன் ஜகதீஷ். அவன் மனத்தில் இடம் பற்றியவள் கோகிலா. அவனுக்குப் பிடித்த கோகிலா அவளுக்கும் பிடிக்க வேண்டியவள்தானே? எனவேதான், தனக்கு எது நன்மையென்று தோன்றுகிறதோ, அதை அவளே செய்யட்டும் என்று விஜயலக்ஷ்மி பொறுப்பை அவளிடமே விட்டு விட்டாள்.

"அப்படியானால் அவரை உன் கையில் ஒப்படைத்து விடட்டுமா?" என்று கேட்ட கோகிலா கலகலவென்று சிரித்தாள்.

ஆனால் அவள் சிரித்த அந்தச் சிரிப்பில் மகிழ்ச்சி தாண்டவமாடவில்லை. இடறிக் காயம் பட்டுக்கொண்ட மனிதன் தன் வலியைப் பிறருக்குத் தெரியாமல் மறைப்பதற்காகச் சிரித்தால் எப்படிச் சிரிப்பான்? சிரிக்கும் அவன் முகத்தில் எத்தகைய பாவங்கள் கொப்புளிக்கும்? கோகிலா சிரித்த அந்தச் சிரிப்பு அப்படியிருப்பதாகத்தான் விஜயலக்ஷ்மி தீர்மானித்தாள். எனவே, "எதற்காக இப்படிப் பொய்ச் சிரிப்புச் சிரிக்கிறாய்? நீ சொல்வதற்கு முன்னால் உன் உயிரே யல்லவா நடுங்கிச் சாகிறது!" என்றாள்.

"இல்லை, இல்லை. என் உயிர் எதற்காக நடுங்கிச் சாகப் போகிறது? என்றைக்காவது எனக்குத் தேவைப்பட்டால், நீ எனக்கு நாலு ஆறுதல் வார்த்தைகள் கூறித் தைரியம் அளித்தால் போதும்!" என்று சிரித்த முகத்தைச் சிரித்தபடியே வைத்துக்கொண்டு அவளுக்குப் பதில் சொன்னாள் கோகிலா.

"உன் ஜகதீஷை நீ யாரிடம் ஒப்படைத்தால் என்ன? அவர் உன்னைப் பிரிந்து எங்கே தனித்திருக்கப் போகிறார்? நீதான் அவருடைய இருதயத்தையே வெற்றி கொண்டு விட்டாயே! அப்புறம் உன்னை விட்டு அவர் எங்கே போக முடியும்? இந்தத் தைரியத்தில்தான் நீ இப்படிப் பேசுகிறாய்!" என்றாள் விஜயலக்ஷ்மி.

அதைக் கேட்டதும் கோகிலாவின் முகத்தில் கர்வம் தோய்ந்த ஆத்ம திருப்தி பளிச்சிட்டது. "நான் அவர் இருதயத்தை வெற்றி கொண்டிருக்கிறேன் என்று நீயே ஒப்புக் கொள்கிறாய். அப்படியிருக்கும் பொழுது அந்த இருதயத்தின் மீது நான் ஆட்சி செலுத்துவது நியாயம்தானே?" என்றாள்.

"நியாயமான வார்த்தைதான். யார் இல்லை என்கிறார்கள்? ஆனால் நான் மட்டும் கோகிலாவாயிருந்தால் உன்னைப் போல் ஜகதீஷை இன்னொருவரிடம் ஒப்படைத்து விட்டு அப்புறம் அவர்களிடமிருந்து நாலு ஆறுதல் மொழிகளுக்கும் தைரியச் சொற்களுக்குமாகக் காத்திருக்க மாட்டேன். தெரியுமா?" என்றாள் விஜயலக்ஷ்மி.

"எனக்கு என் ஜகதீஷ் வேண்டும். அவ்வளவுதான். அவர் எங்கே போகிறார், எங்கே வருகிறார் என்றெல்லாம் அறிந்து கொள்ள வேண்டியது அநாவசியம்! என் உள்ளத்திலிருந்து அவர் நினைவு எந்நாளும் அகலக் கூடாது. அவ்வளவுதான் எனக்குத் தேவை!" என்றாள் கோகிலா.

அதைக் கேட்ட விஜயலக்ஷ்மிக்கு உள்ளத்திலிருந்து ஒரு புது உண்மை வெளியாவது போலத் தோன்றியது. கோகிலாவின் உள்ளத்தின் தாராளம் எல்லை கடந்த கடலாகத் திகழ்வதை அவள் கண்டாள். இத்தகைய உதார குணத்தின் ஒளிக் கதிரில் தான் அன்பு மலர்ந்து பொங்கிப் பூரிக்க முடியும் என்பதையும் அவள் உணர்ந்தாள். அவநம்பிக்கை சந்தேகம் ஆகியவற்றின் நிழலடியில் அன்புப் பயிர் கருகிக் குமைந்து வாடி வதங்கிவிடும்; மரித்தே கூடப் போய்விடக் கூடும் என்பது அவளுக்கு அப்பொழுது தென்னென விளங்கியது. "ஏன் கோகிலா! உன் அன்புக்கு அன்பான ஜகதீஷ் இன்னொரு பெண்ணைக் காதலித்து அதை நீ காண நேர்ந்தால் என்ன செய்வாய்?" என்று கேட்டாள்.

"என்ன செய்வேன்? சிரிப்பேன்!" என்று சட்டென்று பதில் அளித்தாள் கோகிலா.

"நீ ஜகதீஷிடம் கொண்டுள்ள அன்பு கொஞ்சமேனும் குறையாதா?"

"எதற்காகக் குறைய வேண்டும்? அவர் காதலித்தால் தான் நான் காதலிப்பேன் என்று நான் அவருக்கு ஏதாவது இழிவான நிபந்தனைகள் விதித்திருக்கிறேனு, என்ன? அவர் என்னைக் காதலிக்கா விட்டாலும், நான் அவரைக் காதலிப்பதைத் தடுக்க அவர் யார்?" என்ருள் கோகிலா.

அதே நேரத்தில் தானோ என்னவோ, நாத்பாபாவுக்கு ஜகதீஷ் தன் காதல் வேதாந்தத்தை விளக்கும் முறையில் ஏறக்குறைய இதே பொருள் தரும் சொற்களைச் சொல்லிக் கொண்டிருந்தான்! ஒன்ருகி விட்ட உள்ளங்களில் ஒரே மாதிரியான எண்ணங்கள் ஒரே நேரத்தில் எழுந்தால் அதில் ஆச்சரியப்படுவதற்கு என்ன இருக்கிறது?

கோகிலாவின் சொற்களைக் கேட்ட விஜயலக்ஷ்மி வியப்பு அதிகரிக்கவே, அப்படியே சிலையாகச் சமைந்து விட்டாள். பிறகு சட்டென்று தன் நிலை பெற்றவள் போல, "கோகிலா! உன் ஜகதீஷை உன்னிடமிருந்து யாராவது பிடுங்க முயற்சித்தால் அவர்களுக்குப் பெண் கொலை செய்த பாவம் வந்து சேர வேண்டும்!" என்ருள் அவள்.

"இப்படி எதற்காகத் தத்துப்பித்து என்று பேசுகிருய், விஜயா?"

"இல்லை, இல்லை. நான் உறுதியுடன் விரதம் பூண வேண்டும். இல்லா விட்டால் நானே உன் ஜகதீஷை ஒரு வேளை உன்னிடமிருந்து பிடுங்கிக் கொண்டு விடுவேன்!"

"என்ன வேடிக்கை இது, விஜயா! நீயோ வயதில் பெரியவள். ஏறக்குறைய அவர் வயது இருப்பாய். ஒரு வேளை அவரைக் காட்டிலும் அதிகமாகவே இருந்தாலும் இருக்கலாம். நீ இப்படியெல்லாம் பேசலாமா?" என்ருள் கோகிலா. உள்ளத்தில் உறைந்திருக்கும் உண்மையைத்தான் விஜயலக்ஷ்மி சொல்கிருள் என்பதை அவள் நன்ருகப் புரிந்து கொண்டு விட்டாள். அதனுல்தான் அப்படிப் பேசவும் பேசினுள்.

"இல்லை, கோகிலா! நான் வேடிக்கைக்குச் சொல்லவில்லை; விளையாட்டுக்குப் பேசவில்லை. ஜகதீஷை விடுவிப்பதற்காக நான் ஏன் இவ்வளவு பாடுபட வேண்டும்? நீயே சொல்! தன்னலமின்றிச் செயலாற்ற எனக்கு அவ்வளவு அக்கறை எங்கே வந்து விட்டது?" என்ருள் விஜயலக்ஷ்மி.

கோகிலாவுக்குப் பேச்சை மேலே வளர்த்தப் பிடிக்கவில்லை. எனவே, "விஜயா, நேரமாகி விட்டதே! உன்னை லால்ஜி ஸேட் தேடிக் கொண்டிருப்பாரோ, என்னவோ?" என்று பேச்சை மாற்றினுள்.

அழகிய நிலவு திடீரென்று கரிய முகில் ஒன்றில் மறைந்து விட்டால் எப்படியிருக்குமோ, அப்படித்தான் விஜயலக்ஷ்மி கண்டு கொண்டிருந்த கனவு மறைந்து விட்டது. "அவர் வீட்டில் இல்லை; நாடகம் பார்க்கப் போயிருக்கிருர்!" என்ருள்.

"நீ பின்னேடு போகவில்லையா?"

"என்னையும் கூப்பிட்டார். ஆனுல் நாடகம் பார்க்கப் போவதைக் காட்டிலும் உன்னிடம் வருவது எனக்கு அதிகமாகப் பிடித்திருந்தது. அதனுல்தான்..." என்ருள்.

சாமான்யமான பேச்சில் இறங்கியதும் இருவருடைய பேச்சுப் போக்கும் மாறி விட்டது. கோகிலாவை அந்த வீட்டிலேயே இருக்க வேண்டும் என்று விஜயலக்ஷ்மி வற்புறுத்தினுள். அவள் சம்மதிக்காமற் போகவே, வீட்டுச் சாமான்களையெல்லாம் தன் வீட்டிலேயே போட்டு விட்டுக் கொஞ்ச நாட்கள் கிராமத்துக்குப் போய் இருந்து விட்டுத் திரும்பி வந்து விடுமாறு சொன்னுள். பிறகு கோகிலாவைப் பார்த்து, "ஏன் கோகிலா! காகிதத்தில் உன் கையெழுத்துப் போட்டுத் தரமாட்டாயா?" என்ருள்.

"என் கையெழுத்தை வாங்கிக் கொண்டு நீ என்ன செய்வாய்?" என்று வியப்புடன் கேட்டாள் கோகிலா.

"உன் பெயரால்தானே எல்லா ஏற்பாடுகளும் செய்தாக வேண்டும்? வக்கீல் வைத்து ஜாமீன் தர வேண்டும். தேவைப்பட்டால் தொகையைக் கட்ட வேண்டும். ஜகதீஷ் இருக்கிற இடம் தெரியவில்லை. அதனுல் அவருக்குப் பார்த்தியாக உன் பெயரில்தானே ஏதாவது சட்ட சம்பந்தமான அலுவல்களைக் கவனிப்ப தென்ருல் கவனிக்க முடியும்? அதற்காகத்தான் கேட்கிறேன், புரிகிறதா?" என்ருள் விஜயலக்ஷ்மி.

கோகிலா உடனே எழுந்து தன் கையெழுத்துக்களைப் போட்டு விஜயலக்ஷ்மிக்குக் காகி



தங்களைக் கொடுத்தாள். தன் நிலை நினைவு வரவே, அவள் தன் பாக்கியத்தை எண்ணி வியந்தாள். விஜய லக்ஷ்மியைப் போன்ற செல்வமும் செருக்கும் படைத்த பெண் இத்தனை காரியங்களும் யாருக்காகச் செய்ய முன் வந்திருக்கிறாள்? கோகிலாவின் கணவனை ஜகதீஷுக்காகத்தானே? இந்த எண்ணம் கோகிலாவையே செருக்குடன் சற்றுத் தலை நிமிர்ந்து நிற்கச் செய்து விட்டது.

ஆமாம்! விஜயலக்ஷ்மியின் இந்த அன்பு இருக்கிறதே, இது தூய்மையானதா அல்லது தூய்மையற்றதா? இந்தக் கேள்வி பதில் அளிக்க முடியாத பெருங் கேள்விதான்!

இந்த உலகம் இதைப் பற்றி என்ன வேண்டுமானாலும் சொல்லிக் கொண்டு போகட்டும். அதை யெல்லாம் காதில் வாங்கிக் கொண்டால் கட்டி வராது. என்ன இருந்தாலும் இந்த அன்பில் ஆத்மானந்தத்தின் அம்சம் சிறிதளவாவது பொருந்தித்தான் இருக்கிறது! ஆத்மாவைத் தியாகம் செய்வதற்கோ அர்ப்பணம் செய்வதற்கோ முற்பட்டு விடும் இடங்களில் எல்லாம் தனிப் பெரும் மகிமை தனித்து இயங்கத்தான் செய்கிறது. அப்படிப் பார்க்கப் போனால் இந்த அன்புக்கும் ஒரு தனி மதிப்பு இருக்கத்தானே வேண்டும்? ஆயினும் அனைவருடைய கண்களுக்கும் இது ஒரு தவறு நிறைந்த வழியாகத்தான் தோற்றமளிக்கும். அதற்காக ஒருவர் என்ன செய்ய முடியும்?

விஜயலக்ஷ்மி கையெழுத்திட்ட அந்தக் காகிதங்களை வாங்கிக் கொண்டு எழுந்தாள். அன்புப் பசி கொண்ட இருதயம் சஹாரா பாலைவனத்தைக் காட்டிலும் கொதிப்பேறியதாகத்தான் இருக்கவேண்டும். கோகிலாவுக்கு விஜய லக்ஷ்மியின் நிலை நினைவுக்கு வரவே



இரக்கம் பிறந்தது. ஐசுவரியம் நிறைந்த வீட்டில் வாழ்க்கைப்பட்டும், அந்த வீட்டில் விஜயலக்ஷ்மியின் மனத்தைக் கவரக் கூடிய பொருள் ஒன்றுகூட அல்லவா இல்லை? பிறருடைய உடைமையைத் தனதென்று பொய்ச் சொந்தம் பாராட்டி மகிழ முயற்சித்துக் கொண்டிருந்த அவளுடைய வாழ்வின் மகோன்னத யௌவனப் பருவம் வெறிச்சோடிக் கிடந்தது. அபலையான அவளுடைய அந்தப் பரிதாப நிலையைக் கண்டால் யாருக்குமே கருணை பிறக்கத்தானே செய்யும்? அதனால்தான் கோகிலாவின் மனம் அவள் நிலையை நினைந்து வெதும்பியது; உருகிப் பொங்கியது.

"உன் கணவர் இங்கே வந்தால் கட்டாயம் உன்னிடம் அனுப்பி வைக்கிறேன். கவலைப்படாமற் போய் வா!" என்று நாலு அடி எடுத்து வைத்து விட்ட விஜயலக்ஷ்மி திரும்பிப் பார்த்துச் சொன்னாள்.

கோகிலாவின் இருதயத்தில் முன்பே கருணை நீர் பெருக்கெடுத்து ஓடத் தொடங்கி விட்டதால், விஜயலக்ஷ்மியின் உள்ளத்துக்கு ஆறுதலாக இருக்கட்டும் என்ற எண்ணத்தில், "அவர் நான் இருக்கும் இடத்துக்கு வந்தால் நானும் கட்டாயம் அனுப்பி வைக்கிறேன். நீயும் கவலைப்படாதே!" என்றாள்.

விஜயலக்ஷ்மி ஒரே பாய்ச்சலில் ஓடி வந்து கோகிலாவின் கன்னத்தை அன்புடன் இலேசாக ஒரு தட்டுத் தட்டினாள். அடுத்த நிமிஷம் மடந்தைப் பருவத்தின் மயக்க நிலை அவள் மனத்தை நிறைத்தது. எனவே, பதில் ஒன்றும் பேசாமல் அவ்விடத்தை விட்டு அகன்றாள். கோகிலாவும் கண் கொட்டாமல் அவள் தன் வீட்டை நோக்கிப் போவதையே பார்த்தவாறு நின்று கொண்டிருந்தாள்.

காலையில் கோகிலா சீக்கிரமாகவே கண் விழித்தாள். ராதாவும் வத்ஸராஜனும் கூட விழித்துக் கொண்டுதான் இருந்தார்கள். அவர்கள் இருவரும் கண் கூடக் கொட்டி இருக்க மாட்டார்கள் என்பது கோகிலாவுக்குத் தெரிந்த விஷயம் தானே? அப்பொழுது அவளுக்கு நேரமும் இருந்து மனமும் சரியாக இருந்து ராதாவைத் தனித்துப் பார்த்துப் பேச முடிந்திருந்தால், இரவு உங்களுக்குச் சரியாகத் தூக்கம் வந்ததா, இல்லையா என்று விசாரித்திருந்திருப்பாள். புறப்படுவதற்கான ஏற்பாடுகள் செய்ய வேண்டியிருந்ததால், இந்தக் கேள்வியை இன்னொரு சமயம் சாவகாசமாகக் கேட்டுக் கொள்ளலாம் என்று ஒத்திப் போட்டு விட்டாள்.

பிரயாணத்துக்கு வேண்டிய பொருள்களை அவள் ஒன்றியாகவே எடுத்து வைத்துக் கொண்டாள். அந்த நாட்களில் அவர்கள் எளிய வாழ்வு வாழ்ந்து வந்ததால் வீட்டில் அநாவசியமான பொருள்களை அதிகமாக வைத்துக் கொள்ளவில்லை. அதோடு விஜயலக்ஷ்மியும் வீட்டுச் சாமான்களை யெல்லாம் தன் வீட்டிலேயே போட்டுப் பூட்டிப் போகு

மாறு சொல்லியிருந்ததால், தனக்கு மிக மிகத் தேவை யென்று தோன்றிய பொருள்களை மட்டும் ஒரு சிறிய பெட்டியில் எடுத்து வைத்துக் கொண்டாள். மற்றப் பொருள்களையெல்லாம் அழகாகப் பங்கிடு செய்து விஜயலக்ஷ்மியின் வீட்டில் கொண்டு வைத்தாள்.

ராதா பெட்டியைத் தன் தலையிலேயே தூக்கி வந்து விடுவதாகச் சொன்னான்.

"எதற்குத் தூக்கிக் கொண்டு போக வேண்டும்? வேண்டாம், வேண்டாம். சொல்வதைக் கேள், ஏதாவது ஒரு வண்டி வைத்துக் கொண்டு போனால் போயிற்று!" என்று ஆட்சேபித்தாள் கோகிலா.

"நன்றாகச் சொன்னீர்கள்! இதற்கு ஒரு வண்டி வைத்துக் கொண்டு போக வேண்டுமா? இதைவிடப் பாரமான எத்தனையோ பொருள்களை நாங்கள் வயல் வரப்பு வழியே தூக்கிக் கொண்டு போயிருக்கிறோம். இந்தச் சின்னப் பெட்டி எங்களுக்கு எம்மாத்திரம்? வண்டியும் வேண்டாம், கிண்டியும் வேண்டாம்! நான் தூக்கி வந்து விடுகிறேன்!" என்று தீர்மானமாக மறுத்துவிட்டான் ராதா.

பெட்டியைத் தவிர மற்றப் பொருள்களை வத்ஸராஜ் கையில் எடுத்துக் கொண்டான். இரண்டு குழந்தைகளுக்கும் பிரயாணம் புறப்படுவதில் பரம சந்தோஷம். மகிழ்ச்சி மிதப்பில் தலைகால் தெரியாமல் உள்ளுக்கும் வாசலுக்குமாக ஓடிக் கொண்டிருந்தனர். பெட்டி-மூட்டைகளை எடுத்துக் கொண்டு பெரியவர்கள் புறப்பட்டதுதான் தாமதம்; ஒரே ஓட்டத்தில் வாசலில் போய் நின்றனர்.

வீட்டைச் சாத்திக் கொண்டு எல்லோரும் கீழே இறங்கினார்கள். பூட்டிக் கொண்டு வருவதற்காகக் கோகிலா மட்டும் சற்றுப் பின் தங்கினாள். பூட்டிச் சாவியை எடுத்துக் கொண்டு புறப்பட்ட அவளுக்குக் கால்கள் கனத்தன. அடி எடுத்து வைக்க அவளுக்குத் தோன்றவில்லை. அப்படியே பிரமை பிடித்தவள் போல் அசையாமல் நின்றாள். ஜகதீஷ் இல்லையே என்ற எண்ணம் ஏக்கமாகப் பரிணமித்து அவள் மனத்தை நிறைத்தது. ஜகதீஷ் அவளோடு இருந்த வரை அவள் தன்னை அபலை என்றே எண்ணியதில்லை. ஆனால் அன்று தான், அபலை என்ற எண்ணம் அவள் மனத்தைச் சுமையாக அழுத்தியது. எல்லோருடனும் சிரித்துச் சிரித்துப் பேசி இன்புற்றே பழகிய கோகிலாவுக்கு அது புதிய அநுபவம். அவளால் தனக்கு ஏற்பட்டு விட்ட அந்தத் துயரத்தைத் தாள முடியவில்லை. அப்படியே செய்வதறியாமல் சாத்தின கதவில் தலையை முட்டுக் கொடுத்துக் கொண்டு நின்று விட்டாள். அடுத்த கணம் உள்ளத்தை உடைத்துக் கொண்டு அழுகை பீறிட்டுக் கிளம்பியது. அவள் மனம் திறந்து விம்மி விம்மி அழ ஆரம்பித்து விட்டாள்.

அவளுடைய அந்த அழுகையில் கல்லைக் கரைக்க வைக்கும் சக்தி இருந்ததா? அல்லது ஜடப்பொருளை ஜங்கமப் பொருளாக மாற்றும் வல்லமை இருந்ததா? சாத்திய



கதவு திறந்து கொண்டு விட்டதாகத் தோன்றியது. இதென்ன மாயமா, மந்திரமா? இல்லை. பக்கத்துப் பகுதியில் உள்ள கதவு தான் திறந்து கொண்டது. சிலை தடுமாறி நின்ற அவள் மனம் பூட்டிய கதவு திறந்து கொண்டு விட்டதாக வெறும் பிரமையில் ஆழ்ந்ததே தவிர, அத்தகைய அதிசயம் ஒன்றும் நிகழ்ந்து விடவில்லை.

விஜயலக்ஷ்மிதான் தன் பகுதியில் உள்ள கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தாள். அழுது கொண்டு நிற்கும் கோகிலாவைக் கண்டதும் அருகில் சென்று அவள் தோள்பட்டையில் கை வைத்து அழாதே என்று ஆறுதல் சொன்னாள்.

கோகிலாவின் விசிப்புக் கொஞ்சம் குறைந்தது. "கோகிலா! நீ என் உடன் பிறந்த சகோதரி போல. நான் ஒன்று சொன்னால் கேட்பாயா?" என்று அன்புடன் கேட்டாள் விஜயலக்ஷ்மி.

"என்ன? சொல்லு!" என்றாள் கோகிலா.

"முதலில் கேட்பதாக நீ ஒப்புக் கொள். அப்புறம் நான் சொல்கிறேன்!" என்றாள் விஜயலக்ஷ்மி.

"நீ என்ன சொல்லப் போகிறாய் என்பது தெரியாமல் நான் முதலில் எப்படி ஒப்புக் கொள்ள முடியும்?"

"என்மேல் உனக்கு நம்பிக்கை இல்லை. அப்படித்தானே?" என்று கேட்ட விஜயலக்ஷ்மி வருத்தத்துடன் முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டாள்.

"அடாடா! கோபித்துக் கொண்டு விட்டாயே! நீ என்ன சொல்கிறாய், சொல்லு!"

"நான் சொல்வதைக்கேட்கிறாயா? முதலில் சொல்லு. அப்புறம் நான் சொல்கிறேன்!" என்றாள் விஜயலக்ஷ்மி. (தொடரும்)



# கடிகாரப் பரிசு

தம்பி

சங்கர் தன் முதலாளியுடன் பேசிக் கொண்டிருந்தான். அவர் சொல்லி யிருந்த வேலைகளை யெல்லாம் செய்து விட்டதை விவரித்தான். பைல்களில் கையெழுத்து வாங்கினான்.

முதலாளி ரொம்ப நேரமாகத் தன்னையே உற்றுப் பார்ப்பதாகச் சங்கருக்குத் தோன்றிற்று. ஆனால் ஏன் என்று புரியவில்லை. அவன் தன் காரியம் ஆனவுடன் முதலாளி அறையை விட்டுச் செல்ல முயன்றான். வாயிற்படி தாண்டப்போன சமயம் "சங்கர்" என்று கூப்பிட்டார் முதலாளி.

அவன் அருகில் வந்ததும், "சங்கர், உன்னிடம் கைக்கடிகாரம் இருக்கிறதா!" என்று கேட்டார்.

"இல்லையே, ஸார்!" என்றான் சங்கர்.

முதலாளி புன்னகையுடன் "சரி, போ!" என்று சொல்லி விட்டார்.

மறுபடி வாயிற்படியைத் தாண்டும் போது சங்கருக்குப் பளிச்சென்று ஓர் ஊகம் உதித்தது. "நிஜமாய் நடக்குமா!" என்று எண்ணினான்.

சங்கருக்குப் போன வாரம்தான் கல்யாண மாயிற்று. ஆபீஸ் நண்பர்கள் அந்த வைபவத்தின் போது அவனுக்கு ஒரு வெள்ளித் தட்டு பரிசளித்தார்கள். அது சுமார் நூறு ரூபாய் பெறும். தன் நண்பர்கள் இவ்வளவு தூரம் தன் விஷயத்தில் அக்கறை காட்டியதற்குச் சங்கர் மகிழ்ந்தான். ஆனால் அதே சமயம், ராமமூர்த்தி சொன்ன ஒரு விஷயத்தைக் கேட்டதும் அவன் கொஞ்சம் அதிருப்தி அடைந்து விட்டான்.

"எல்லாரும் உனக்கு ஒரு கைக்கடிகாரம் தர வேண்டும் என்றார்கள். முதலாளிகூட அப்படித்தான் சொன்னார். ஆனால் மாமனார் வீட்டில் உனக்குக் கடிகாரம் கிடைக்கும் என்று நான் சொல்லி விட்டேன். அதனால்தான் தட்டு வாங்கினோம்" என்றான் மூர்த்தி.

சங்கருக்குக் கடிகாரம் வாங்கிக் கொள்ள வேண்டும் என்று சின்ன வயதிலிருந்தே ஆசை. கல்யாணத்தின்போது அவன் அதை எதிர்பார்த்தான். ஆனால் மாமனாரைக் கேட்கவில்லை; அவரும் கடிகாரம் வாங்கித் தரவில்லை. ஆதலால் ஏமாற்றமடைந்தான். அடடா! ஆபீஸ் நண்பர்கள் தன் ஆசையை நிறைவேற்றும் சமயத்தில் இந்த மூர்த்தி போய்க் காரியத்தைக் கெடுத்து விட்டானே என்று சங்கருக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது.

நல்ல வேளையாக அவன் ஆத்திரம் முதலாளியின் வார்த்தையால் அன்றே தணிந்தது. முதலாளி தன்னைப் பக்குவமாய்க் கேள்வி கேட்டதற்கும் புன்னகை புரிந்ததற்கும் அவனுக்குப் பொருள் விளங்கி விட்டது.

சங்கருக்குக் கொஞ்ச நஞ்சம் இருந்த சந்தேகமும் டெலிபோன் குமாஸ்தா சொன்ன ஒரு வார்த்தையால் மறைந்தே போய் விட்டது. "எத்தனை தடவை தான் கடிகாரக் கம்பெனியைக் கூப்பிடுவார் இந்த முதலாளி!" என்று அலுத்துக் கொண்டே அவன் டெலிபோன் டயலைத் திருப்பினான். அதைப் பார்த்தபடி அந்தப் பக்கம் சென்ற சங்கர் தனக்குள் சிரித்துக் கொண்டான். "பாவம், டெலிபோன் குமாஸ்தாவுக்கு என்ன தெரியும்! தனக்குப் பரிசளிக்க ஒரு கடிகாரம் வாங்குவதற்காக விசாரிக்கிறார் முதலாளி" என்பதை அவன் புரிந்து கொண்டான்.

அந்த வாரம் முழுதும் சங்கர் ஆபீஸில் ஓடிஓடி உழைத்தான். அவ்வளவு கடினமாக அவன் அதற்கு முன் உழைத்ததே கிடையாது. ஒரு நாள் சங்கர் ஏதோ காரியமாக முதலாளியைப் பார்க்கப் போனான். அறைக்குள் அக்கவுண்டன்ட் பாஷ்யம் பேசிக் கொண்டிருந்தார்.

அப்போது முதலாளி, "பாஷ்யம்" என்று கூப்பிட்டு, "உங்களிடம் கடிகாரம் இருக்கிறதா! மணி என்ன!" என்று கேட்டார்.

"இரண்டு நாற்பத்தெட்டு" என்றார் பாஷ்யம்.

"தாங்க்ஸ். என் கடிகாரத்தை ரிப்பேருக்குக் கொடுத்திருக்கிறேன். ஒரு வாரமாயிற்று. அது இன்னும் வரவில்லை" என்று சொல்லி, டெலிபோனை எடுத்து, "ஆப்பரேட்டர், கடிகாரக் கடையைக் கூப்பிடு" என்றார்.

சங்கர் மயங்கிப் பொத்தென்று கீழே விழாமல் சமாளித்துக் கொண்டான்!

---

## யார் சமைத்தது?



"என்ன இது! இன்றைக்கு நீ சமைத்த மாதிரியே இல்லையே?"

"ஏன் நன்றாக இல்லையா?"

"உம். ரொம்ப நன்றாக இருக்கிறது. அதனால்தான் கேட்டேன்."

# ஆரோக்கிய வாழ்வு

சீதாலக்ஷ்மி குமாரசாமி

## 8. மற்ற வைடமின்கள்

**வை**டமின் ஏ, பி, ஸி, டி. தவிர வரிசையாய் மற்ற வைடமின்கள் எத்தனையோ இருக்கின்றன. அவைகளை இன்னும் சரிவரக் கண்டு பிடிக்கவில்லை. சில இன்னும் ஆராய்ச்சிகளிலேயே இருக்கின்றன. சிலவற்றின் குணங்கள் மட்டும் இலேசாகத் தெரிகின்றனவாம்.

வைடமின் ஈ மலட்டுத் தன்மையை நீக்குமாம். இது கீரைகளிலும், பால், முட்டை, தானியங்கள், பருப்பு வகைகளிலும் இருக்கிறது. முக்கியமாய், கோதுமையில் இருப்பதாகச் சொல்லுகின்றனர். ஆனால் அரிசி சாப்பிடுவோரிடையே ஜன சங்கியை ஒன்றும் குறைந்ததாகத் தெரியவில்லை.

வைடமின் ஜி. கண்ணில் பூ விழுவதைத் தடுக்கக் கூடியது. தோலில் வெடிப்புகள் ஏற்படாமல் இருக்கவும் செய்கிறது. பால், முட்டை, காய்கறிகள், வாழைப் பழம், ஆரஞ்சுப் பழம், அத்திப் பழம், பியர்ஸ் முதலியவைகளில் இது இருக்கிறது.

மற்றும் எச். ஐ. ஜெ. கே. எல். எம். யூ. டபிள்யூ வைடமின்களையும் கண்டிருக்கிறார்கள். ஆனால் அவைகளைப் பற்றி யெல்லாம் இன்னமும் விரிவாக வெளிவரக் காணோம்.

மேற்படி உணவின் உண்மைகளி லிருந்தே நம் உணவை அமைத்துக் கொள்ள முடியும்.

இதுவரை உணவைப் பற்றிச் சொல்லி வந்ததி லிருந்து அநேக நோய்கள், கோளாறுகளுக்கு உணவே காரணமென்று தெரிய வருகிறது. எந்தக் கோளாறு எந்த உணவுச் சத்தினால் குறைவு ஏற்படுகிறதென்பதைக் கண்டு அந்த உணவுச் சத்தை நாம் உணவில் உபயோகித்தால் அந்தக் குறைகள் மறையும் என்று உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெரிகிறது. அப்படி யிருக்க, மக்கள் உணவுச் சீர்திருத்தம் செய்து கொண்டாலே ஆரோக்கியமாய் இருக்கலாமே! நோய்கள் வந்தாலும் உணவுச் சீர்திருத்தத்தால் தீர்த்துக் கொள்ளலாமே! 'நீங்கள் ஆசனங்களைச் செய்தால் நோய் இல்லாமல் வாழலாம் என்கிறீர்கள். இது வரை சொல்லி வந்ததில் உணவினாலேயே ஆரோக்கியமாய் இருக்கலாமென்று தெரியும் போது ஆசனம் செய்து உடலைக் கஷ்டப்படுத்திக் கொள்வானேன்!' என்று கேட்கலாம்.

ஆம்! உணவால் உடலைப் பேணலாம். ஆரோக்கியமாக வைத்துக் கொள்ள முடியும். ஆனால் உணவுடன்கூட உழைப்பும் அவசியமாகிறது. இரண்டும் இரண்டு கண்களைப் போல. சாப்பிட்ட உணவின் சத்தை உடல் கிரகித்து நீண்ட நாள் ஆரோக்கியமாய் இருக்க வேண்டுமானால், உடல் அவயவங்களுக்கு உழைப்பு அவசியம். ஆனால் எல்லோருக்கும் உடல் அவயவங்களுக்கெல்லாம் வேலை கொடுக்க முடிவதில்லை. சிலர் சில அவயவங்களை உபயோகித்து வேலை செய்ய வேண்டி யிருக்கிறது. மற்ற அவயவங்களுக்கு வேலை எதுவுமில்லாமல் இருக்கிறது. அப்படி வேலை செய்யாத அவயவங்களுக்கு வேலை செய்விப்பதற்காகத் தான் தேகப் பயிற்சி ஏற்பட்டது. தேகப் பயிற்சிகளில் பல உண்டு. எல்லாமுமே நல்லது தான். அவரவர்களுக்கு இஷ்டமானவற்றைச் செய்யலாம். ஆனால் மற்றெல்லா தேகப்பயிற்சிகளைவிட யோக ஆசனங்கள் மிக உயர்ந்தது, சிறந்தது, உன்னதமானது. அவைகளைச் செய்யும் போது உடல் அவயவங்கள் மட்டுமல்ல, உள் இருக்கும் இரஸ கோளங்களுக்கும் பயிற்சி ஏற்படுகிறது.

எனவே உணவால் உடலுக்கு வேண்டிய சத்தை அடைய ஆசனத்தின் தேக உழைப்பால் அற்புதக்கோளங்கள் ஆரோக்கியமடைந்து அதனால் என்றும் ஆரோக்கியத்தைப் பாதுகாக்க முடிகிறது.

தவிர, பல நோய்களை உணவின் மூலமே சீர்திருத்தம் செய்ய முடியும். ஆனால் அது நிரந்தர சீர்திருத்தம் என்று சொல்ல முடியாது. மருந்துகளும் இன்று அந்த வேலைகளைத்தான் செய்கின்றன. அநேக மருந்துகள் இந்த உணவு வகைகளின் சத்துக்களை அதிக பாகம் கொண்டதாய் இருக்கும். சில முழுக்க முழுக்க, உணவு வகைச் சத்துக்களே இருக்கும். அதனால் சில நோய்கள், குறைகள், உபாதைகள் என்னவோ தீருகின்றன. சிலருக்கு அவைகளுடன் கூட தூண்டுவிக்கும், ஊக்குவிக்கும் ஆல்கஹால் கலந்து கொடுத்தால்தான் வேலை செய்யும். ஆல்கஹால் போன்ற மருந்து உடலைத் தூண்டுவிக்கக் கூடியது. ஆல்கஹால் உடலில் சோர்ந்த, நோய்வாய்ப்பட்ட இடங்களைத் தூண்டிவிட அத்துடன் இருக்கும் உணவுச் சத்துக்கள் அங்கு வேலை செய்கின்றன. எனவே அநேக மருந்துகளில் தூண்டுகோலாக ஏதாவது ஒன்று இருக்க வேண்டி யிருக்கிறது.

அப்படித் தூண்டி விட்டுக் கொண்டு வேலை செய்யும் வரை உடல் குணமாய்த்தான் தோன்றும். அதை நிறுத்தினதும் பழைய நிலைக்கே வந்து விடும். ஒரு சில, பூரண குணமாகவும் செய்யும். எனவே, தூண்டி விடும் மருந்து நின்று வேலை செய்யாது என்று ஏற்படுகின்றது. ஆசனங்களையும் செய்து கொண்டு உணவுச் சீர்திருத்தம் செய்து வந்தால், இந்தத் தூண்டி விடும் மருந்தின் துணையின்றியே வாழலாம். ஆசனங்கள் செய்யும் போது இயற்கையை ஒட்டி நோய்ப்பட்ட அவயவங்கள், இடங்கள் முதலியவற்றுக்கு இரத்த ஓட்டம் தானாகவே கிடைக்கிறது. உணவின் மூலமாய் இரத்தத்துடன் மேற்படி சத்துக்களும் சேர்ந்து முன் உள்ள கோளாறுகள் நீங்கிப் புத்துயிர் பெறுகின்றன.

மற்றொரு பெரிய மாறுதலும் ஆசனங்களால் ஏற்படுகின்றது. அதாவது தூண்டிவிடும் மருந்து உடலை க்ஷீணப்படுத்தி விடும். நோய் கொண்ட அவயவங்கள் மறுபடி அதன் உதவி யில்லாமல் வேலை செய்யாது. ஆனால் ஆசனங்களின் தூண்டிவிடும் தன்மை அத்தன்மையதல்ல. நோய் உள்ள பாகத்துக்கு இயற்கையாய் இரத்தம் பாய்ச்சப்பட்டு அதனை இலேசாக மறுபடியும் பழைய ஆரோக்கிய நிலைக்குக் கொண்டு வரச் செய்கிறது. ஆனால் ஒன்று, மருந்துகளினால் உடனே மாற்றத்தைக் கண்டாற்போல் ஆசனத்தினால் உடனே மாற்றம் காண முடியாது. ஆனால் நிரந்தர பலன் என்னமோ உண்டு. இயற்கை சிறிது சாவகாசமாய்த்தான் வேலை செய்யும்.



''என்னைப்பற்றிப் பொய்யெல்லாம் சொல்லிக்கொண்டு திரிகிறாராமே! பார், அவரை...''

''என்னய்யா...உம்மைப் பற்றிப் பொய்யெல்லாம் சொல்வதற்கே இவ்வளவு கோபித்துக் கொள்கிறீரே? நிஜத்தைச் சொன்னால் என்ன பண்ணுவீரோ?''

ஆனால் பல அற்புத மருந்துகள், மற்றும் அநேக மருந்துகளெல்லாம் பல கொடிய விஷ மருந்துகளாகும். அவைகளைப் பற்றி இங்கு பிரச்னையே எழவில்லை. உணவு சத்துக்கள் கொண்ட மருந்துகளைப் பற்றித்தான் இங்கு எடுத்துக் கொள்ளப்பட்டது. உணவு சத்துக்கள் இம்மாதிரி பிரித்தறிந்தது பெரும் நல்ல சாதனையே ஆகும். ஆபத்துக் காலங்களில் அச்சத்துக்கள் உபயோகிக்கச் சாலச்சிறந்ததே ஆகும். ஆனால் சாதாரண நம் தினசரி வாழ்க்கையில் சதா காலமும் சத்து மருந்துகளையே சாப்பிடுவது போற்றத் தக்கது அல்ல. உணவின் மூலமே அடையும் வழிதான் சிறந்தது. இது பல வைத்தியர்களும் அறிவாளிகளும் ஒப்புக்கொண்ட விஷயம்.

சிலர் என்னதான் பல வகை சத்து, மாத்திரைகளை வருடக் கணக்கில் டஜன் கணக்கான புட்டிகளைக் காலி செய்தாலும், பழைய குருடி கணக்காகவே இருப்பார்கள். மீண்டும் மீண்டும் வெவ்வேறு வித மாத்திரைகளையே சாப்பிடுவார்கள். சாப்பிட்டால் பிடிக்கவில்லை யென்று அச்சத்துக்களை ஊசி மூலம் எடுத்துக் கொள்வார்கள். அதற்கும் போதிய பலனை அடைய மாட்டார்கள். காரணம் உள் அவயவங்கள், சோம்பி வேலை செய்யாமல் சண்டித்தனம் பண்ணும்போது சத்து மருந்துகள் என்ன செய்யும்? அவர்கள் ஆசனங்களையும் கூடச் செய்வார்களானால் ஆச்சரியப்படும் படியாகக் குணத்தை அடைவார்கள். பின் மருந்துகளினால்தான் குணம் அடைந்தேன் என்று சொல்லிக் கொண்டாலும் பரவாயில்லை. எப்படியும் வேண்டுவது குணந்தானே! இம்மாதிரி எத்தனையோ நடந்திருக்கின்றன.

இதுவரை சொல்லி வந்த உணவு வகைகளில் காய்கறி வகைகளே பிரதானமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. மாமிச வகைகளுக்கு அவ்வளவு பிராதான்யம் கொடுக்கப்படவில்லையென்று சிலர் குறையாக நினைக்கலாம். இதற்கு நான் பொறுப்பல்ல. உணவு ஆராய்ச்சி செய்தவர்கள் காய்கறி, கீரை, தானியங்கள், கொட்டை பருப்புகள், பால், வெண்ணெய், முட்டை போன்றவைகளையே எல்லாச் சத்து வகைகளிலும் பிரதானமாகச் சொல்லியிருக்கிறார்கள். அதனால் மாமிசம் சாப்பிடுகிறவர்கள் மட்டம், மற்றவர்கள் உயர்ந்தவர்கள் என்று அர்த்தமல்ல. அப்படி யாராவது நினைத்தால் அதற்காக நான் வருந்துகிறேன். உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்ற மனப்பான்மையே கூடாது என்பது என் கொள்கை. அவைகளைச் சாப்பிடுகிறவர்கள் தாராளமாய்ச் சாப்பிடட்டும். ஒரு தடையும் கிடையாது.

ஆனால் மனிதக் குடல் மரக்கறிகளைச் சாப்பிடத்தான் லாயக்கானது, ஊன் சாப்பிடத் தகுந்தது அல்ல என்பது உடல் ஆராய்ச்சிக்காரர்களின் முடிவு. தவிர, மாமிசம் சாப்பிடுகிறவர்களைவிட மரக்கறி சாப்பிடுகிறவர்களுக்கு நோய்கள் குறைவாய் வருகின்றன என்பது உணவு ஆராய்ச்சி வல்லுநர்களின் முடிவு. ஆனால் செடி கொடி, புல், பூண்டுகளே விளையாத பனிப் பிரதேசத்திலிருக்கும் எஸ்கிமோ போன்ற வகுப்பார்களுக்கு மரக்கறியின் மகாத்மியம் சொல்ல முடியுமா! அவர்கள் மாமிசத்தால்தான் உயிர் வாழுகிறார்கள். கடலில் மீன் பிடிப்பவர்களுக்கு, மீனைச் சாப்பிட வேண்டாமென்று சொல்ல முடியுமா? வேட்டையாடுபவனுக்கு உபதேசம் நடக்குமா! ஆதி முதல் பல பிரிவான மனிதக்கூட்டம் பல வகையில் பழக்கப்பட்டு வந்து விட்டது. இப்பொழுது உலகமெல்லாம் ஒன்றாகிக் குறுகிவிட்டது.ஒருவரை ஒருவர் அறியவும், எது நல்லது, எது கெட்டது, எப்படி மனிதன் வாழ வேண்டுமென்று தெரிந்து கொள்ளவும் செய்கிறோம். ஆயிரக்கணக்கான மைல்களுக்கப்பால் நடந்த சம்பவம் சில மணி நேரத்துக்குள் தெரிந்து விடுகிறது. அமெரிக்காவில் கண்டு பிடித்த ஒரு விஞ்ஞானப் புதுமை மற்ற நாட்டவரும் அறிய முடிகிறது.

அவ்வாறு பல அறிஞர்கள், விஞ்ஞானிகள் கண்ட முடிவைத்தான் நான் சொல்லுகிறேனே தவிர, நானே ஒவ்வொன்றையும் ஆராய்ச்சி பண்ணவில்லை. பண்ணுவது சாத்தியமுமல்ல; அவசியமுமில்லை.

இன்று மாமிசமே பிரதான உணவாய்ச் சாப்பிடும் அவ்வூர்களிலெல்லாம் மரக்கறி உணவுகளைப் பற்றி மிக விசேஷமாய்க் கொண்டாடுகின்றனர். பல சங்கங்கள் இதற்காக ஏற்பட்டுள்ளன. மாமிசம் உட்கொள்ளுவதால் வரும் கெடுதிகளையும் மரக்கறி உணவின் மேன்மைகளையும் அவைகள் தீவிரப் பிரசாரம் செய்கின்றன. மரக்கறிக்கு ஆங்கிலத்தில் 'வெஜிடபிள்' என்று சொல்லுவார்கள். இப்பதம் கிரேக்கப் பதத்திலிருந்து பிறந்ததாகும். 'வெஜிடபிள்' என்றால் சக்தி—ஆண்மை என்று பொருள். எனவே வெஜிடபிள் என்பதன் அர்த்தம் தெரிகிற தல்லவா, சக்தியையும், ஆண்மையையும் அளிக்கவல்லது என்று. மரக்கறி என்றால் வெறுந்தாவரங்களி லிருந்து கிடைப்பது மட்டும் அல்ல. பாலும் உடன் சேர்ந்தால் தான் பூரணமாகும். பாலில் மிருகச் சத்து, மாமிசச் சத்து, ஊன் சத்து நிறைய இருக்கிறது. அதனால் அதைச் சேர்க்காமல் வெறும் மரக்கறிகளினாலேயே வாழ்வது கஷ்டம். வெண்ணெய் சிறந்தது. முட்டையை இஷ்டமானவர்கள் சாப்பிடலாம். சிலர் முட்டையைக் காய்கறிகளுடன் சேர்த்திருக்கின்றனர்.

எதைச் சாப்பாட்டாலும் உழைப்பு அவசியம் இருக்க வேண்டும். அதற்கு யோகாசனங்கள் சிறந்தவை. (தொடரும்)

Printed and Published by T. Sadasivam at the " Kalki " Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras - 10. Editor : Mi. Pa. Somasundaram

# தொண்டையில் கரகரப்பு

இருமல் வருவதன் அறிகுறியாகும். ஜலதோஷம் முற்றினால் கொடுமையான இருமலை விளைவிக்கும். கொடுமையான இருமல் பிராங்கைடிஸ்ஸை விளைவிக்கும். பிராங்கைடிஸோ கொடிய ஈரல் நோயை விளைவிக்கக்கூடும். வாராந்திரங்களாக படுத்த படுக்கையாய் டாக்டர் வைத்தியம் செய்யும்படி நேரிடும். இதனால் உத்தியோகத்திற்குப் போக முடியாமலிருக்க நேரும். இவை யாவும் தொண்டை கரகரப்பிலிருந்து ஆரம்பம். இதை உடனடியாக நிறுத்துவது பெர்டுஸின் டெஷ்னர். இது கக்குவான் இருமல் உட்பட எல்லா இருமல்களையும் உடனே நிறுத்துகிறது. இது யாதொரு அபாயமுமற்றது. இது முழுத்திறனுள்ளது. இதை குழந்தைகள், பெரியோர் மற்றும் வயோதிகர்கள் யாவரும் சாப்பிடவேண்டும்.

**இன்றே**

## பெர்டுஸின்

**"டெஷ்னர்"**

**வாங்குங்கள்**



எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கிறது

இடாபா லிமிடெட், ஷான். லீஷென்ஸ்டீன் ஸ்விஸ் கஸ்டம் அண்ட் இகனாமிக் டெரிடெரி இவர்களின் அனுமதியின் பேரில் இன்பா லிமிடெட். தபால் பெட்டி 1041, பம்பாய்-1, இவர்களால் இந்தியாவில் தயாரிக்கப்பட்டது.

ILY-11-TAM

**REGISTERED No. M. 4392**
*Registered as newspaper in Ceylon*

# இரு சட்டைகளின் கதை

























**ஸன்லைட் சோப்** துணிகளை நீடித்திருக்கச் செய்கிறது.

S. 227-50 TM

இலங்கையில் தயாரித்தது